Tamil Nadu Archaeological Society
C/o. Dept. of Maritime History &
Marine Archaeology
Tamil University
Thanjavur 613 010

2






வடசேரி நடுகல்

AVANAM - Proceedings of the Tamil Nadu Archaeological Society
Volume 2, APRIL 1992.

பதிப்பாசிரியர் குழு

கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.

செ. இராசு, தமிழ்ப் பல்கலைக்கழகம்.

நடன. காசிநாதன், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை.

கொடுமுடி ச. சண்முகன், தமிழ்நாடு அரசு பொதுப்பணித்துறை.

ப. சண்முகம், சென்னைப் பல்கலைக்கழகம்.

எ. சுப்பராயலு, தமிழ்ப் பல்கலைக்கழகம்.

கோ. விசயவேணுகோபால், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

பொறுப்பாசிரியர்

இரா. கலைக்கோவன்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்.

பதிப்பு உதவியாளர்

செல்வி மு. நளினி,
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்.

நிறுவனங்கட்கு நன்றி

இத்தொகுதியில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை முதலிய பல நிறுவனங்களைச் சேர்ந்த ஆய்வாளர், அலுவலர் ஆகியோர் முதன்முறையாக வெளியிட்டிருக்கும் கல்வெட்டுகள், செப்பேடுகள், ஆய்வுக் குறிப்புகள் மீதான பதிப்புரிமை அவ்வந் நிறுவனங்களுக்கே உரியது. இவற்றை ஆவணம் வெளியிட இசைவளித்த நிறுவனத் தார்க்கு நன்றி.

# எண்ணங்களும் எதிர்பார்ப்புகளும்

ஆவணத்தின் இரண்டாம் இதழ் மூன்று திங்கள்கள்காலத் தாழ்வாக வெளிவந்திருக்கிறது. இதற்கான பல காரணங்களுள் முதன்மையானது கண்டுபிடிப்புகளும் கட்டுரைகளும் உரிய நேரத்தில் கிடைக்காமைதான். ஏப்ரல் இறுதி வாரத்தில்தான் இதழைக் கட்டமைப்பு செய்ய முடிந்தது. மூன்று திங்கள்களாக அச்சகப் பணி. இப்போது இதழ் உங்கள் கைகளில். இந்த நேரத்தில் ஓர் அன்பு வேண்டுகோள். அருள்கூர்ந்து கண்டுபிடிப்புகளையும், கட்டுரைகளையும் நாளைக்கு அனுப்பலாம் என்றிராது உடனே அனுப்பி உதவுங்கள். அக்டோபர் இதழைக் காலத்தில் கொணர்வோம்.

அஞ்சல்வழிக் கல்வியாக வரலாறு பயிற்றுவிக்கும் பல்கலைக் கழகமொன்றின் தமிழ்நாட்டுச் சமுதாயப் பண்பாட்டு வரலாறு பற்றிய முதுகலைப் பாடஏடு பிழைகளின் ஊற்றிடமாக வந்துள்ளது. பல்கலைக் கழகமே இப்படிச் செய்யுமானால் நாம் யாரை நோவது? நூற்றுக் கணக்கில் எழுத்துப் பிழைகளும், கணக்கில்லா கருத்துப் பிழைகளுமாய்க் கட்டுரைகள். ஒன்றிரண்டு எடுத்துக்காட்டுகளைப் பாருங்களேன்.

பக்கம் 141இல், ''மாணிக்கவாசகரது மற்றுமொரு நூல் திருத் தொண்டத் தொகையாகும். திருவாரூர் மும்மணிக்கோவை, மற்றும் பொன்வண்ணத்தந்தாதி ஆகிய இரண்டும் இவரது மற்றைய நூல்களாகும்'' என்று எழுதியுள்ளனர். இரண்டு தகவல்களுமே தவறானவை. திருத்தொண்டத்தொகை சுந்தரர் பாடியது. பின்னவை இரண்டும் சேரமான் பெருமாள் இயற்றியது.

பக்கம் 61இல் சங்க கால மகளிர் நிலை என்ற தலைப்பின் கீழ் ''பெண்களின் நடத்தையிலும் குறைபாடுகள் இருந்தன. கணவனை அடக்கியாளும் எண்ணம் கொண்டோரும், சண்டை போடும் பெண்களும், பொறுமையற்ற பெண்களும், நடத்தை கெட்ட பெண்களும் கூட சமூகத்தில் அதிகமாயினர்'' என்று எழுதியிருக்கிறார்கள். தமிழ்த் துறை சார்ந்த தமிழறிஞர்களும், தமிழகத்து மகளிர் அமைப்புகளைச் சேர்ந்த பெண்களும் இதற்கு என்ன மறுமொழி தரவிருக்கின்றனர். ஒரு பல்கலைக் கழக வரலாற்று நூல் சங்கப் பெண்மையை முதுகலை மாணவர்களுக்கு இப்படி அறிமுகப்படுத்துவதை, இது உண்மைதான் என்று பார்த்துக்கொண்டிருக்கப்போகிறார்களா அல்லது எழுதியவர்களுக்கு எது உண்மை என்பதைப் புரியவைக்கப் போகிறார்களா? பொறுத்திருந்து பார்ப்போம்.

இந்த இதழில் அறுபத்து மூன்று புதிய கல்வெட்டுகள் வெளியாகி யுள்ளன. செப்பேடுகள் பற்றிய கட்டுரைகள் நான்கும், ஆய்வுக் கட்டுரைகள் பத்தும் இடம் பெற்றுள்ளன. புதிய பகுதியாக 'அன்புள்ள உங்களுக்கு' தொடங்குகிறது. ஆவணம் பற்றிய மதிப்பீடுகள் இப்பகுதி யில் தொடர்ந்து வெளியிடப்படும்.

அய்யம் தவிர்க பகுதி அனைவர் நலனுக்காகவும் தொடங்கப் பட்டது. என்ன காரணத்தாலோ யாருக்குமே இந்த இதழ் வெளியா கும் வரை அய்யம் எழவில்லை போலிருக்கிறது. ஒரு கேள்வி கூட வர வில்லை. அதனால் சென்ற இதழ் பற்றி வந்துள்ள அய்ய வினாக் களை இப்பகுதியில் பதிப்பித்துள்ளோம். ஆய்வின்போது எத்தனையோ அய்யங்கள் பிறந்து விடை தெரியாமல் தவிக்கும் சூழல்கள் யாருக்கும் நேர்வதுதான். ஏன் அந்த அய்யங்களை ஆவணத்துடன் பகிர்ந்து கொள்ளக்கூடாது? உங்கள் அய்யங்களுக்குரிய தீர்வுகளைத் தகுதி வாய்ந்த அறிஞர்களிடமிருந்து பெற்றுத்தர ஆவணம் காத்துக்கொண் டிருக்கிறது. பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

புதிய கண்டுபிடிப்புகளையும், ஆய்வுக் கட்டுரைகளையும் வழங்கி யுள்ள ஆய்வாளர்களுக்கும், அவற்றைப் பார்வையிட்டு இதழ் தயாரிப் புக்கு வழிகாட்டிய பதிப்பாசிரியர் குழுவினர்க்கும், பதிப்பு உதவியாள ராக இருந்து இவ்விதழின் உருவாக்கத்தில் பெருந்துணை புரிந்த செல்வி மு. நளினி, உதவியாளர் இரா. கண்ணையன் ஆகியோர்க்கும் ஆவணத்தின் நன்றி உரியது. முனைவர் எ. சுப்பராயலு அவர்களின் வழிகாட்டல், இவ்விதழ் அமைப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் பேருதவி யாக இருந்ததை நன்றியோடு குறிப்பிட விழைகின்றேன்.

சிறந்ததோர் ஆய்விதழாக ஆவணத்தை அமைத்திடும் எண்ணம் நிறைவேற உங்கள் ஒவ்வொருவரின் ஒத்துழைப்பும் பெரிதும் தேவை. ஆவணத்தின் வளர்ச்சியும் வாழ்வும் உங்கள் கைகளில்தான் உள்ளது. தொடர்ந்து புதிய செய்திகளை ஆய்வறிஞர்களுக்கு ஆவண வழி தாருங் கள். ஆர்வமுடைய அன்பர்கள் அனைவரையும் ஆவணத்தின் வாழ் நாள் உறுப்பினர்களாக்கி உதவுங்கள்.

அன்புடன்,

**இரா. கலைக்கோவன்.**

## ஆவணத்திற்கு எழுதுவோர்க்கு

ஆவணத்தில் கட்டுரை வெளியிட விழையும் ஆய்வறிஞர்கள் தம் தரவுகளை முழு வெள்ளைத் தாளில் ஐந்தல்லது ஆறு பக்கங்களுக்கு மிகா நிலையில் தட்டச்சு செய்து அனுப்புவது பேருதவியாகும். அடிக் குறிப்புகளை எழுதுமிடத்தில் ஆய்வு நெறிமுறைகளைத் தவறாது பின்பற்றுக.

புதிய கண்டுபிடிப்புகளை அனுப்புவோர் ஏற்கனவே தமிழகத் தொல்லியல் ஆய்வுக்கழகம் அனுப்பியுள்ள சுற்றறிக்கையில் கண்டுள்ள படிவத்தையொட்டி செய்திகளைத் தட்டச்சு செய்து அனுப்ப வேண்டும். கிரந்த எழுத்துக்களை அவற்றுக்கு இணையான ஒலிப்புடைய தமிழ் எழுத்துக்களில் எழுதலாம். வர்க்க எழுத்துக்களை இங்கு வெளியிடப் பட்டுள்ள அமைப்பு முறையை ஒட்டி அந்தந்த கிரந்த எழுத்துக்குரிய தமிழ் ஒலிப்பு எழுத்துக்களுடன் எண் சேர்த்து எழுதலாம். இந்த இதழில் வந்துள்ள புதிய கல்வெட்டுகள் அனைத்திலும் இம் முறையே பின்பற்றப்பட்டுள்ளது. கல்வெட்டுகளைப் படியெடுக்கும்போது சில எழுத்துக்கள் தெளிவில்லாமலும், பொரிந்தும், சிதைந்தும் இருக்கலாம். அப்படிப்பட்ட எழுத்துக்களை அவை வரும் இடம் நோக்கி இன்ன எழுத்துக்களாக இருக்கலாம் என ஊகித்து எடுத்துக்கொள்வதுண்டு. அப்படி ஊகிக்கப்பட்ட எழுத்துகளை பகர அடைப்புக்குள் தருதல் வேண்டும். சில நேரங்களில் கல்வெட்டுகளில் சில எழுத்துக்கள் பொறிக்கப்படாது விடுபட்டுப் போயிருக்கலாம். பொருள் நலம் கருதி, அவ்வெழுத்துக்களை, அவை கல்வெட்டில் இடம் பெறாத போதும், இணைத்துக் கொள்ள நேரிடும். இப்படி இணைக்கப்படும் எழுத்துக் களைப் பகர அடைப்பிட்டு, அடைப்பின் அருகே ஒரு நட்சத்திரக் குறியும் சேர்த்துவிடல் நன்றாகும். இவ்விதழின் முதற்பகுதியில் வெளி யாகி இருக்கும் புதிய கல்வெட்டுகளில் இம்முறைகள் பின்பற்றப்பட் டுள்ளன. கல்வெட்டுகளை அனுப்பும் ஆய்வாளர்கள் இம்முறைகளைப் பின்பற்றுவது நல்லது.

ஒளிப் படங்கள் அனுப்புவோர் அவற்றை பிளாக் செய்து அனுப்பு வது நல்லது. பிளாக் செய்ய வாய்ப்பில்லாத இடங்களில் படங்களை ஆவணத்திற்கு அனுப்பி பிளாக் செய்யும் செலவுகளைத் தாங்கள் ஏற்றுக் கொள்ளலாம்.

மதிப்புரை வேண்டுவோர் தாம் எழுதிய நூலின் படிகள் இரண் டினை ஆவண அலுவலக முகவரிக்கு அனுப்பி வைக்கலாம். நூலின் உள்ளீட்டுக்கேற்பத் தகுந்த அறிஞர்களைக் கொண்டு மதிப்புரை எழுதப்

படும். ஆவணத்தின் வாழ்நாள் உறுப்பினர்கள் எழுதிய நூல்களுக்கு முன்னுரிமை தரப்படும்.

வரலாறு, தொல்லியல், கோயிற்கலைகள், கல்வெட்டியல், இலக்கியம் தொடர்பான கருத்தரங்குகள், மாநாடுகள் நடத்துவோர் ஆவணத்திற்குத் தகவல் தந்தால் அவை பற்றிய செய்திக் குறிப்புகளையும், ஆவணத்தில் வெளியிடலாம்.

கல்வெட்டு, தொல்லியல், வரலாறு, இலக்கியம் போன்ற துறைகளில் ஆய்வாளர்களுக்கும் ஆர்வலர்களுக்கும் ஏற்படும் நியாயமான ஐய்யங்களைத் தெளிவு செய்யும் கடமை தனக்கிருப்பதாக ஆவணம் கருதுகிறது. அய்யங்களை ஆய்வர்கள் ஆவணத்திற்குத் தெளிவுபட எழுதினால், அவ்வத் துறை சார்ந்த அறிஞர் பெருமக்களைக் கேட்டு ஆவணம் தெளிவுரைகளை வெளியிடும். கல்வெட்டுகளில் ஏற்படும் அய்யங்களை எழுதும்போது குறிப்பிட்ட கல்வெட்டின் முழுப் பகுதியையும் அனுப்பவேண்டும். சிற்பங்கள், கட்டட அமைப்புகள், பிற தொல்லியல் சான்றுகள் குறித்த அய்யமென்றால், ஒளிப்படங்கள், அய்யத்திற்குரிய பொருள் பற்றிய தெளிவான விளக்கம், வரைபடம் ஆகியவற்றை இணைத்து அனுப்பலாம்.

---

## சங்க காலத்தில் இசை நூல்

அகநானூற்றின் குறிஞ்சிப் பாடலொன்று சங்க காலத்தில் இருந்த இசை நூலொன்றையும், அந்த நூலின் வரையறைப்படி இயற்றப்பட்ட பண்களைப் பற்றியும், பாண் மகன் ஒருவன், புதுமையாகப் புனைந்த திறம் பற்றியும் பேசுகிறது.

''நல்லிசை நிறுத்த நயவரு பனுவல்
தொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணின் உள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும்'' (அகம் 352)

'பழம் புகழை நிலை பெறச் செய்த புகழ் சான்ற பாண் மகன், நல்ல இசைகளை வரையறை செய்த இனிமை மிக்க நூலின் எண்ணின் முறைப்படி இயற்றிய பண்ணைக் காட்டிலும், அவன் புதுமையாக இயற்றிய திறத்தைக் காட்டினும், தலைமகன் இனியவன்' என்பது உரையாசிரியர் விளக்கம். சிலம்பு நாட்டிய நன்னூலைக் காட்டுகிறது. மேகலை ஓவியச் செந்நூலைப் பற்றிப் பேசுகிறது. அகமோ இசை நூலைத் தருகிறது. சங்கத் தமிழரின் கலை வளந்தான் எத்தனைச் சிறப்புக்குரியது.

— இரா. லலிதாம்பாள், இரா. கலைக்கோவன்

# கிரந்த எழுத்துக்களும் அவற்றிற்கு நிகரான ஒலிபெயர்ப்புடைய தமிழ் எழுத்துக்களும்

## உயிர் எழுத்துக்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| கிரந்தம்: | 𑌅 | 𑌆 | 𑌇 | 𑌈 |
| தமிழ்: | அ | ஆ | இ | ஈ |
| கிரந்தம்: | 𑌉 | 𑌊 | 𑌋 | 𑍠 |
| தமிழ்: | உ | ஊ | ரு° | ரூ° |
| கிரந்தம்: | 𑌌 | 𑍡 | 𑌏 | 𑌐 |
| தமிழ்: | ளு° | ளூ° | ஏ | ஐ |
| கிரந்தம்: | 𑌓 | 𑌔 | 𑌅𑌂 | 𑌅𑌃 |
| தமிழ்: | ஓ | ஔ | ° | : |

# உயிர் மெய் எழுத்துக்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கிரந்தம்: | 𑌕 | 𑌖 | 𑌗 | 𑌘 | 𑌙 |
| தமிழ்: | க | க$_2$ | க$_3$ | க$_4$ | ங |
| கிரந்தம்: | 𑌚 | 𑌛 | 𑌜 | 𑌝 | 𑌞 |
| தமிழ்: | ச | ச$_2$ | ச$_3$(ஜ) | ச$_4$ | ஞ |
| கிரந்தம்: | 𑌟 | 𑌠 | 𑌡 | 𑌢 | 𑌣 |
| தமிழ்: | ட | ட$_2$ | ட$_3$ | ட$_4$ | ண |
| கிரந்தம்: | 𑌤 | 𑌥 | 𑌦 | 𑌧 | 𑌨 |
| தமிழ்: | த | த$_2$ | த$_3$ | த$_4$ | ந |
| கிரந்தம்: | 𑌪 | 𑌫 | 𑌬 | 𑌭 | 𑌮 |
| தமிழ்: | ப | ப$_2$ | ப$_3$ | ப$_4$ | ம |
| கிரந்தம்: | 𑌯 | 𑌰 | 𑌲 | 𑌵 | 𑌶 |
| தமிழ்: | ய | ர | ல | வ | ச° |
| கிரந்தம்: | 𑌷 | 𑌸 | 𑌹 | 𑌳 | 𑌕𑍍𑌷 |
| தமிழ்: | ஷ | ஸ | ஹ | ள | க்ஷ |

2, 3, 4 என்பன வர்க்க எழுத்துக்களை ஒலி பெயர்க்கக் குறிக்கப்பட்டுள்ளன. கிரந்தத்தில் கூட்டெழுத்துக்களாக வருபவற்றைப் பிரித்துத் தனித்தனி எழுத்துக்களாகக் கொடுக்கலாம்.

## பொருளடக்கம்

### I புதிய கல்வெட்டுகள்

## II செப்பேடுகள்



## III கட்டுரைகள்



## IV. பொதுப் பகுதி



---

# 1. திருமயம் வட்டக் கல்வெட்டுகள்

கரு. இராசேந்திரன்

I. திருமயம் வட்டம் பொன்னனூர் காமாட்சி ஊரணியின் மேற்கில் உள்ள சி. கிழவன் களத்திற்கு முன்பாக நடப்பட்டுள்ள கல்வெட்டு. சந்திரசேகரர் உருவத்தைக் கோயிலில் வைத்ததைப் பற்றியது.
காலம்: முதல் குலோத்துங்கன், கி. பி. 1091.

1 ஸ்வஸ்திஸ்ரீ
2 சக்கரவ
3 திகள் ஸ்ரீ
4 கொலோத்
5 துங்கசோழ
6 தேவற்கு யாண்
7 டு 21 ஆ
8 வது காநா
9 டாந விருத
10 ராச பயங்
11 கர வளநாட்
12 டுக் கா[நா]ட்டு
13 ப் பெரு நல்லூ
14 ர் மஹாதேவ
15 ர் திருக்கும
16 ரீச்ᵒவரத்தில்
17 சந்திர சேகர[தே]
18 தவரை எழுந்த
19 ருளுவித்தார்
20 கேரளாந்தகர்

II. பொன்னனூர் பெருமாண்டார் ஊரணிக்கு அருகில் உள்ள மலையி லிருக்கும் சுனைக்கு அருகில் உள்ள கல்வெட்டு.
காலம்: 13 ஆம் நூற்றாண்டின் இறுதி.

1 ஸ்ரீ விக்கிரம பாண்டிய தேவர்க்கு யா[ண்]டு 5வது காந நாட்டு பெரு
2 [ந]ல்லூர் ஊரோம் சுந்தரசோழபுரத்து திருவந்குப்பையாந தேசிமந்தர
3 . . பெருநல்லூ[ர்] வயலில் பெருநலூ வயக்க விலைகொண்டு மனமலையாண்ட நா
4 யநார்க்கு திருப்பணிக்கு உடலாக விட்டேந் தேசிமந்தரயேந் இந்நிலத்தால் வந்த
5 அச்சுவரி கடமை எச்சோறு கூற்றரிசி வெட்டி முட்டாவான் தேவை மற்றும் எற்பேர்
6 [பட்டது] ஊரிலே ஏறட்டு கொண்டு இந்நாயநார்க்கு திருப்படி மாற்றுக்கு[வ]ட
7 . . . அம்பத்து ஏழரை விடவோமாக கல்வெட்டி குடுத்தோம்
8 [இ]ந்த ஊரோம் இப்படிக்கு பாண்டிவேளா எழுத்து விக்கிரமபாண்டி
9 [வே] ளா எழுத்து தருமபட்டந் எழுத்து பொந்த வேளாந்
10 . . . . ளாந் எழுத்து

III. பொன்னனூர் திருக்குமரீசுவரர் கோயில் மேற்சுவர் வெளிப்புறம்.
காலம்: 16 - 17ஆம் நூற்றாண்டு.

1 பராபவ வருஷம் காத்திகை[க]
2 மாதம் கானநாட்டு பெ[ரு]
3 நல்லூர் ருடையார் தி[ருக்]
4 குமரீசுரமுடைய நாய [நா]
5 ர் கோயிலுக்குத் திருவேட்
6 பூருடையான் ஆளுடைய ந
7 ாயனாரான நிரம்பவழகிய
8 நயனார் எழ அருளப் பண்
9 ணினதிருவாதவூர் நாய
10 னார் மாயேசுரர் இரக்கி
11 ஷை உ

IV. பொன்னனூர் காமாட்சி ஊரணியில் மேற்குக் கரையில் உள்ள
சி. கிழவன் களத்தில் சாய்ந்து கிடக்கும் கல்லில்.
காலம்: கி. பி. 1282.

1 கோமாறுவ
2 ன்மரான திரிபுவ
3 ன சக்கரவத்திகள்
4 எம் மண்டல
5 முங் கொண்டரு
6 ளிய குலைசேகர
7 தேவற்கு யாண்
8 டு 14 வது கான
9 னாடான விருதரா
10 ச பயங்கர வளந
11 ாட்டு கான[ா]ட்டுப் பெ[ப
12 ரு] நல்லூர் படை இல்
13 தெரு கண்டிய தேவ
14 நல்லூரில் யிருக்கிற ப
15 டையு . ந் தேவர் ஆசிரி[ய]
16 ம்

V. பொன்னனூர் - அதே களத்தில் நடப்பட்டுள்ள கல்வெட்டு.
காலம்: சுமார் 13ஆம் நூற்றாண்டு.

1 ஸ்வஸ்திஸ்ரீ குலசே
2 சகர தேவற்கு
3 யாண்டு 40 . . .
4 து கானனாட்டுப்
5 பெரு நல்லூர் ெ
6 பாந்நமராவதி
7 நாட்டு வடபற்று
8 பனை ஊர் குள
9 மங்கலத்து ஊ
10 ரவர் ஆசிரியம்

VI. பொன்னனூர் கண்மாயின் கரை, அம்மன் கோயிலுக்குத் தென்
புறத்தில் கண்மாய்க்குள் உள்ள பாறையில்.
காலம்: சுமார் 9ஆம் நூற்றாண்டு.

இக்கல்வெட்டு பாடல் வடிவில் உள்ளது. சிதைந்துள்ளதால் ஓரிரு இடங்களில் தட்டுகிறது.

1 மன்னு [வைவேல்]* மருங்கூர் வாள் வேந்தன் மாப்புரிசை
2 மின்னு [வானாடாண்]* ட மேலூற் கோன் மூவாற னே விறல் வீ
3 ரன் மெய்த்துணை வேளாளைப் போலப் பிற வீருல குய்யப் பின்

VII. பொன்னனூர் திருக்குமரீசுவரர் கோயில் தெற்கு வாயிற்படியில். காலம்: கி. பி. 1227.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோமாற பற்மரான திரிபுவன சக்கரவத்திகள் சோ

2 ணாடு வழங்கியருளிய சுன்தர பாண்டிய தேவற்கு 11 ஆவது திருக்கு

3 மரீச்ᵒவரமுடைய நாயநார் கோயிலில் இவூர் வலங்கை உய்ய கொண்டார்கள் முந்பு செத்தந்

4 மங்கஞுவ. ஆஞுடையாற்கு நாச்சியாரையும் எழுந்த[ரு]ளிவிச்சு அமுது படிக்கு சீகரண வ

5 யக்கல்லும் பரஞு வயக்கல்லும் இலை குழியும் கொண்டு விட்டு மண்டபமும் சோபாநமும் பெருங் கதவு தன்மம்

VIII. திருமயம் வட்டம் மேலப்பனையூர் இறுத்தாண்டிக் கண்மாய் மடையில். காலம்: சுமார் 9ஆம் நூற்றாண்டு.

1 ஸ்ரீ
2 அரங்க
3 ந் பெரி
4 யாந்

IX. மேலப்பனையூர் அம்பலத்தில் கிழக்கு வரிசையில் தென்பக்கத் தூணில். காலம்: 10-11ஆம் நூற்றாண்டு.

1 கம்பன்
2 உத்தம
3 ராமனா
4 ன வல
5 ங்கை
6 யாண்டா
7 ன்

X. மேலப்பனையூர் அம்பலத்தில் கிழக்கு வரிசையில் வடபக்கத் தூணில். காலம்: 10-11ஆம் நூற்றாண்டு.

1 ஸ்ரீ விரையாச்
2 சிலை அஞ்
3 ஞூற்றுவன்

XI. மேலப்பனையூர் குறுத்தாண்டக் கண்மாய் மடையில் உள்ளகல்லில். காலம்: 12 - 13ஆம் நூற்றாண்டு.

1 ஸ்ரீ
2 முனைய
3 ன் தன்
4 னிச்சன்

# 4

## நினைவுத் தூண்கள்

அடுத்து வரும் ஐந்து கல்வெட்டுகளும் தனித்தூண்களில் பொறிக்கப்பட்டுள்ளன. நடுகல் மரபையொட்டி வந்த நினைவுத் தூண்களாக இவைகளைக் கருத வேண்டியுள்ளது.

I. திருமயம் வட்டம் வாளைக்குறிச்சி ஊரின் நடுவில் நடப்பட்டுள்ள தூணில். காலம்: 10 - 11ஆம் நூற்றாண்டு.

1 ஸ்வஸ்திஸ்ரீ
2 நக்கன்
3 செல்வ
4 ந் ஆன அ
5 முகிய சோ
6 ழ மூவேந்த
7 வேளான்

II. திருமயம் வட்டம் வாளைக்குறிச்சி தெற்குக் கண்மாயின் மடைக்கு அருகில் கிடக்கும் தூணில். காலம்: 8 - 9ஆம் நூற்றாண்டு.

1 வாளைக்கு
2 றிச்சி வேளா [சா]
3 [த்த] னுக்கு ப
4 [ர] வ செய்து நா
5 ட்டின கல்லு

III. வாளைக்குறிச்சி ஊரின் நடுவில் சாய்ந்து கிடக்கும் (நாரவேளான் கல்) தூணில். காலம் : 10 - 11ஆம் நூற்றாண்டு.

1 ஸ்ரீ
2 நக்க
3 ந் ஆ
4 ட வ
5 லானா
6 ன கோ
7 னாட்டு வே
8 வளானு
9 க்கு

IV. திருமயம் வட்டம், செவலூர் சிலம்பத் தேவர் புன்செய்க் காட்டில்.

1 ஸ்ரீ
2 நக்க
3 ந் விச்சா
4 திரந்

V. அதே இடத்தில் உள்ள மற்றொரு கல்வெட்டு.

1 ஸ்ரீ
2 நக்கந் து
3 ற்றி சுவர்கத்
4 தான் வாரண
5 வாசி உய்ய
6 க் கொண்டா
7 ன்

# 2. பாண்டி நாட்டில் சில புதிய கல்வெட்டுகள்

வெ. வேதாசலம், சு. இராசகோபால், சொ. சாந்தலிங்கம், செ. போசு.

## 1. பாண்டியர் கால நடுகல்

இராமநாதபுரம் மாவட்டம், கமுதி வட்டம், நீராவிகரிசல்குளம் என்னும் சிற்றூரின் வடக்கே ஒரு கரிசல் காட்டில் கிடக்கும் தனிக்கல். இக்கல்வெட்டு பற்றி தகவல் அளித்தவர் அதே ஊரைச் சேர்ந்த திரு. பொ. பெருமாள். பாண்டி நாட்டில் கிடைக்கும் மிகச்சில வட்டெழுத்து நடுகற்களில் இதுவும் ஒன்று.
காலம்: கி. பி. 10ஆம்நூற்றாண்டு.

இக்கல் சுமார் 3 அடி நீளமும் 2 அடி அகலமும் கொண்டது. கல்லின் இடது ஓரத்தில் வீரன் ஒருவன் வலது கையில் ஓங்கிய வாளுடன் இடது கையில் கேடயம் கொண்டு நிற்கிறான். கால்கள் முன்பின் னாக உள்ளன. கல்லின் வலப்புறம் எழுத்துக்கள் வெட்டப்பட்டுள்ளன. உருவம் பெரிதும் சிதைவுபட்டுள்ளது.

| | | | |
|---|---|---|---|
| 1 | ஸ்வஸ்திஸ்ரீ | 12 | ரும் |
| 2 | அளற்று | 13 | அழி |
| 3 | நாட்டுக் கலி | 14 | யாமல் |
| 4 | செயமங்கல | 15 | பட்டா |
| 5 | த்து [மாமாத்தி] | 16 | ன். |
| 6 | ரன் மகந் திரு | 17 | . . . ஊரால் |
| 7 | விக்கிரமன் | 18 | . . . . ன்னி |
| 8 | இவ்வூர்க் கா | 19 | . . . வ |
| 9 | லி நிரை | 20 | னுக்கு |
| 10 | போகவு | 21 | . . . த |
| 11 | ம் ஊ | 22 | தானம் |

## 2. சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் கல்வெட்டு

இராமநாதபுரம் மாவட்டம், கமுதி வட்டம், நீராவி சிற்றூரில் பெரிய கண்மாயின் உள் வாயில் அமைந்திருக்கும் சுந்தர கணபதி கோயில் என்னும் சிறிய கோயிலின் பின்னே உள்ள தனிக்கல். வட்டெழுத்தில் பொறிக்கப்பட்ட இக்கல்வெட்டு பற்றிய தகவல் அளித்தவர் நீராவி திரு. கோ. நாகராசன். காலம்: கி. பி. 965.

1 ஸ்வஸ்திஶ்ரீ சோழன் த
2 லை கொண்ட கோவீரபா
3 ண்டியர்க்கு யா
4 ண்டு பதினஞ்சு
5 இதனேர் மூன்
6 று இவ்வாண்டு பு
7 [னா] குலமங்கலத்
8 து மூஞ் [சி] ஈசு
9 வரத்துப் பட்டா
10 லகர்க்குப் பனை
11 யூர் கோன் மகன் [உ–]த்த
12 . . . . த்தில் திரு
13 வி . . கு . . . அ
14 டுத்த ஆடு பதின்
15 அஞ்சு இவ்வாடு
16 கொண்டு திங்
17 கள் நாழி உ
18 ரி நெய் அட்
19 டுவேந் ஆனேன்
20 செட் . . . .
21 . . . ய . . . னேன்

3. சமுத்திராபட்டி விரதாவளம் கல்வெட்டு*:

திண்டுக்கல் அண்ணா மாவட்டம், நத்தம் வட்டம், சமுத்திராபட்டி ஊருக்கு வடமேற்கில் உள்ள ஒரு காட்டில் உள்ள தனிக்கல். (இப்போது மதுரை திருமலை நாயக்கர் மகாலில் உள்ளது.)

தென்னாட்டிலும், இலங்கையிலும், தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும் பரந்த அளவில் வாணிகம் செய்து வந்த பெருங்குழுவான அஞ்ஞூற்றுவர் கல்வெட்டுகள் தமிழ்நாட்டில் பல கிடைத்தாலும் 11ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இக்குழுவின் முழு மெய்க்கீர்த்தியோடு கிடைக்கும் முதல் தமிழ்க் கல்வெட்டு இது எனலாம். இப்பெருங்குழுவின் ஒரு பிரிவான அழகிய பாண்டிய பெருநிரவி என்ற குழு கூடிபனியாநாடு என்ற பகுதியை நானாதேசி எறிவீரபட்டணம் என்ற வீரதளமாக மாற்றியது. இவ்வணிகக் குழுவுக்குள்ளாக ஏதோ உட்பூசல் இருந்ததாகத் தெரிகிறது. உட்பூசலில் வெற்றிபெற்ற பிறகு மேற்சொன்ன வீரதளம் அமைக்கப்பட்டதாகத் தெரிகிறது.

பக்கம் - ஒன்று

1 ஸ்வஸ்திஶ்ரீ விக்கிரம சோழபாண்டிய
2 தேவர்க்கு யாண்டு 26ஆவது ஸமஸ்த பு$_4$வ
3 ணாச்$_{\circ}$ரய பஞ்சச$_0$த$_3$சா$_0$ஸன லக்ஷணே லக்ஷ்மீ
4 வக்ஷஸ்தல புவவன பராக்ரம ஶ்ரீ வாஸுதே$_3$வ

---

* இந்தக் கல்வெட்டு 1982இல் மதுரை காமராசர் பல்கலைக்கழக வரலாற்றுத்துறை (எ. சுப்பராயலு, ஆர். வெங்கட்ராமன்), தமிழியல் துறை (கோ. விஜயவேணுகோபால்) ஆசிரியர்களால் கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் கல் புதைந்திருந்ததனால் முழுப்பாடம் இதுவரை வெளியிடப்படவில்லை.

5 கண்டழி மூலபத்திரோற்பவ ஸ்ரீ அய்யபொ
6 ழில்புர பரமேசுவரிக்கு மக்களாகி ஸ்ரீபழ ப
7 ட்டாரகிக்குத் துணைவராகி பதினெட்டுப்பட்டனமும்
8 முப்பத்திரண்டு வேளர்புரமும் அய்ம்ப
9 த்துநான்கு கடிகைத் தாவளமும் தாவளத்
10 திருந்து ஸமையத்தன்மை இனிது [நடாதிருக்கின்]
11 ற செட்டியும் செட்டி புத்திரனும் கவறையு
12 ம் காத்தரிவனும் காமுண்ட ஸுவாமியும்
13 கொற்றக்குடை பத்மை முன்னூற்று
14 வரும் கொங்கவாள் னெழுநூறும்
15 அங்ககாறனும் ஆவணக்காற
16 னும் உலகனும் உள்பகம்பைக் காற்றூ
17 சி தொழில் வாரியறும் செண்டுவது உள்
18 ளிடம் வாட்டின [து]ட்டபெருகி அறம் வ
19 ளரக் கலிமெலிய திசைஅனைத்தும் செவிடு படாம
20 ல் செங்கோலேய் முன்னாக ஸமையதன்மை
21 ம இனிது நடாத்துகின்ற நான்குதிஸைப் ப
22 தினெண்பூமி நானாதேசித் திசையாயிர
23 த்தைந்நூற்றுவரும் பனியா நாட்டுத் தி
24 சையாயிரத்தைஞ்னூற்றுவரும் [நம்] மக்க
25 ள் நாட்டுச் செட்டிகளும் திசை செட்டிகளும் ந
26 ம் மக்கள் பதினெண்பூமி பணிசை மக்கழு
27 ம் உபையம்மாய் இருந்து

பக்கம் - இரண்டு

28 ராஜராஜ பாண்டிநாட்டு ராஜேந்திர சோழவள
29 நாட்டு பனியா நாட்டு . . . .
30 அஞ்னூற்றுவன் புளிகீழ்கூடி . . . . . .
31 அழகிய பாண்டியப் பெருநிரவி திசையாயிரத்
32 தைஞ்நூற்றுவரோ நம்மை வகைசெத
33 பணியாவது வளஞ்சிய பகைமரை ஒறுக்க
34 கலிநாயதான பரகேசரி மூவேந்தவேளா
35 னை [திருமயத்திற்] பட வெற்றறிந்து போந்த . . .
36 . நாட்டு செட்டிகளையும் பணிச மக்களை துடர்ந்த வள
37 ஞ்செய் பகையரைகெட வெறிந்து காத்துக் கடத்திருமை
38 யாலும் வளஞ்செய் பகையரை சாலிய ஆண்டா
39 னையும் கைக்கோளராண்டானையும் [து]வானை
40 அய்யனையும் காத்துவிச்சமையாலும் இவனுக்கு
41 பலமுறைமையில்நால் பலணி செமையிலும்

42 மக்களை எதிரேன்று கொண்டு சோறு பாக்கு இட்டு
43 அந்தரபுகுமைல்க் காத்து கிடத்தினமையாலும் அழ
44 க்கிய பாண்டிய பெருநிரவிக்கு பணியுற்று நிற்ற பணி
45 செ மக்கள் [ளே] நாட்டு செட்டிகளும் [பநியா நாட்டை]
46 நானாதேசி எறிவீரபட்டணம் சேது குடுத்த பரிசா
47 வது பணிந்த வீரபாவடை மேநடைமுந் அதிரநட
48 மேய் கண்டு சோறு ஒருநாள்ளைக்கு குடுப்பதாகவும் இர
49 ண்டேற்றமுடையநாய் .;. .* காசும் உடையநா
50 [ய்] பெறுவதாகவும் ஓரேற்[ற] முடையா . . . *காசும்
51 உடல் அடுத்து வந்த பணிச மகந்றுக்கு மேநடை இரண்டு
52 காசும் [மொக்க] ஒருநாள்ளை சோறு குடுப்பதாகவும் கா
53 ல் நடை . . .* காசும் உடல் . . .* வித்து பணிச மக
54 னுக்கு மேநடை ஒரு காசு குடுப்பதாகவும் மேக்கண்டு சோறும்
55 இப்படி செய்து குடுதோம்

பக்கம் - மூன்று

56 பாண்டிய குல
57 பதிநாட்டு செட்டிய
58 ரும் அந்தரி சு
59 ற்றியான வீரக்குடி
60 கொதுகுல [செ
61 ம] செடியரும்
62 முனைவன் திரு
63 க்குமரன் தே
64 சிஅடைக்கலத்
65 [து] தேசகண்ட
66 நாட்டு செட்டிக
67 ளும் ஜயங்கொ
68 ண்ட சோழபுரத்தில்
69 வெண்ணி வல்
70 ல திருமலான்
71 நாநாதேசிய்
72 தளசெடியா
73 திருமலனாதன் ஆ
74 ன அரம்மடி அஞ்
75 நூற்றுவரும்

பக்கம் - நான்கு

76 . . த்திரநு
77 . . வாணவாசி
78 ஆண்டானும்
79 விரகன் ஆண்
80 டானும் திருவா
81 வி மணிக்கிரமத்
82 தான் கொங்க வா
83 ளையனும் சாணி
84 சுற்றிஆன நாநா
85 தேசி ஆண்டானும்
86 ஆப்பி தேவனாந
87 அய்ய பொழிலா
88 ண்டாறு மதுராந்
89 தக அறங்காடிய
90 யநு சதுரசிகிழ் இவ
91 ண்ண செது [பநி
92 யா] நாட்டை வீரத
93 ளஞ் செய்து குடுத்
94 தோம் இவனை
95 வோம் இவண்ண
96 ஞ் செது வீரதள[த்து]
97 முறைமை யி
98 லழிய விருந்தால்
99 நான் பன்றியில்
100 லொந்றாவதா
101 கவும் நாய்பிணம்
102 மறவற்க அறமல்ல து
103 ணையில்லை இை
104 வ எறிவீரபடை
105 ஆசரியன் எ
106 முத்து

---

*இங்கு ஏதோ பின்ன எண் உள்ளது. தெளிவாக இல்லை.

## 3. சத்திரம் கல்வெட்டு

### கல்வெட்டுப் பயிற்சி நிறுவன மாணவர்கள்

அண்ணா மாவட்டம், நத்தம் வட்டம், சத்திரம் (ஊராளிபட்டி) என்ற ஊரில், நத்தம் - சிங்கம்புணரி சாலையின் ஓரத்தில் உள்ள மண்டபங்களின் முன்னதாக நடப்பட்டுள்ள கற்பலகை.
காலம்: கி. பி. 1781

இந்த மண்டபங்கள் உள்ள சாலை பழனிக்கு தைப் பூசத்திற்கு நடைபயணம் செல்வோர் செல்லும் பிரதான சாலைகளில் ஒன்று. கல்வெட்டும் தை மாதம் பூச நட்சத்திரத்தில் பட்டயமாக வழங்கப்பட்டிருக்கிறது. சத்திரம் என்று சொல்லப்படும் இரண்டு மண்டபங்கள் மூன்று புறங்களிலும் அடைப்புச் சுவர்களுடனும் முகப்பில் 4, 4 தூண்களையும் பெற்று ஒன்றன் பக்கமாக மற்றொன்று அமைந்து விளங்குபவை. குமாரலிங்க நாயக்கனின் தந்தை ஏறுதாதுலிங்க நாயக்கர் பெயரால் ஒன்றும், தாய் தாதம்மாள் பெயரால் ஒன்றுமாக இச்சத்திரங்கள் கி. பி, 1781ல் அமைக்கப்பட்டன. இச்சத்திரங்களுக்கு வழங்கப்பட்ட நிலங்கள் ஏற்காபட்டியிலும், அம்மாபட்டியிலும் இருந்தன. இந்நிலங்களின் எல்லைகள் கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்று வழக்கம்போல் குறிக்கப்படாமல் ஈசானியன், அக்னி, நிருதி (ந்ருருதி) வாயு ஆகியோர் பெயரால் மூலைகளில் குறிக்கப்படுகின்றன. கிழக்கு - இந்திரன், தென்கிழக்கு - அக்கினி, தெற்கு - எமன், தென்மேற்கு - நிருருதி, மேற்கு - வருணன், வடமேற்கு - வாயு, வடக்கு - குபேரன், வடகிழக்கு - ஈசானன் என்று எட்டு திக்குகளுக்கு எட்டு பாலகர்கள் விளங்குவர். பிரதான திசைகளான கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு ஆகியவை விடப்பட்டு வடகிழக்கு (ஈசானன்), தென்கிழக்கு (அக்கினி) தென்மேற்கு (நிருதி), வடமேற்கு (வாயு) ஆகிய, மூலைத் திசைகள் எல்லைக்குக் குறிக்கப்படுவது அக்கால வழக்கினைக் காட்டுகிறது. எல்லையில் 11, 10, 14 என்று சூலக் கற்கள் நடப்பட்டிருந்தமை குறிக்கப்படுவதை நோக்கினால் எல்லையில் ஒவ்வொரு திருப்பத்திலும் ஒரு சூலக்கல் நடப்படும் வழக்கிருந்தமையும் தெரியவருகிறது,

பக்கம் — 1

1 உ சத்திரத்து தற்மத்துக்கு பட்டயம் உ
2 சொஸ்தஸ்ரீ சாலிவாகன சகாற்த்தம் 170
3 3 கலியத்தம் 4882 இதின் மே
4 ல்ச் செல்லா நின்ற பிலவ ஸு தை மாதம்
5 16 உ சோமவாரமும் பவற்ணமை
6 யும் பூச நக்ஷெத்திரமும் கூடின சுபதி

7 னத்தில் யாதவ கோத்திரோற்பவராகி
8 ய தொந்திலிங்கய நாயக்கரவர்கள் பவுத்தி
9 ரன் ஏறுதாதுலிங்க நாயக்கரவகற் புத்திர
10 ன் ரா. குமாரலிங்க நாயக்கரய்யனவர்கள்
11 சத்திரத்துக்கு தற்ம சாதனம் பண்ணிவி
12 த்தபடி சாதனமாவது நம்மட அய்ய
13 ரான ஏறுதாதுலிங்கய நாயக்கரவர்கள் ச
14 த்திரத்துக்கும் நம்மட அம்மா தாதம்
15 மாளவர்கள் சத்திரத்துக்கும் இ
16 ந்த ரெண்டு சத்திரத்துக்கும் நஞ்சை
17 ச புஞ்சை எல்லைக்கு விபரம் ஏற்க்கா
18 பட்டி கிறாமத்துக்கு ஈசானிய மூலையி
19 ல் வெள்ளைக்கல் நாச்சியம்மன் கே
20 ாயில் அக்கினி மூலையில் ஆதியான
21 ணைக்கு வடக்கு நிருதி மூலையில் செ
22 சட்டியளணையாறு வாயு மூலையில்
23 கருங்கல்லுக் குட்டு இந்த நான்கு
24 எல்லைக் குள்ளிட்ட சூலக்கல் பதிசெ
25 னான்றுக்குச் சேற்ந்த புஞ்ஸ்
26 சயில் தேவதாயம் விறுமதாயம் நீ
27 ங்கலாக நின்ற புஞ்சை விரை 5
28 36 உயும் நஞ்சை செயி 14ம் இ
29 துவும் அம்மாளவர்கள் சத்திரத்
30 துக்குக் காரைக்குண்டு அம்மா
31 பட்டி புரவில் ஈசானிய மூலை ந
32 ரிக்குட்டு அக்கினி மூலை பாப்பாம
33 லைச்சரிவு நிருதி மூலை பேயிலூத்து
34 ஓடை வாய்வுமூலைச் சக்கானி பு
35 ஞ்சை வேப்பமரம் இந்த நான்கு எ
36 ல்லைச்குள்ளிட்ட சூலக்கல் பத்து
37 க்குள்ச் சேற்ந்த புஞ்சையில் தே
38 வதாயம் நீங்கலாக நின்ற புஞ்

பக்கம் — 2

39 சையில் தே
40 வதாயம் நீங்
41 கலாக நின்ற
42 புஞ்சை விரை
43 501உயும்
44 யும் அதிராச ே

45 சரிக்குளத்தில்
46 ஈசானிய மூ
47 லை பேரியத்து
48 இலந்தை அ
49 க்கினி மூலையி
50 ல் நாச்சான்

51 புளிநிருதி மு
52 லையில் நவ்வ
53 ல் வாயுவு மு
54 லையில் வேல
55 டி மருகால் இ
56 ந்த நான்கு
57 எல்லைக்கு
58 ள்ளிட்ட கு
59 லக் கல்ப் ப
60 திவாளுக்கு
61 ள்ச் சேற்ந்
62 த நஞ்சையி
63 ல் தேவதாயம்
64 விறுமதாயம்
65 நீங்கலாக
66 நின்ற நஞ்சை
67 ச செயி 2
68 4 புஞ்சை வி
69 ரை 30 குளத்
70 துத் தண்ணீ

பக்கம் — 3

71 ர்ப் பிடி க
72 ல் நாட்டு
73 க் குள்ளி
74 ட்ட புஞ்
75 சை விை
76 ர . . ஆக
77 வதை மு
78 னுக்குக்
79 கூடிய பு
80 ஞ்சை வி
81 ரை 10
82 67உ ந
83 ஞ்சை செ
84 யி 38
85 இந்த ந
86 ஞ்சை பு
87 ஞ்சைக்
88 குன்ச் சே
89 ற்ந்த அவ்ஷ
90 ட்ட போ
91 க தேச க
92 [illegible]
93 ங்களுட
94 ன் ஆற்ச்
95 சந்திரா
96 ற்க்கவ்ஷ் த
97 ாயியா
98 க தற்ம ப
99 ரி பாவி
100 ளம் பண்
101 ணிக் ெ
102 காண்டு
103 வருவார
104 ாகவும்
105 இந்தத

பக்கம் — 4

106 ற்மம் பரிபாலனம் பண்ணின
107 பேற்க்கு அஷசுவ மேத யாக ப
108 லன் விகாதம் பண்ணின பே
109 ற்க்கு கெங்கைக் கரையில்
காரா
110 ரம் பசுவை இமிசை பண்ணி
111 ன பலன் உ

# 4. பேராவூரணி வட்டக் கல்வெட்டுகள்

பருகூர் அ. கிருட்டினன்

1. நாகப்பட்டினம் காயிதேமில்லத் மாவட்டம், பேராவூரணி வட்டம், பின்னவாசல் சிவன்கோயில் கருவறை முன்மண்டபத் தெற்குப் புறச்சுவர். காலம்: இரண்டாம் சடையவர்மன் குலசேகரன், 13–9–1259.

புன்னைவாயில் ஊரவர், அவ்வூரில் திருக்கோயில் எழுப்பவும், அகரம் அமைக்கவும் கழுமலமுடையான் சிங்கப்பெருமாளான வேணாவுடையார்க்கு எல்லைகள் வகுத்து நிலத்தை இறையிலி யாக்கி விற்றுக் கொடுத்தமை இக்கல்வெட்டால் தெரிய வருகிறது.

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலசேகர தேவற்கு யாண்டு 22வது கன்னி நாயற்று அபர பக்ஷத்து தசமியும்

2 சனிக்கிழமையும் பெற்ற பூசத்து நாள் வட வெள்ளாறான சுந்தர பாண்டிய வளநாட்டுப் புன்னைவாயல் ஊற்குச் சமைந்த ஊர

3 வரோம் சோழ மண்டலத்து உய்யக் கொண்ட வளநாட்டு ராசராச புரத்து கழுமலமுடையான் சிங்கப்பெருமாளான வேணாவுடை

4 [யாற்]கு நாங்கள் இவ்வூற் திருமேற் கோயில் உகந்தரு[ள]ப் பண்ணவும் அகரம் வைக்கவும் விற்றுக் குடுத்து நத்தத்துக்கு கீழ் பாற்கெல்லை எழுந்திராவே

5 [ங்கை] தோட்டத்தும் அகல சேந்தன் தோட்டத்துக்கும் மேற்கும் தென்பாற் கெ[ல்]லை இத் தச்சந்தன் தோட்டத்து தென்வேலி நேர்மேற்குற வடக்கும்

6 [மேல்]பாற் கெலை பழவூற்புளிக்கு கிழக்கும் வடபாற் கெ[ல்]லை நகரன் குழிக்கு தெற்கு ஆக இசைந்த பெருநான்கெ[ல்]லைக் குட்பட்ட நத்தத்துக்கும் இத

7 . . . கோயிலுக்கும் அகரத்துக்கும் சந்தராதித்தவர் இறையிலியாக விற்றுக் கல்லுநாட்டிக்குடுத்தபடி . . .

8 [மேலை] காயல் எல்லைக்கு மேற்கும் தென்பாற் கெ[ல்]லை மாத்தூரும்மானடி குளத்து எதாணைக்கு வட . . . . . .

9 ட்டுக்கு கிழக்கு வடபாற் கெ[ல்]லை இக்குளத்து நீர் நிலைக்குத் தெற்குமாக இசைந்த பெருநான் கெ[ல்]லை. . . . .

10 மாக காடெழுந்து கிடக்கையில் விலை நிச்சயித்த பணம் . . . . . . ம் [ஊத]த்துக்கு பணம் 20ம் ஆக பணம் . . . . . . . . .

2. அம்மையாண்டி (சங்கமங்கலம்) சிவன் கோயில் கருவறையின் முன்மண்டபத் தெற்குப்புற அடித்தளம். காலம்: முதலாம் சடைய வர்மன் விக்கிரம பாண்டியன், 11-8-1248.

கண்டீசுவரமுடைய நாயனார்கோயில் திருப்பள்ளி எழுச்சிக்கும், திருவமுது படிக்கும், திருவிளக்குச் சந்திக்கும் இறையிலியாக நிலம் கொடுத்தமை.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோச்சடை பன்மரான திரிபுவந சக்ரவத்திகள் ஸ்ரீ விக்ரம பாண்டிய தேவற்கு யாண்டு 8வது ஸி[ம்]ஹ நாயற்று பூர்வ்வ பக்ஷத்து பஞ்சமியும்

2 செவாக்கிழமையும் பெற்ற அசுவதி நாள் செயஸி[ம்]ஹ குலகால வளநாட்டுத் தென்னாச்சநத்து தாநவராம் இக்கண்டியூராந சோழசிகாமணிபுரத்து

3 உடையார் திருமாற்கண்டீசுவரமுடைய னாயநாற்கு இன்னாட்டு அரசு மருதாந்தகன் செய்யபெருமாளாந சேதிராயரும் மேன்னிந்றாந்தாந் ணாட்டாராந வாணவ

4 ரையரும் இவ்விருவோம் இன்னாயனார் திருப்பள்ளியெழுச்சிக்கு திருவமுதுபடிக்கும் இச்சந்தி திருவிளக்குக்கும் இறைஇலி செய்து குடுத்த தானமாவது கண்டியூர் மேலை வய

5 லில் இநாயநார் தேவதானமான நிலம் இரண்டு மாக்காணியும் இதில் மிகுதிக்குறை வுள்ளடங்க இறைஇலி செய்து திருக்கை மலரிலே நீர்வாத்து திருமலைஇலே

6 கல்வெட்டிக் குடுத்தோம் இருவோம் இப்படிக்கு இவை

7 மருதாந்தகந் செய்யபெருமாளான சேதிராயர் எழுத்து இப்படிக்கு

8 இவை மேன்னிந்றாந்தாந் நாட்டாரான வாணவதரையர் எழுத்து

9 இப்படிக்கு இவை மேன்னின்றான் கண்ணிறைஞ்ச பெருமாளாந

10 விக்ரம சோழ . . . . . . தானவதரையர் எழுத்து

3. அம்மையாண்டி (சங்கமங்கலம்) சிவன் கோயில் கருறையின் தெற் குப் புறச் சுவர். காலம்: முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன், கி. பி. 1259.

திருமாற்கண்டீசுவரமுடைய நாயனார் கோயில் திருக்கற்றளித் திருப்பணி செய்ய அந்நாட்டு அரசைச் சார்ந்த மருதாந்தகதான வதரையனும் குலோத்துங்கனும் பதினெட்டு மாநிலத்தை இறையிலி செய்து கொடுத்தமை.

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்கரவத்தி வீரபாண்டிய தே
2 வற்கு யாண்டு 5ஆவது ஜயஸிம்ஹ குலகால வள நா
3 ட்டு தென்னாச்சனத்து தரளி நாட்டு கண்டியூரான சே
4 சாழ சிகாமணிபுரத்து நாயனார் திருமாற்கெண்டீசுவர
5 முடைய நாயனாற்கு இன்னாட்டு அரசு செய்யபெருமாள்
6 மருதாந்தக [தேவன்] த்தானவதரைய னென்னும் தாயி
7 ன்மேன்னின்றாரான குலோத்துங்க சோ [ழனும்] இவ்விரு
8 வோம் இன்னாயனாற்கு திருக்கற்றளித் திருப்பணி முதலான
9 திருப்பணிக்கு நாங்கள் இறையிலி பண்ணிக் குடுத்த
10 நிலமாவது இவ்வூற் கீழ் பிடாகை மரவடு குறுச்சி நா
11 ன்கெல்லைக் கல்லுக்கு உள்பட்ட நிலம் 18 மா இ
12 ன்னிலம் பதினெட்டு மாவும் பெருமாள் சாமந்தரி
13 ல் மனவாசகங் கடந்தாரான லங்கேசுவர தேவர் பெ
14 [பருமா]ன் திருமுன்பு விண்ணப்பம் செய்து இ
15 . . . . . . பாலும் கண்டியூற் கீழ்பிடாகை பங்
16 . . . . . ரவில் கழித்து இன்னிலத்தால் வந்த
17 . . . . . திருவாய்மலந்தருளினபடி மண்ட
18 பத்தில் அறிவித்து முதல்களோடும் கழித்தது இப்படிக்கு மருதாந்தக தேவன் வானவதரையர் எழுத்து இப்படிக்கு தாயின் மேன்னின்றாரான தானவதரைய னெழுத்து

19 இப்படி திருநாமத்துக்காணியாகக் கல்வெட்டின இது திருப்பள்ளி எழுச்சி . . .

20 வானவதரையர் சந்தி திருவொத்தசாமம் சேதிராயர் சந்தி இப்படி பூசிக கடவர்

4. ஆத்தாளூர் திருக்காளநாதீசுவரர் கோயில் கருவறையின் தெற்குப்புறச்சுவர். காலம்: போசள வீரராமநாத தேவர், கி. பி. 1264.

ஆத்தாளூர் திருக்காளிச்சுரமுடையார் கோயிலுக்குச் சோமன் களப்பாள நாயனார் காராண்கிழமை இறையிலியாக அறுபது மா நிலத்தை எல்லைகள் வகுத்துக் கொடுத்தார்.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ சார்வ புவனச்சக்கரவத்திகள்
2 சி போசள வீரராமனா[த] தேவற்க்கு யாண்டு 10 ஆவ
3 து திரிசூலக்கு [றி]யுடையார் திருக்காளீச்சுரமுடை
4 யார்க்கு சோமன் களப்பாளனாயநான களப்பா
5 ளனேன் சந்தி . . . . . . காராண்கிழமை இறை
6 யிலியாக விற்றுக் குடுத்த . . . . . . . பை
7 ங்காட்டு நாட்டு நாட்டவர் கல்நாட்டி விலை கொண்டு ந
8 ாயனாக்கு திருவு இட்டு குடுத்த சாதனப் பட்டயம் காணகு

9 றிச்சியில் வடிவழகியார் ஒழுகின்படி நிலம் 60 மாவும் நி
10 லம் கீழ்பாற்க் கெல்லை ஆத்தாளுப்பற்றில்
11 தேவி வயக்கால்லுக்கு தெக்கோடிய வாக்காலு
12 க்கும் உய்யான் செய் மேலை வரம்புக்கு மேக்கு
13 . . . . . வடக்கெல்லை பள்ளிக்கொண்டான்
14 வயக்காலும் பெருவழிக்கு வடக்கும்
15 மேல்பாற் கெல்லை கூத்தன் . . . . கரையு
16 ம் நீளத் திலக வரம்புக்கும் வடபாற்கெல்லை
17 வாத்தலைக்கு தெக்கும் இப்படி பெருநான்கெல்
18 லைக்கு உள்ப்பட்ட நிலம் 60வது மாவும் நாயனார் திருக்
19 காளீச்சுரமுடையாற்க்கு காராங்கிழமை நீர்வார்
20 த்துக் குடுத்தேன் சோமன் களப்பாள எழுத்
21 து பைங்காட்டு னாட்டவரில் பை
22 ங்காட்டு னாட்டு வேளான் எழுத்து

---

## 5. நாகூர் தர்காவில் நாயக்கர் கல்வெட்டு

புலவர் செ. இராசு

நாகை காயிதேமில்லத் மாவட்டம் நாகூரில் உள்ள பெரிய தர்கா அசரத் காதிர் ஒலி தர்கா. அந்தத் தர்காவில் உள்புறம் அலுவலகத்திற்கு எதிரிலுள்ள முன்வாயில் மினார் கோபுரத்தின் வடபுறச் சுவரில் தஞ்சை நாயக்க மன்னன் விசயராகவ நாயக்கன் (1634–1673) காலக் கல்வெட்டு ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. காலம்:9–7–1645 ஆகும்.

ஏற்கெனவே வெளியே உள்ள 11 நிலை பெரிய மினாரில் தஞ்சை மராட்டிய மன்னன் பிரதாபசிங் (1739–1763) காலத்தில், 16–2–1753 அன்று பொறிக்கப்பட்ட மும்மொழிக் கல்வெட்டு கண்டறியப்பட்டுள்ளது (ARE. 1964:293)

1 பாத்திப ஞு ஆடி மீ 10உ விசையராவுக
2 நாயக்கய்யன் காரியத்துக்குக் கத்தரான
3 மதாறு ராவுத்தர் நாவூர் மீரா ராவுத்தர் முத
4 ல் வாசலில் கட்டின மினாற் மீராராவுத்தர் த
5 ம்மத்துக்கு அகுதம் பண்ணினபேர்
6 மக்கத்திலே அகுதம் ப
7 ண்ணின பாவத்திலே
8 போக கடவாராகவும்.
9 கெங்கைக் கரையில் காரா
10 ன் பசுவை கொன்ற ப
11 ாவத்திலே போக கடவாராகவும் உ

---

## 6. மருதுபாண்டியனின் தொண்டிக் கல்வெட்டு

### புலவர் செ. இராசு

இராமநாதபுரம் மாவட்டம், திருவாடானை வட்டம், சேது வழியில் உள்ள பழைய ஊர் தொண்டி. இது சில பாண்டிநாட்டுத் துறைமுக நகர்கள் போலப் பவுத்திர மாணிக்கப்பட்டினம் என்று பெயர் பெற்று விளங்கிய சிறப்பினை உடையது.பவுத்திர மாணிக்கம் என்பது மாசிலாமணி, தூ மணி (தூய்மணி), நன்மணி என்றும் குறிக்கப்பெறும்.

தொண்டியில் இன்றும் மக்கள் பயன்பாட்டில் உள்ள பெரிய குளம் 'கைக்களான் குளம்' என்பதாகும். குளத்தின் நடுவே நடப்பட்டுள்ள தூண் கல்வெட்டு மூலம் அக்குளத்தின் பழம்பெயர் 'காளிகணக் குளம்' என்று தெரிகிறது.

18ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் சிவகங்கை அரசுத் தலைவர் சின்னமருது அக்குளத்தின் கலிங்கினைக் கட்டினார் என்று அக்கலிங்கின் இருபுறமும் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டால் அறியலாம். (ஒரே கல்வெட்டு கலிங்கின் இருபுறமும் இரண்டு இடங்களில் வெட்டப் பட்டுள்ளது) காலம்: 9–11–1795.

1 சிவமயம். கலியுகம் 4896 சாலிவாகன சகாப்
2 தம் 1717 இதின்மேல் செல்லாநின்ற றாக்ஷத ஸு அற்
3 ப்பிசி மீ 27 சோம வாரமும் பஞ்சமியும் புநற்பூச நக்ஷத்ர
4 மும் கூடின சுபதினத்தில் தொண்டிப் பட்டணம் கைக்களான்
5 குளம் கலுங்கு கட்டி முகிஞ்சுது. ராசமானிய ரா. மருது பாண்டி
6 யன் உபயம். அபூப் சகா மரைக்காயர் அதிகாரத்தில் கட்டி முகிஞ்சுது.
7 அருணாசல ஆசாரி கட்டி முகிஞ்சுது உ

---

## 7. நான்கு கல்வெட்டுகள்

### கி. ஸ்ரீதரன்

#### 1. குண்டூர் அய்யனார் சிற்பக் கல்வெட்டு

குண்டூர் அருகே களத்து மேட்டு வயல் என்று அழைக்கப்படும் வயற்பரப்பில் உள்ள அய்யனார் சிற்பத்தின் தளத்திலுள்ளது. குண்டூர் ஏரியின் கற்குமிழியைச் செய்வித்த குவாவனே இச்சிற்பத்தையும் எழுந்தருளுவித்துள்ளான். காலம்: 9–10 ஆம் நூற்றாண்டு.

1 ஸ்ரீ பெருங்குண்டூர் . . . .
2 னம . . னத குவாவ
3 ன் செய்வித்த . .
4 . . மகா சாத்த
5 ன்

## 2. வடசேரி கல்வெட்டுகள்

திருச்சி விராலிமலை சாலையில் இனாம் குளத்தூருக்கு அருகில் உள்ளது வடசேரி. இவ்வூர் ஏரியின் வடகரையில் உள்ள கல்லில் ஒரு கல்வெட்டும், வயற்புறத்தில் நடுகல்லில் ஒரு கல்வெட்டும் உள்ளன. தகவல் தந்தவர்கள் இனாம் குளத்தூர் திரு. எம். ஏ. பொன்னுசாமி, வடசேரி திரு. எம். குப்புசாமி.

ஏரிக்கரைக் கல்வெட்டு முதியகுடான் கண்டசாத்தன் வீரசோழப் பேரரையன் தந்த அறக்கட்டளையைக் கூறுகிறது. காலம்: 10–11ஆம் நூற்றாண்டு.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோவி
2 ராசகேசரி பன்மகி
3 யாண்டு 8ஆவது
4 மேன்கா குள நெல்லு [1]
5 கலத்து [வா] நாழியும் குள
6 செயும் முதியக்குடான் க
7 ண்ட சாத்தன் வீரசோழப் பே
8 ரையன் வச்ச த$_4$ந்மம் இது இற
9 க்குவான் குளம் அழிச்சான் பா
10 வம் கொள்வான்

நடுகற் கல்வெட்டு கரந்தைப் போரில் மாண்ட கொற்றம் பூதியைக் குறிப்பிடுகிறது. இருக்குவேளிர் மரபைச் சேர்ந்த இவ்வீரன் இறந்த இடத்திலேயே கல் நடப்பட்டிருப்பது சிறப்புக்குரியதாகும்.

1 ஸ்ரீ
2 கொற்ற
3 ம் பூதி
4 நிரை
5 பின்
6 போடி
7 ய் பட்
8 ட இடம்

## 3. நாழி வழி மைல் கல்

திருச்சியில் தலைமை அஞ்சல் நிலைய வளாகத்தில் ஒரு மைல் கல் சாய்ந்து கிடக்கிறது. இதில் உள்ள செய்தி கீழே தரப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| 80 | 2 |
| MILES | MILES |
| To | To |
| MADURA | TRICHINOPOLY |
| மதுரைக்கி | திருச்சினாப்பள்ளிக்கி |
| 80 | 2 |
| ளாழி வழி | ளாழி வழி |

## 8. தஞ்சை வேணுகோபாலசுவாமி கோயிற் கல்வெட்டு

### எஸ். இராமச்சந்திரன்

தஞ்சாவூர் கீழவாசலிலிருந்து மகர் நோன்புச் சாவடி செல்லும் தெருவில் "கொள்ளுப்பேட்டை" என அழைக்கப்படும் இடத்தில் உள்ள வேணுகோபாலசுவாமி கோயிலின் நுழைவாயிலில் உள்ள தஞ்சை மராட்டிய அரசர் சிவாஜி காலத்தைச் சேர்ந்த (கி. பி. 1844) தமிழ்க் கல்வெட்டு இது. யாதவ (கோனார்) குலத்தைச் சேர்ந்த சின்னய்யா பிள்ளை என்பவரும் அவருடைய மனைவியர் மூவரும் சேர்ந்து வேணுகோபாலசுவாமி கோயில் திருப்பணி புரிந்த செய்தி இக்கல்வெட்டில் தெரிவிக்கப்படுகிறது. இக்கோயில் அமைந்துள்ள தெரு, இராமேசுவரத்திற்குத் திருத்தலப் பயணம் மேற்கொள்வோர் பயன்படுத்திய பாதையாக (சேது மார்க்கம்) இருந்தது என்ற செய்தியும் இக்கல்வெட்டின் மூலம் தெரியவருகிறது.

### கல்வெட்டு

சாலியவாகன சகாப்தம் 1766 கலியுகசப்த்தம் 4945 யிதற்குச் சரியான குறோதி வருஷம் இந்த சுபதினத்தில் ஸ்ரீ இஸ்அயிநிஸ் ஸ்ரீமந்நு ஜிவாஜி மகாராசா சத்திரபதி சாயபு அவர்கள் செங்கோலில் ஸ்ரீ அண்ணாஜி தியாகராச பண்டிதர் அவர்கள் மந்திரியாக யிருந்த காலத்தில் இயாதவ குலம் வடமலையா பிள்ளை குமாரன் சின்னய்யா பிள்ளையும் மேற்படியார் பெண்ஞ்சாதிகள் வீராயி, செகப்பாயி, அன்னமை இந்த நாங்கள் நான்கு பேர்களும் யேக மனதுள்ளவர்களாயி தஞ்சநகரம் கொள்ளுப்பேட்டை சேதுவுமார்க்கத்தில் ஸ்ரீ வேணுகோபால சுவாமி திருப்பணி செய்த தற்மம். இந்த யெளியவர்களாகிய நாங்கள் செயித தற்மத்தை சகலமான புண்ணிய புருஷாள் யெப்போதும் தற்மத்தை நடப்பித்து வரும்படிக்கி பிராற்த்திக்குறோம் வ

---

## 9. சித்தலூர்க் கல்வெட்டுகள்

### ச. கிருஷ்ணமூர்த்தி

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, தென்னார்க்காடு மாவட்டம், கள்ளக்குறிச்சி வட்டம் சித்தலூரில் மூன்று கல்வெட்டுகளை அண்மையில் படித்தறிந்தது. தகவல் தந்தவர் முடியனூர் முனைவர் மு. தங்கவேலனார். முதல் கல்வெட்டு மணிமுத்தா நதியில் உள்ள ஒரு சிறிய பாறைமீது காணப்படுகிறது. இக்கல்வெட்டு உத்தமசோழ

மிலாடுடையார்க்கு அலுவல் செய்வோர் வேடபுரத்திலுள்ள பொன்னாலமந்தாளுக்கு நந்தா விளக்கொன்று எரிக்க 96 ஆடுகளைத் தந்ததையும் அவ் ஆடுகளைப் பெற்றுக்கொண்டு பேருவச்சனான காலவன் எழுவன் விளக்கெரிக்க ஒப்புக்கொண்டதையும் தெரிவிக்கிறது. பொன்னாலமந்தாள் கோயில், கல்வெட்டில் பிடாரி கோயில் என்று குறிக்கப்படுகிறது.

இரண்டாவது, மூன்றாவது கல்வெட்டுகள் சித்தலூர் எல்லையில் செங்கைமேடு என்று அழைக்கப்படும் பகுதியில் திரு. நாச்சியப்பன் என்பவருக்குச் சொந்தமான நிலத்தின் பாறையில் காணப்படுகின்றன. இவ்விரு கல்வெட்டுகளும் ஒரு விஷ்ணு கோயிலுக்கு வழங்கப்பட்ட கொடைகளைக் குறிப்பிடுகின்றன.

### 1. பாறைக் கல்வெட்டு

1 (கோ) விராசகேசரிபன்மற்கு யாண்டு 3 ஆவது மிலாடு

2 வேடபுரத்து பொன்னாலமந்தாளுக்கு உத்தமசோழ மிலாடுடையார்

3 க்கு கலனை செய்கின்ற கலனை யெரி பொன்னாலமந்தாளுக்கு நொந்தா

4 விளக்கு ஒன்றுக்கு வைத்த ஆடு தொண்ணூற்றாறாடும் சாவாமூவாப் பேராடு

5 ம் நிசதி உழக்கு நெய்யால் நிசதி ஒரு நொந்தா விளக்கு எரிக்கக் கடவேன் இ

6 ப்பிடாரி கோயிலுடை காலவ னெழுவனாகிய . . . . ச கான

7 . . . . ப் பேருவச்சனேன் இது பன்மாஹேஸ்வர ரக்ஷை

### இரண்டாம் கல்வெட்டு

1-6 மெய்க்கீர்த்தி

7 ஸ்ரீகோவிராஜராஜ தேவர்க்கு யாண்டு 23ஆவது மிலா

8 டான சநநாத வளநாட்டு பாலூர் கூற்றத்து விறலூரான ராஜ விஜ்ஜியாதிரத்

9 து நகரத்தோம் எங்களூர் ஸ்ரீகரண விண்ணகரான திருமேற்றளி அழ

10 கியார் நிலம் நஞ்செய் விடவூர் விட்ட பிரம்மதேய வெண்டலையூர் வைகான

11 ஸன் காஸ்யபன் சேந்தன் விக்கிரபதிக்கு இது தேவரச்சனை செய் வர் இருத்

12 தோம் நன்செய் குடுத்த பரிசாவது எங்கள் காணியான சாத்த மங்கலத்து வானவன்

13 மாதேவிப் பேரரையன் கீழ் நஞ்செய் நிலம் குடுத்த பரிசாவது வானவன் மஹாதே

14 தவிப் பெருவதிக்கு கிழக்கு இரண்டில் . . . னெற்றகடைபாற் கெல்லை

15 ராஜராஜ வாய்க்காலுக்கு தெற்கெல்லை நாவலூர் வாய்க்

16 காலுக்கு வடக்கும் கீழ்ப்பாற்கெல்லை

### 3. இராசேந்திரனின் சிதைந்த கல்வெட்டு

1 ஸ்வஸ்திஸ்ரீ திருமன்னி வளர விருநில மடந்தையும் போர்ச்

2 செயப் பாவையும் சீர்த்தனி செல்வியும் தன் பெருந்

3 தேவியராக யின்புற நெடியதிலூழியு ளிடைதுறை நாடும்

4 வீப் படர் வனவாசியும் சுள்ளிச் சூழ் மதில் கொள்ளிப் பாக்

5 கையு நன்னர்க் கரு முரண் மண்ணைக் கடக்கமும் பொரு கடல்

6 ஈழத்தரசர்தம் முடியும் மாப்பொருள் தண்டார் கொண்ட கோப்பர கேசரி பன்மரான உடையார் ஸ்ரீ இராஜேந்திர சோழ தேவர்க்கு

7 ஜனநாத வளநாட்டு பாலூர் கூற்றத்து . . . . ம் பிரதிகண்ட மங்கலம்

8 விச்சாதிரபுரத்து ஸ்ரீகரண வீஷ்ணு கோவில் விற்றுக் குடுத்த

9 ஓடைக்கு மேற்கு . . . . . . . . ல் ஸ்ரீகயி . . . . . . .

10 . . . . . க்கு வடக்கு மேல்பாற் . . . . க்கபா பரந்து

11 ம் வடபாற் கெல்லை இ . . . கீழ் நோக்கின எல்லை அறச

12 க்கு தெற்கும் இவ்வினத் . . . . க்கும் உட்பட்ட நிலம் ஒழிவின்றி வி

13 ற்றுக் கொண்ட காசு 15 இக்காசு பதினஞ்சு பன் அறக்கொண்டு விலை . . . . . .

14 ளூர் கோயில் நீக்கித்த வண்ணப்பாச்சப் பெறுவதாகவு மின்னிலத் தால் வந்த இறை சவலன் . .

15 யோம் இவ்வண்ணம் இவ்வூர் வைகானஸான திருநாழி அரிசிக் குத்த சேர் கொண்டு ஸந்தியும் வந்த நிலத்தால் கொண்

16 டு திருவமுது செய்விப்போ மானோம் நாங்கள்

17 பிடாரி வடவாயில் கோயில் நங்கைக்கு நாங்கள் விற்றுக்குடுத்த நிலமாவது . . ளிக்களு . தெப் . . . தெற்கு வடக்கு மேற்கெல்லை இது

18 ப்பைன் செய்க்கு கிழக்கும் வடக்கிற் கற்காறைக்கு தெற்குக் கிழக்கு இக்கிழக்கிலும் பாறை ஒன்றும் பொன்னோடை

19 க்கு மேற்கும் வி (த்யாத்தி) பேரால் நிலத்தில் உன்னிய மொழி யின்றி விற்றுக் கொண்ட காசு 15 இக்காசு

20 பதினைந்து கொண்டு . . . . க்கு பத்து இந் நிலத்து . . . க்க எங்களூர் ஏரியில் நிலத்துக்கு . . . . பன் . . கிழக்கு வண்ணா

21 ம் பாச்சப் பெ . . . . ரால் இந்நிலம்

22 யாக இரண்டு . . . . .

---

## 10. முதல் வரகுணபாண்டியனின் திருத்தங்கல் வட்டெழுத்துக் கல்வெட்டு

### வெ. வேதாசலம்

திருத்தங்கல் காமராசர் மாவட்டத்தில் சிவகாசிக்கு அருகில் அமைந்த ஊராகும். இதன் பழம்பெயர் தங்கால் என்பதாகும். பழந் தமிழ் இலக்கிய காலத்திலிருந்தே இது வரலாற்றுச் சிறப்பு மிக்க ஊராக விளங்கி வந்திருக்கின்றது. சங்கப் பாடல்களைப் பாடிய புலவர் கள் சிலர் இவ்வூரில் வாழ்ந்திருக்கின்றார்கள். சங்க காலத்தைச் சார்ந்த கருப்பு சிவப்பு பானையோடுகளும் சதுரமான சங்ககாலப் பாண்டியர் செப்புக் காசும் இவ்வூரின் செங்குளம் என்ற பகுதியில் கிடைத்துள்ளன. [1] சிலப்பதிகாரத்தில் இவ்வூர் மறையவர்கள் வாழும் பகுதியாக சிறப்பித்துக் கூறப்பெறுகின்றது. சேர நாட்டிலி ருந்து பரிசில் பெற்றுத் திரும்பிய பராசரன் என்ற அந்தணன் தன்னூர் செல்லும் வழியில் இவ்வூரில் தங்கி இளைப்பாறியதாக சிலம்பு கூறு கின்றது. மேலும் இவன் இவ்வூரில் இருந்த தெட்சிணாமூர்த்தி என்ற சிறுவனின் திறமையைப் பாராட்டிப் பரிசில் அளித்தான் என்றும் இச்சிறுவனின் தந்தை இவ்வூரோடு வயலூர் என்ற ஊரையும் சேர்த்து தானமாகப் பெற்றான் என்றும் கூறுகின்றது. [2]

சங்ககாலத்திற்குப் பின்னர் முற்காலப் பிற்காலப் பாண்டியர் காலங்களில் சமயச் சிறப்பும் வரலாற்றுச் சிறப்பும் வாய்ந்த ஊராக திருத்தங்கல் திகழ்ந்துள்ளது. இவ்வூர்க் குன்றின் மீதுள்ள நின்ற நாராயணப் பெருமாள் கோயில் முதலாழ்வார்களாலும் திருமங்கை யாழ்வாராலும் பாடப் பெற்ற சிறப்புடையது. வைணவப்பதிகள் நூற்றியெட்டில் இதுவும் ஒன்றாகும். நின்ற நாராயணப் பெருமாள் கோயிலில் சோழர், பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகள் காணப் பெறுகின்றன. இக்கோயிலில் இருந்து இதுவரை படியெடுத்து வெளி யிடப்பெற்ற கல்வெட்டுகளில் பழமையானது முதல் பராந்தக சோழனின் கல்வெட்டேயாகும். இக்கோயிலில் நடைபெற்ற களஆய்வின்போது

பெருமாள் திருமுன்னில் முன்மண்டபத்திற்கு வெளிப்புறத்தில் நுழை வாயிலுக்கு அருகில் தரையில் தளமாகப் போடப்பட்ட கருங்கல் ஒன்றில் வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்று இருப்பது கண்டறியப் பெற்றது. [3]

இக்கல்வெட்டு காணப்படும் கல் முற்காலப் பாண்டியர் காலத்தில் இங்கு கட்டப்பெற்றிருந்த கோயிலின் கட்டடப் பகுதியைச் சார்ந்ததாக இருந்திருக்க வேண்டும். அதன்பின் நடைபெற்ற கோயில் திருப்பணி யின்போது கல்வெட்டு பொறித்த இக்கல் தரையில் தளவரிசைக் கல் லாகப் போடப்பட்டிருக்க வேண்டும். இக்கல்வெட்டே இதுவரை இக் கோயிலில் கிடைத்த கல்வெட்டுகளில் பழமையானது. இது பாண்டி நாட்டு அரசியல், சமய வரலாற்றுக்குச் சிறப்பு சேர்க்கும் கல்வெட்டு களில் ஒன்றாகும்.

இக்கல்வெட்டின் எழுத்தமைதியைக் கொண்டு இதில் குறிக்கப் பெறும் மாறஞ்சடையன் என்ற முற்காலப் பாண்டிய மன்னன் கி. பி. 768 முதல் 815 வரை பாண்டிய நாட்டில் ஆட்சிபுரிந்த பராந்தக நெடுஞ்சடையனாக இருக்கவேண்டும் என்று கூறலாம். இம்மன்னன் காலத்து மானூர்க் கல்வெட்டோடும் அவன் வெளியிட்ட செப்பேடு களோடும் இக்கல்வெட்டின் எழுத்தமைதி ஒத்துப்போகின்றது.

இக்கல்வெட்டு இம்மன்னனின் முப்பத்தெட்டாவது ஆட்சியாண் டில் பொறிக்கப்பட்டிருக்கின்றது. கல்வெட்டில் திருத்தங்கலின் பழைய பெயர் வடிவமான 'திருத்தங்கால்' என்பதைக் காணமுடிகின்றது. கோயிலுக்குத் தானமாக அளிக்கப்பட்ட ஊரானதால் இவ்வூர் 'தேவ தானந் திருத்தங்கால்' என்ற அடைமொழியுடன் கல்வெட்டில் குறிப் பிடப்படுகின்றது. இக்கல்வெட்டில் குறிக்கப்பெறும்திருவேங்கட நிலைப் பெருமாளையே இன்று நின்ற நாராயணப் பெருமாள் என்ற பெயரில் அழைக்கின்றனர். இப்பெருமாளுக்குத் திருநந்தாவிளக்கு எரிப்ப தற்கு ஆடுகள் தானமளித்த அளற்று நாட்டு நல்லூர்க் கிழவன் பாண்டி நாட்டில் இருந்த 'அளற்றுநாடு' என்ற நாட்டுப்பகுதிக்கு உரிமை யுடைய நாட்டுத் தலைவனாக விளங்கியிருக்கின்றான்.

'அளற்றுநாடு' என்பது காமராசர் மாவட்டத்தில் இன்றைய அருப்புக்கோட்டைக்குத் தென்கிழக்கே கமுதிக்கும் சாயல்குடிக்கும் செல்லும் வழியில் அமைந்த பரளச்சி, தொப்பலாக்கரை, நீராவி போன்ற பல ஊர்களைத் தன்னகத்துக் கொண்ட உள்நாட்டுப் பிரிவா கும். இப்பகுதிக்கு உரிமையுடைய குடித்தலைவனாகவும், நல்லூர் என்ற ஊரைச் சார்ந்தவனாகவும் விளங்கியமையால் இவன் 'அளற்று நாட்டு நல்லூர்க் கிழவன்' என்று அழைக்கப்பட்டிருக்கின்றான். 'கிழவன்' என்ற சொல் முற்காலப் பாண்டியர் காலத்தில் இருந்த சிறு நாட்டுப் பிரிவுகளுக்கு உரிமையுடைய நாட்டுத் தலைவர்களுக்கு

வழங்கப்பட்டுள்ளது. அளற்றுநாட்டிற்கு மேல்புறமிருந்த 'இருஞ்சோ ணாடு' என்ற நாட்டின் தலைவனாக விளங்கிய எட்டிச் சாத்தன் இருப்பைக்குடிக் கிழவன் என்று அழைக்கப்பட்டிருக்கின்றான்.[4] இதே போன்று இராசபாளையம் என்ற பகுதியில் இருந்த ஆண்மர் நாட்டிற் குத் தலைவனாக விளங்கிய சங்கரன்மூரி என்பவன் ஆண்மர் நாட்டுக் கிழவன் என்று அழைக்கப்பட்டிருக்கின்றான்.[5] பழந்தமிழ் இலக்கிய காலத்தில் மன்னன் 'நாடுகிழவன்' என்று அழைக்கப்பட்ட மரபு சுமார் பத்தாம் நூற்றாண்டு வரை நீடித்ததாகத் தெரிகிறது.

அளற்றுநாட்டு நல்லூர்க் கிழவன் பெரும்பாலும் பராந்தகநெடுஞ் சடையனின் அரசியல் அதிகாரியாகவும் விளங்கியிருக்க வேண்டும். அரசியல் பணியாகவும் வழிபாட்டு நோக்கத்தோடும் இவன் திருத் தங்கால் வந்தபோது மேற்படி கொடையை அளித்திருக்கலாம்.

கல்வெட்டு

1 ஸ்வஸ்திஸ்ரீ கோமாறஞ்சடை
2 யர்க்கு யாண்டு முப்
3 பத்தைஞ்சு இதனெதி
4 ர் மூன்று இவ்வாண்டு
5 தேவதானந் திருத்த
6 ங்கால் திருவேங்கட
7 நிலைப்பெருமானடி
8 களுக்கு அளற்றுநாட்டு
9 நல்லூர் கிழவன் . .
10 ன் திருநந்தா விள
11 க் கொன்றுக்கு வைத்த
12 சாவா மூவாப் பேராடு நூ
13 று இவை இவ்வூர்க் கோ
14 [வ]லன் தேவ[ன்] காடனு
15 வேலங்காடனும்
16 கொண்டார்

அடிக்குறிப்புகள்

1. திருத்தங்கல் செங்குளம் பகுதியில் சங்ககாலப் பாண்டியர் காசி னைக் கண்டறிந்தவர் திருத்தங்கல் ஆர். பாலச்சந்திரன் ஆவார்.
2. சிலப்பதிகாரம், கட்டுரைக்காதை, வரி 3400-3600.
3. இக்கல்வெட்டை நேரில் சென்று படித்தவர்கள் இக்கட்டுரை யாசிரியரும், கல்வெட்டாய்வாளர் தி. சு. இராசகோபாலும். இக் கல்வெட்டு குறித்த தகவலைத் தந்த திருத்தங்கல் கல்லூரித் தமிழ்த் துணைப் பேராசிரியர் திருமதி ச. இரத்னமாலா அவர்களுக்கு நன்றி.
4. S.I.I. Vol. XIV Nos. 43, 44.
5. ஸ்ரீ வில்லிபுத்தூர் பெருமாள் கோயில் நரசிங்கர் திருமுன்னிலுள்ள வட்டெழுத்துக் கல்வெட்டு.

## 11. சேஷங்கனூர் கைக்கோளர் கல்வெட்டு

மங்கை ராகவன்

பாண்டிச்சேரி மதகடிப்பட்டிலிருந்து 6 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள சேஷங்கனூர் என்ற கிராமத்தில், சிவன் கோயிலின் மேற்குச் சுவரில் உள்ள இக்கல்வெட்டு, இக்கோயில் திருமண்டபத்திற்குக் கைக்கோளர் அளித்த தானம்பற்றிய செய்தியைத் தருகிறது. நெசவுத் தொழில் சார்ந்த பா ஓடுதல், பா தோயல் முதலிய அரிய செய்திகள் இக்கல்வெட்டில் குறிப்பிடப்படுதல் நோக்கத்தக்கது.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோமாற பன்மரான திரிபுவனச
2 க்ரவர்த்திகள் ஸ்ரீ குலசேகர தேவர்க்கு யாண்
3 டு இரண்டாவதுக்கு எதிராமாண்டு தைம்மாதம் 10
4 ம் தேதி முதல் திரிபுவன மஹாதேவி வடபிடா
5 கை செழிய கங்க நல்லூர் கைக்கோளருங்
6 கைக்கோள முதலிகளும் எம்மிலிசைந்து பிடி
7 பாடு பண்ணின பரிசாவது உடையார் அழகி
8 ய நாயனார் திருக்கோயில் வல்லானான
9 வென்றான் திருமண்டபத் திருப்பணிக்கு பா ஓடின
10 ஆட்கள் ஒரு காசும் பா உடையவன் ஒரு கா
11 சும் பா தோயலுக்கு பாவால் ஒரு
12 ஆளுக்கு வருங்காசும் பா உடையவன் தானே
13 பிடித்துக் குடுப்பானாகவும் இத்திருப்பணிக்கு
14 இலங்கணஞ் சொன்னாருண்டாகில் சிவத்துரோகி
15 யும் . . த்துரோகிகளும் இராசதண்டப்படு
16 வார்களாகவும் சம்மதித்து ஒருமைப் பிடிபாடு
17 பண்ணினோம் கைக்கோளரும் கைக்கோளமுத
18 லிகளும் மேற்படிக் கோயில் திருப்பணி உள்ளன
19 இத்தனைக்கும் இம்முதல் சந்திராதித்தவரை செல்வ
20 தாக சம்மதித்தோம் இவ்வனைவரோம் இப்படி
21 க்கு இவை அபிமான பூஷண வேளான்
22 எழுத்து

# 12. மூன்று கொங்குக் கல்வெட்டுகள்

செ. இராசு

## 1. பிடாரியூர்க் கல்வெட்டு

பெரியார் மாவட்டம் பெருந்துறை வட்டத்தில் சென்னிமலை-பெருந்துறை சாலையில் சென்னிமலையின் வடக்கே மூன்று கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ள சிற்றூர் பிடாரியூர்.

அங்குள்ள தொன்மையான அம்மன் கோயில் திருப்பிராட்டியம்மன் கோயில். அதன் கருவறை வாசல் நிலையில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு இது. கொங்குச் சோழ மன்னன் வீரராசேந்திரன் காலத்தது. ஆண்டு கி. பி. 1225.

கொங்கு நாட்டின் பல இடங்களில் கல்வெட்டின் தொடக்கத்தில் காணப்படும் 'நன்மங்கலஞ் சிறக்க' என்ற தொடர் இக்கல்வெட்டிலும் காணப்படுகிறது. பூந்துறை நாடு 'பழம் பூந்துறை நாடு' என்று சுட்டிக் கூறப்படுவது சிறப்புக்குரியது.

பிடாரி - பிராட்டி என இன்று மாறியுள்ளது. பிடாரியின் பெயரால் ஊர்ப் பெயர் ஏற்பட்டுள்ளது. தேவரடியாரில் பெண்பாலர் 'மாணிக்கம்' அல்லது 'மாணிக்கி' என அழைக்கப் பெறுவர். இங்கு ஆண் தேவரடியார் 'மாணிக்கன்' என்று குறிக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. மாணிக்கச் சதிரன் என்பதில் 'மாணிக்கம்' என்பதை இயற்பெயராகவும் கொள்ளலாம்.

1 ஸ்வஸ்திஸ்ரீ ந
2 ன்மங்கல
3 ஞ் சிறக்[க] வீரரா
4 ஜேந்திர தேவற்கு
5 யாண்டு பதிந்
6 நைஞ்சாவது
7 க்கெதிர் மூந்றா
8 வது மேகரை
9 ப் பழம் பூந்து
10 றை நாட்டு பி
11 டாரியூர் பிடா
12 ரி கோயிற் தி
13 ரு நிலைகால் செ
14 ய்வித்தேன் யி
15 வ்வூ[ர்] தேவரடிய
16 ாரில் கரமிண்ட
17 னான மாணிக்க
18 ச் சதிரனேன்

## 2. நாச்சிப்பாளையம் கல்வெட்டு

கோவை மாவட்டத்தில் பல்லடம் வட்டத்தில் காங்கயம்-திருப்பூர் நெடுஞ்சாலையில் உள்ள நாச்சிப்பாளையத்தின் கிழக்கே ஒரு கி.மீ. தொலைவில் தரிசாகக்கிடக்கும் நத்தக்காட்டில் 2½ மீட்டர் உயரமுள்ள தூண் ஒன்றில் நாள்குபுறமும் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.

இக்கல்வெட்டில் காணப்படும் கொடை சர்க்கார் பெரியபாளையம் சுக்ரீவேசுரர் திருக்கோயிலுக்குரியது. அக்கோயில் சுந்தரர் தேவாரத்தில் வைப்புத்தலமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ''கொங்கில் குறும்பில் குரக்குத்தளி'' என்பார் சுந்தரர். அதனால் கல் முகப்பில் சுக்ரீவன் (குரங்கு) அமர்ந்துள்ள காட்சி பொறிக்கப்பட்டுள்ளது. மேலும் கொங்கு நாட்டில் சேவூரில் வாலீசுரமும், அனுமன்பள்ளியில் அனுமீசுரமும் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இக் கல்வெட்டில் கோனேரின்மை கொண்டான் என்று குறிப்பிட்டிருந்தாலும் காலிங்கராயன் முதலிய அலுவலர்களின் கையொப்பம் மூலம் இக் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள அரசன் கொங்குப் பாண்டியன் வீரபாண்டியன் (1250–1285) என ஊகிக்கலாம். இக் கல்வெட்டின் காலம் 1259 ஆகும்.

சுக்ரீவன் – சூலம் – தண்டு

1 திரிபுவனசக்ரவத்தி கே
2 ானேரின்மை கொண்ட
3 ாந் முகந்தனூர் குரக்குத்த
4 ளி ஆளுடைய நாயனார்
5 கோயித்தானத்தாற்கு
6 இன்னாயனாற்கு அமுதுப
7 டி உள்ளிட்டு வேண்டும்
8 வெஞ்சனங்களுக்குந்
9 திருப்பணிக்கும் வலிப்
10 புக்கா நாட்டு அனாதிபா
11 மாக கிடந்த பெரும்புன
12 முந் நத்தந் தான்கெல்லை
13 க்குட்பட்ட நீர்நிலமுங்
14 கருஞ்செய்யும் புன்செ
15 ய்யுந் நத்தங்களுந் தோட்
16 டங்களுங் குளமுங் குள
17 ப்பரிப்பும் உட்பட்ட

இரண்டாம் பக்கம்

18 நிலத்தில் பழ
19 ந் தேவதானம்
20 பள்ளிச்சந்தம்
21 நீக்கி உள்ள நில
22 த்தில் இறைபுரவு
23 சிற்றாயம் எலவை
24 உகவை ஒட்டச்சு
25 உப்பாயக்குடிப்
26 பணம் திருச்சூல
27 வரி ஓலைச்சம்ப
28 டம் இறைக்கண்
29 பு காணம் இறை
30 எண்ணை நெய்
31 மன்றுபாடு தெ
32 ண்டகுற்றஞ் சு
33 ங்கஞ் சாரிகை

மூன்றாம் பக்கம்

34 உள்ளிட்ட அனைத்து
35 வற்கக் கறைகளும்
36 உட்படத் திருநாமத்
37 துக்காணி யிறையி
38 லியாகத் தந்தோம் இப்ப
39 டிக்குச் சந்திராதித்யவரை
40 செல்வதாகக் கல்லிலும்
41 செம்பிலும் வெட்டிக்
42 கொண்டு சுந்தரபாண்
43 டிய நல்லூரென்று குடி
44 ஏற்றி அனுபவிக்க இ‌றை

45 வ காலிங்கராயந் எழுத்து
46 இவை கச்சியராய
47 ந் எழுத்து வருசம் 9 நா

நான்காம் பக்கம்

48 ள்* 139 இவை
49 விழுப்பாதராய
50 ன் எழுத்து இது
51 பன்மாகேச்ஂவ
52 ர ரக்ஷை இது
53 அழிவு செய்வாந்
54 ஏழ்ழெச்சமறுவ்
55 வாந் உ

* வருசம், நாள் இவை குறியீட்டில் உள்ளன.

## 3. பாப்பினிக் கல்வெட்டு

இரா. ப. கருணானந்தம், செ. இராசு.

பெரியார் மாவட்டம், காங்கயம் வட்டம், பாப்பினியில் நத்தக்காடு என்னும் மேடான பகுதியில் உள்ள சாம்பல் மேட்டில் குத்துக்கல்லில் இருபக்கமும் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டு.

நீலகிரி சாதாரன் கோட்டை என வழங்கப்பெற்ற டணாயக்கன் கோட்டையில் போசள மன்னன் மூன்றாம் வீரவல்லாள தேவனின் (1291-1344) மகாபிரதானியாக நிருவாகம் செலுத்தியவன் மாதவத் தென்னாயக்கன். கொங்குப் பகுதியை வென்று ஆட்சி புரிந்ததால் அவனுக்குக் 'கொங்கர் மாரி' என்ற பட்டப்பெயர் உண்டு.

காங்கய நாட்டார் 14 ஊரினரும் கூடி சாதாரன் கோட்டை மாதவப் பெருமாள் கோயிலுக்குப் 'பாற்பனி' யைக் கொடையாகக் கொடுத்ததுடன் அவ்வூருக்குக் 'கொங்கர்மாரி மாதவ நல்லூர்' என்றும் பெயரிட்டனர். ஆனால் அப்பெயர் இன்று வழக்கில் இல்லாமல் பழம் பெயரே வழங்குகிறது.

கல்வெட்டு மூன்றாம் வீரவல்லாளன் காலக் கல்வெட்டாக இருப்பினும் அரசன் பெயரோ ஆட்சியாண்டோ எதுவுமில்லை.

1 ஸ்வஸ்திஸ்ரீ
2 நீலகிரி சா
3 தாரன் கே
4 ாட்டையில்
5 நாயனார் ஸ்ரீ
6 மாதவப் பெ
7 பருமாளுக்
8 குக் காங்
9 கய னாட்டா
10 ர் திருவிடை
11 டயாட்டமா
12 க விட்ட பா
13 ற்பனியான
14 கொங்கர் ம
15 ாரி மாத
16 வ நல்லூர்
17 இதற்கும்
18 னாள்
19 கெல்
20 லைக்
21 குட்ப
22 ட்ட
23 ார்க்
24 கும்*

* கல்வெட்டு முற்றுப் பெறவில்லை.

# புதிய கல்வெட்டுகளும் புதிய செய்திகளும்

இல. தியாகராசன்

## 1. ஜெயங்கொண்டசோழபுரம்

விருத்தாசலம் விருத்தகிரீசுவரர் கோயிலிலிருந்து கண்டறியப் பட்டுள்ள முதலாம் இராசாதிராசனின் 27-வது ஆட்சியாண்டுக் கல் வெட்டு (கி. பி. 1045) ஜெயங்கொண்ட சோழபுரம் பற்றிய புதிய செய்தியைத் தருகிறது.

இவ்வூரின் பழைய பெயர் நென்மேலி என்பதாகும். ஜயங் கொண்ட சோழன் என்பது முதலாம் இராசாதிராசனின் பட்டப்பெய ராகும். இவரின் காலத்தில் இவ்வூர் புதிய வணிக நகரமாக எழுந்த தால் இவ்வூர் இம்மன்னரின் பெயராலேயே பழைய பெயருடன் சேர்த்து 'நென்மேலியான ஜயங்கொண்ட சோழபுரம்' என அழைக் கப்பட்டது. கல்வெட்டில் காரைக்காட்டுப் பகுதியைச் சேர்ந்தது என இவ்வூர் குறிப்பிடப்பெறுகிறது. இப்பகுதியில் காரைக்காட்டு சென்னி வனக் கூற்றம், காரைக்காட்டு துண்டக் கூற்றம் எனும் இரண்டு நாட்டுப் பிரிவுகள் இருந்துள்ளன. இவ்வூரின் அருகிலுள்ள காவனூர், நல்லாம்பாளையம் முதலிய ஊர்கள் சென்னிவனக் கூற்றப்பகுதியில் உள்ளதால் ஜயங்கொண்ட சோழபுரமும் இந்நாட்டுப் பிரிவிலமைந் திருந்த ஊரெனக் கொள்ளலாம்.

1-22 ஸ்வஸ்திஸ்ரீ திங்களேர்தரு (மெய்கீர்த்திப்பகுதி) . . . ஜயங் கொண்டசோழன் எனும் உயர்

23 ந்த பெரும்புகழ் கோவிராஜகேசரி பந்மராந உடையார் ஸ்ரீராஜாதிராஜ தேவற்க்கு

24 யாண்டு 27-ஆவது காரைக்காட்டு நென்மேலி

25 யாந ஜயங்கொண்ட சோழபுரத்துப் பள்ளி கயிறூர் கலியநான முடிகொண்ட

26 சோழ முத்தரையந் மகந் கலியன் கயிறூர்க்கும் கலியன் வாணிய நுக்கும் வை

27 த்த திருநுந்தா விளக்கு ஒந்றுக்கு விட்ட பசு 32 இவை பந்மா ஹேசுவ்ரக்ஷை

## 2. இருங்கோளப்பாடி மேற்புலியூர்நாடு

சங்க காலச் சோழ வேந்தன் கரிகாலனை எதிர்த்துப் போரிட்ட வீரமிக்க குறுநில மன்னர்களில் இருங்கோவேள் என்பவரும் ஒருவர். இம்மன்னராண்ட பகுதி சோழர்காலக் கல்வெட்டுகளில் இருங்கோளப்

பாடி (இருங்கோவேள்பாடி என்பதன் மரூஉ) எனக் குறிப்பிடப்பெறுகிறது. இருங்கோளப்பாடியின் ஓர் உட்பிரிவான கீழ்ப்புலியூர் நாடு பற்றி முதலாம் குலோத்துங்கனின் 38-வது ஆண்டுக் கல்வெட்டு (348/1917) கூறுகிறது.

இங்கு விருத்தாசலம் கோயிலிலிருந்து கண்டறியப்பட்டுள்ள முதலாம் இராசாதிராசனின் 27-வது ஆண்டுக் கல்வெட்டு மேற்புலியூர் நாடு எனும் மற்றொரு பிரிவு பற்றிக் கூறுகிறது.

1 ஸ்வஸ்திஸ்ரீ திங்களேர்தரு (மெய்க்கீர்த்தி) . . .
ஸ்ரீராஜாதிராஜதேவற்க்கு
30 யாண்டு 27-ஆவது இரு
31 ங்கோளப்பாடி மேற்புலியூர் நாட்டு காரிபாக்கபூண்டி
உடையான் விண்
32 ணன் தேசவிடங்கந் பிரிதி வைய்த்த திருநொந்தாவிளக்கு ஒன்றுக்கு
36 விட்டபசு 32

## 3. கண்ணாலக்காணம்

பெரம்பலூர் வட்டம் வாலிகண்டபுரத்தில் உள்ள வாலீசுவரர் கோயில் முதலாம் பராந்தகசோழரின் காலத்தில் கட்டப்பெற்றதாகும். இக்கோயிலின் திருச்சுற்றாலையை கி. பி. 938-இல் இம்மன்னரின் மகன் இராஜாதித்தனின் படை கரணநாயகம் குமாரடி திருவரங்கன் என்பவர் கட்டியுள்ளார். இவ்விளவரசரின் கீழ் பணியாற்றிய அதிகாரி ஒருவர் வாலிகண்டபுரம் பகுதியில் கண்ணாலக்காணமாக கால் பொன்னும், நான்கு நாழி புது அரிசியும் வசூலித்துள்ளார். இதனை பராந்தகசோழரின் 38-வது ஆட்சியாண்டு (கி. பி. 945) கல்வெட்டு கூறுகிறது.

1 ஸ்வஸ்திஸ்ரீ மதிரை
2 கொண்டகோப்பரகேசரி
3 பன்மற்கு யாண்டு 38-ஆ
4 வது பிள்ளையார் ராஜாதித்ததேவர்க்கா
5 ய்க் கண்ணாலக்காணம் புக்க புருசகுட்டை
6 ஆள்கின்ற கோதண்டமாயி
7 லட்டி கன்மி வடுகன் கோமளக்கண்ண
8 ன் வன்னாட்டு நாட்டார்க்கு ஒட்டி
9 இட்டுக்குடுத்த பரிசாவது
10 இந்நாட்டு ஒரு கண்ணாலத்தா
11 ற் காற்பொன்னும் புத்தரிசி
12 நாநாழியும் புருசக்குட்டை . . .

## 4. குறுநில அரசுகள் ஆதிக்கம் பெறல்

திருச்சி மாவட்டம், பெரம்பலூர் வட்டம், வரகுபாடியில் கண்டு பிடிக்கப்பட்ட மூன்றாம் ராஜராஜனின் (கி. பி. 1218) கல்வெட்டு சோழராட்சியின் இறுதியில் ஆதிக்கம் பெற்ற குறுநிலத் தலைவர்கள் அடிக்கடி தங்களுக்குள்ளாகப் பூசல் கொண்டதைப் பற்றித் தெளிவாக விளக்குகிறது. இந்தவகையில் குலோத்துங்கசோழ வாணகவரையர் என்ற குறுநில அரசர் பாண்டியராயன் என்ற மற்றொரு குறுநில அரசரோடு பொருததாகவும், இச்சண்டையில் தமக்கு உதவி செய்த ஒளியன்பெற்றான் என்ற வீரனுக்கு கோயில் நிலங்கள் (திருநாமத்துக் காணி) அரசுக்குச் செலுத்தும் வரியான சீகாரியப்பேறு தூதவரி என்ற வரியை வசூலிக்கும் உரிமையை வழங்கியதாகவும் இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. இந்த வீரன் தனக்குத் தரப்பட்ட தண்டேறு வரிசையை (பல்லக்கு ஏறும் உரிமை) வேண்டாம் என்று மறுத்துவிட்டதாகவும் இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. வரி நான்கில் குறிப்பிடப்படும் தொண்டைமானார் குலோத்துங்க வாணகவரையர் நண்பராகலாம்.

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீராஜராஜதேவற்கு யாண்டு 2-வது திருப்பழனத்து உடையார் தெ

2 தாண்டைமானார் பூசற்செய்யவிட்டுக்கிடு இருந்த இடத்து இராவினையாகப் பாண்

3 டியராயன் வந்து வளைத்தவிடத்து ஒளியன் பெற்றாந் ஆரியனைவெட்டிப்

4 பிடித்துக்கிடு வந்து தொ[ண்]டைமானாரோடுங்கூட குலோத்துங்கவாணக

5 வரையர் சீபாததேய் கண்ட இடத்நு இவனுக்கு தண்டேறு வரிசையுங் குடுக்கப்புக்க

6 இடத்து இவ் ஒளியன் பெற்றான் தெண்டனிட்டு அடியேனுக்கு இவை வே

7 வண்டாம் தண்டலையிற் பொய்கை ஈசுவறமுடைய நாயனார் கோ

8 யில் திருக்கற்றளிச் சாத்த அன்நாயநார் திருநாமத் துக்காணியில் பண்

9 டாரத்துக் கிறுக்கிற சீகாரியப்பேறு தூதவரி அடியேனுக்குத் தந்தருள வே

10 வண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய அப்போதேய் புரவரி முதலிகள் நால்வரு

11 ம் எழிதிய எழுத்திட்டு திருவெழுத்துஞ்சாத்தி திருகைப்பிரசாதம் பெற்று விடை கெ

12 ாண்டு போந்தேன் ஒளியன் பெற்றாநேன் இந்த திருநாமத்துக் காணிக்கு ந

13 ன்செய் புன்செய் நந்தம் இதுக்கு விலங்கல் சொல்லுவான் தங்களம் மைக்கு

14 த் தாநே மிணாளன் தன் உடப்பிறந்தாளை பிடிச்சாநாவான் இதுக்கு வி

15 லங்கல் சொல்லாதவன் சீபாதமென் தலைமேலய் உ

## 5. வலங்கை இடங்கைக் கிளர்ச்சி

கீழ்வரும் இரு கல்வெட்டுகளும் 1429 இறுதியில் நடுவில் நாட்டிலும் சோழ மண்டலத்திலும் வரிப்பளுவைச் சுமத்திய நிலக்கிழார்களுக்கும் விசயநகர அரசுக்கும் எதிராகக் கிளர்ந்தெழுந்த வலங்கை இடங்கை அமைப்புக்களின் நடவடிக்கைகள் பற்றியன. இக்கிளர்ச்சி தொடர்பாக தென்னார்க்காடு, திருச்சிராப்பள்ளி, தஞ்சை மாவட்டங்களில் பல கல்வெட்டுகள் ஏற்கனவே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இது தொடர்பான செய்திகள் அறிய பார்க்க கராஷிமா, சுப்பராயலு கட்டுரை*

i) இடம்: திருச்சிராப்பள்ளி மாவட்டம், உடையார்பாளையம் வட்டம், உடையவர்தீயனூர் ஜமதக்னீசுவரர் கோயில் வினாயகர் திருமுன் மேற்கு மற்றும் தெற்குச் சுவர்

காலம்: விசயநகர அரசர் இரண்டாம் தேவராயர், கி. பி. 1429, டிசம்பர் 18. (கிழமை ஞாயிறு; வெள்ளியில்லை.)

1 ஸ்வஸ்திஸ்ரீ
2 மன்மஹாமண்டலீ
3 ச்₀வரந் ஹரிஹர
4 ராயவிபாடந் பா
5 ஷைக்குத் தப்பும்
6 ராயர் கண்டநு
7 வராயர் கண்டன்
8 பச்சிம தக்ஷிண
9 உத்தர ஸமுத்ரா
10 திபன் கண்டநாடுகொண்டு

* 'Valangai Idangai Kaniyalar and Irajagarattar: Social Conflict in Tamil Nadu in the 15th Century' Socio-cultural Change in Villages in Tiruchirapalli District . . . (ILCAA, Tokyo, 1983) pp 133-59,

11 கொண்டநாடு கொடாதா
12 ன் திருபுவநவீரதேவ
13 ராஜமஹாராயர் ப்ருதி
14 விராஜ்யம் பண்ணி
15 அருவாதின்ற ச,கா
16 த்தம் 1351-ன் மேல் செல்லா நின்ற
17 ஸவுமிய ஸம்வத்ஸரத்து
18 தநு தாயற்று
19 அபர பக்ஷ
20 த்து ஸப்தமியும்
21 வெள்ளிக்கிழமை
22 யும் பெற்ற உத்திர
23 த்துநாள் வடகரை
24 விக்ரமசோழ வள
25 நாட்டுக் கிடாரங்
26 கொண்ட சோழவளநா
27 ட்டுக் கட்டளைநாட்
28 டு தீயனூரான மனு
29 குலகேசரிநல்லூர்
30 உடையார் திருவக்
31 கினீச்,வரமுடைய
32 நாயனார் திருக்கோயி
33 ல் திருக்கட்டளை
34 யில் இன்னாட்டு வ
35 லங்கை தொண்
36 ணூற்றெட்டும் இட
37 ங்கை தொண்ணூற்றெட்டும் கூட்ட
38 ம் நிறைவற நிறைந்து
39 குறைவறக் கூடி ஒரு
40 மித்துக் கல்லு வெ
41 ட்டினபடி இன்னாட்
42 டுக்குப் பூறுவம் அற்ற ம
43 ரிஆதி சிக்கரசர் பட்டை
44 யப்படி ஒழிந்து சீவிதம்
45 உடையவர்கள் நெருக்
46 கம் பண்ணி பிறவரி
47 யாலே நாடு நல
48 ங்கி பிறம
49 ண்டலங்குடியா
50 கி ஓடிப்போகையில்
51 மண்டலம் அற்ற மரி
52 யாதி கோபிநாதன் கா
53 லால் இருபத்து நாலு
54 அடியும் விலக்கடியு
55 ம் கோலால் [நாட்ட]
56 ளவு கோலால் அளந்து
57 குடிபயிர் பாத்து
58 ப் பயிர் பூண்ட நி
59 லத்துக்கு சிக்கரசர்
60 பட்டையப்படி
61 யால் உள்ள மரியா
62 தி [ப்படியே] இறு
63 க்கக் கடவோம் ஆகவு
64 ம் இம்மரியாதி
65 ஒழிந்து சீவிதங்
66 களை ஒ
67 ழித்து புறவ
68 ரி குடுக்கக் கட
69 வோம் அல்ல
70 வாகவும் நம்
71 மில் ஒவ்வாமல் புற
72 வரிக்கு இடங்குடு
73 த்தார் உண்டாகி
74 ல் மேற்படக் குத்தி
75 கீழ்படஇழுக்கக்
76 கடவது ஆக
77 வும்

ii) இடம் : திருச்சிராப்பள்ளி மாவட்டம், பெரம்பலூர் வட்டம் அசூர் சொக்கநாதர் கோயில் மகாமண்டபத் தென்சுவர்.

காலம் : சகம் 1350 (1428 டிசம்பர் 24)

1 ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் 1350-தின் மேல் செல்லா நின்ற சௌம்ய வருஷம் மார்கழி மாதம் 27 உ த்ரயோதஸியும் சனிக்கிழமையும் பெற்ற மூலத்து நாள் திருச்சிராப்பள்ளி உசாவடியில் கரிகாலகன்ன வளநாடு ஆன வன்னாட்டு வெண்பாற் நாட்டில் அசுகூரில் வலங்கை தொண்ணூற்று எட்டும் இடங்கை தொண்ணூற்று எட்டும்

2 நிறைவற நிறைந்து குறைவறக்கூடி உடையார் சொக்கனாத நயினார்க் கோயிலில் திருக்கட்டளையில் கல்வெட்டினபடி இந்த நாட்டுக்கு பூறுவம்மற்ற மரியாதி பயிர் வழி கடமை இறுக்கும் போது நஞ்செய்க்கு பாழ்சாவி கழித்து பயிர்கூடின நிலத்துக்கு வேலி ஒன்றுக்கு அன்பது பணமும் புன்செய் வரகு கேழ்வரகுக்கு பாழ்சாவி கழித்து பயிர்கூடிய நிலத்திலே

3 பத்திலொன்று கழித்துப் பயிர் கூடின நிலத்துக்கு வேலி ஒன்றுக்கு இருபத்து அஞ்சு பணமும் இளவரிசை ஆன பல பயிருக்கும் இள வரிசைத் துண்டம் கால்வாசி கழித்து பயிர்கூடின நிலத்திலே பத்தில் ஒன்று கழித்து பயிர் கூடின நிலத்துக்கு வேலி ஒன்றுக்கு இருபத்து அஞ்சு பணமும் வான்பயிர் ஆன செங்கழுநீர் கரும்பு கொழுந்துக்கு நூறு குழிக்கு

4 அஞ்சு பணமும் வாழை மஞ்சள் இஞ்சி நூறு குழிக்கு இரண்டரை பணமும் கமுகு தென்னமரத்துக்கு தலை கூடின முதலிலே மரம் ஒன்றுக்கு அரைக்கால் பணமும் ஆட்டைக் காணிக்கைக்கு இருநூற்று இருபது பொன்னும் மகமை தலையாரிக்கத்துக்கு எண்பது பொன்னும் பட்டடைக்குடி ஆன செட்டிகள் கைக்கோளர் சேனை கடையார் வா

5 ணியர் பேர்க்கு பேர் ஒன்றுக்கு இரண்டரைப் பணமும் இடையர் வலையர் கண்மாளர் குடிமக்கள் . . . . பறையர் பேற்க்கு பேர் ஒன்றுக்கு இரண்டு பணமும் புன்பயிற் செய்தால் புனத்துக்கு ஒரு பணமும் இம்மரியாதி இம்முதல் குடுக்க கடவோமாகவும் இது ஒழித்து வேறு புறமுதல் புதுவரி என்று குடுக்கக் கடவோம் அல்லவாகவும்

6 இப்படிக்கு இக்கல்வெட்டின்படி செய்யாமல் இருந்தோர்க்கு உடன்பட்டு கல்வெட்டை அழித்து செய்வார்கள் உண்டானால்

3

அவர்களைத் தீர விளங்கி மேற்படக் குத்தி கீழ்பட இழுத்துப் போடக்கடவோம் ஆகவும் இந்த கல்வெட்டை அழித்தவர்கள் கெங்கைக் கரையிலே கபிலையைக் கொன்ற பாவத்திலே போகக் கடவர்கள் ஆகவும் சுபமஸ்து

---

## 14. திருப்பைஞ்ஞீலி கல்வெட்டுகள்
## i) மையக்கோயில் கல்வெட்டுகள்

அர. அகிலா, மு. நளினி, இரா. கலைக்கோவன்.

முதற் கல்வெட்டு

திருப்பைஞ்ஞீலி இறைவனுக்கு இரண்டு சங்கராந்தியிலும் திருமஞ்சன முழுக்காட்டவும், பரிசட்டம் சாத்தவும், அதுபோழ்து திரு ஆராதனை செய்யும் அந்தணர்க்கு அரைக்கால் பொன் கொடுக்கவும், எட்டு அந்தணரை உண்பிக்கவும் செம்மை அரங்கன் பழுவூர் நக்கன் பொற்கொடை தந்துள்ளார். இக்கல்வெட்டு மையக்கோயில் மகாமண்டபத்தின் வடக்கு அடித்தளத்தில் காணப்படுகிறது. காலம் :கி.பி.1012.

1 ஸ்வஸ்திஸ்ரீ திருமகள் போல . . . . [மெய்க்கீர்த்தி]

2 . . . . ஸ்ரீகோவிராஜராஜகேசரிபன்மரான ஸ்ரீராஜராஜ தேவற்கு யாண்டு 27ஆவது இவ்வாண்டு மகர நாயற்று இற்றைக் கோட்டு நாள் 227னால் கேரளாந்தக வளநாட்டு விளத்தூர் நாட்டு தண்டுறை உடையான் அரங்கன் பழுவூர் ந . . . . இராஜாச்₀ரைய வளநாட்டுத் தநியூர் திருவெள்ளறைத் திருப்பைஞ்ஞீலிப் பரமேச்₀வரர்க்கு உத்தரமயன ஸங்

3 கராந்தி . . . . ளம்புக்கருளவும் இவ்விரண்டு ஸங்கிராந்தியிலும் எண்மர் ப்₃ரஹ்மணர் உண்ணவும் வைத்த பொந் திருவெள்ளறைக் கல்லால் நிறை பதிநேழு கழஞ்சரையேய் மூன்று மஞ்சாடியும் ஆறு மாவிநால் கழஞ்சின்வாய் திங்கள் இரண்டு மாப் பொந் பலிசையாக ஆண்டுவரை வரும் பலிசை

4 . . . . றெட்டு கலைசம் . . . . காவேரி நின்று திருமஞ்சந நீர் கொடுவருவதற்கும் திருமஞ்சனத்துக்கு வேண்டும் நெல் தேன் சலபவித்ரமுள்பட கலைசமுடப் புடவையு மற்றும் வேண்டும் ஸ்தமனத்₃ரவ்யமெல்லாம் குறைவறக் கொண்டு திருமஞ்சனம் புகுவிப்பதற்கும் பரிசட்டம் ஒந்நு சாத்துவதற்கும் திருவாராதினை செய்த ப்₃ராஹ்மணநுக்கு அரைக்கால் பொந் கொடு பூஜிப்தற்கும்

5 . . . . . . காணத்தால் நாழியும் கலைசத்தின் கீழட்டவேண்டும் நெல்லும் திருமுளையட்ட பாலிகை கீழட்ட வேண்டும் நெல்லும் திருமேய் பூச்சும் திருப்புகைக்கு சிதாரியும் திருக்காப்பு நாண்வைக்க

அரிசிக்கும் திருப்பள்ளித் தாமபறிப்பாந்நுக்கு நெல்லும் அயனம் தோறும் . . நால்வர் ப்₃ராஹ்மணர் காணத்தால் தூணி

6 . . . . னேழு கழஞ்சேய் முக்காலே நாலு மஞ்சாடி பொன்நும் திருவெள்ளறைக் கல்லால் செம்மை அரங்கன் பழுவூர் நக்கனிடை எடுப்பித்துக்கொண்டு இப்பொனின் பலிசையால் இரண்டு அயன மும் இப்பரிசேய் சந்திராதித்தவற் செய்விப்போமானோம் திருவெள்ளறை மேற்சேரி மணியம்பலத்து ஸபை₄யோம்

இரண்டாம் கல்வெட்டு

திருப்பைஞ்ஞீலிக் கோயிலில் இருந்த மணவழகர் கோல இறைவன் இறைவி செப்புத் திருமேனிகள் ஆடித்திங்கள் உத்திராடத் திருநாளன்று தீர்த்தமாடியருளவும், இராத்திருவிழாவுக்கு அத்திருமேனிகள் எழுந் தருளும்போது விளக்கெரிக்க எண்ணெய்க்கும், அதுபோழ்து செய்யப் படும் படையல் மற்றும் பிற செலவுகளுக்குமாய் இருபத்துமூன்று கழஞ்சு பொன்னை சாத்தன் பசுவதியான திருவெள்ளறை மாயிலட்டி கொடையாக அளித்த தகவலைத் தரும் இக்கல்வெட்டு மகாமண்டபத் தின் தெற்கு அடித்தளத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. காலம்: கி.பி.1020.

1–3 ஸ்வஸ்திஸ்ரீ திருமந்நி வளர . . . . (மெய்க்கீர்த்தி)

4 . . . . கோப்பரகேஸரிபந்மராகிய ஸ்ரீ இராசேந்திர சோழ தே₃வற்கு யாண்டு 8 ஆவது இராஜாச்₂ரய வளநாட்டுத் தநியூர் திருவெ

5 ள்ளறை திருப்பைஞ்ஞீலி மணவாளர்க்கும் உமாப₄ட்டாரகியார்க் கும் ஆடித்திங்கள் உத்திராடத் திருநாள் தீர்த்தமாடியருளிப் பெருந்திருவமுது செய்தருளவும் இராத்திருவிழா வெழுந்தருள திருவிளக்கு எண்ணைக்கும் வைய்த்தாந் தினைபல்லூர்

6 உடையாந் சாத்தந் பசுவதியாந திருவெள்ளறை மாயிலட்டி வைத்த பொந் கழஞ்சில் போத்தும் உரையும் துளையும் வழுவாதந திருவெள்ளறை கல்லால் நிறை 23ம் இருபத்து முக்கழஞ்சு பொந்நுக்கும் பலிசையாவது இவ்வாட்டை ஆடி முதலாக கழஞ்சித் வாய்த் திங்கள் இரண்டு மாப் பொந் பலிசையாக

7 வந்த பலிசை பொந் முக்கழஞ்சே ஒந்பது மஞ்சாடிப் பொந்னுக்கும் கழஞ்சு பொந்நுக்குக் காண காலால் ஐய்ங்கல அகத்தால் வந்த நெல்லு* பதின் ஏழுகலநேய் முக்குறுணி நெல்லும் கொண்டு

* கல்வெட்டில் இந்த இடத்தில் நெல்லைக் குறிக்கும் குறியீடு மட் டுமே உள்ளது.

இநெல்லில் பெருந்திருவமுதுக்கு அரிசி கலத்துக்கு நெல்லு இரு கலநே தூணி பதக்கும் பருப்பு அமுது குறுணிக்கு நெல்லுத்

8 தூணிக்கு நெல்லு தூணி நாஞழியும் பெருபயறு நாநாழிக்கு நெல்லு குறுணி இரு நாழியும் சர்கரையது அமுது செயவும் புளிங் கரியமுதுக்குமாக நாஞழிக்கு நெல்லு தூணியும் நெயமுது நாஞழிக்கு நெல்லு இருதூணியும் கரியமுதுக்கு நெல்லு தூணி பதக்கும் வாழை பழ அமுது இரு

9 நூற்று முப்பதுக்கு நெல்லு ஐய்ங்குறுணி அறுநாழியும் கடுகுக்கு இரு நாழிக்கு நெல்லு தூணியும் தயிரமுது பதக்குக்கு நெல்லு தூணியும் உப்பு அமுதுக்கு நெல்லுக் குறுணியும் அடைக்கா யமுது நூறுக்கு நெல்லுக் குறுணி இரு நாழியும் இலையமுது ஐஞ்சு பற்றுக்கு நெல்லு குறுணி யெழுநாழியு

10 ம் திருவமுது அடுவாநுக்கு நெல்லு தூணியும் ஆற்றில் திருமஞ்சன குடஞ்சுமப்பார் இருவர்க்கு நெல்லு பதக்கும் திருவமுது அட நீர் அட்டுவார்க்கு நெல்லு பதக்கும் விறகு இடுவார்க்கு நெல்லுப் பதக்கும் திருப்பாவாடை 1க்கு நெல்லு இருதூணி குறுணியும் சாத்தியருள திருப்பரி சட்டம் 1க்கு நெல்லு இரு கலனே தூ

11 ணிப்பதக்கும் திருவாராதிநை செயும் நம்பிக்கு பூசினைக்கு நெல்லு எழு குறுணி நாழியும் திருப்பதியம் விண்ணப்பஞ் செய் வார்க்கு நெல்லு இரு தூணிக் குறுணியும் கலமிடும் குசவநுக்கு நெல்லு தூணியும் திருப்பளிதாமத்துக்கு நெல்லுக் குறுணியும் வாழை குருத்து கொடுவருவானுக்கு நெல்லு* எழு நாழியும் இரா திருவிழா எழு

12 ந்தருன திருவிளக்கெண்ணைய் முப்பத்திரு நாழிக்கு நெல்லு ஐய்ங்கலனே தூணியும் ஆக இப்பொந்நிந் பலிசையால் இநெல்லு பதிநேழு கல நெல்லுக் குறுணியும் கொண்டு இப்படி சந்திராதித் தவர்ச் செலுத்துவோமாநோம் திருவெள்ளறை மணியம்பலத்து சேரிப் பெருமக்களோம் இது பந்மாயேசுவர ரக்ஷை

மூன்றாம் கல்வெட்டு

திருப்பைஞ்ஞீலி கோயிலுக்கு ஐவர் நிலம் விற்றுக் கொடுத்த செய்தியைத் தரும் இக்கல்வெட்டு முதல் திருச்சுற்றின் கிழக்குச் சுவரில் அமைந்துள்ளது. குனிக்கும் பிரான், வடவாயில் நம்பி, வடகோபுரமுடையான் போன்ற பெயர்கள் ஆய்வுக்குரியன.

* குறியீடு

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்ரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு இருபத்தாறாவது மேஷ நாயற்று அபர

2 பக்ஷத்து சத்தமியும் வியாழக்கிழமையும் பெற்ற திருவோணத்து நாள் வடகரை இராசராச வளநாட்டுப் பாச்சில் கூற்றத்து

3 மேல்பிலாற்று நெல்வேலியில் காணியுடைய புள்ளன்மங்கலத்து சீரிளங்கோபட்டனும்

4 சாத்தனூருடையான் ஈசன் திருவரங்கப் பெருமாளான அழகிய மணவாள வேளானும் நல்வயலுடையான்

5 பெரியாந் வடகோபுரத்தாழ்வானும் நென்மலி உடையான் குனிக்கும் பிராந் வடவாயில் நம்பியும் ஆலங்குடையா

6 ன் செந்துறை பெரியாழ்வானும் இவ்வனைவோம் இந்நாட்டு வட வழி நாட்டு திருப்பைஞ்ஞீலி உடைய நாயனார்

7 கோயில் ஆதிசண்டேச்ஂவர தேவற்கு நாங்கள் நில விலை ப்ரமாண இசைவு தீட்டுக் குடுத்த பரிசாவது எங்கள் காணியான . . . .

8 கானுக்கு தெற்கும் மேல்பாற் கெல்லை செட்டி மங்கலத்து எல்லைக்குக் கிழக்கும் தென்பாற் கெல்லை செட்டி மங்கலத்து . . .

9 க்கு வடக்கும் மேற்கடையத் தந்த புன்செய் குழி 1,000 இக்குழி ஆயிரமும் விற்றுக் கொடுத்துக் . . . .

10 சைந்த விலைப் பொருள் அன்றாடு நற்காசு 500 இக்காசு ஐஞ் ஞூறும் ஆவணக்களியே காட்டேற் . . . .

11 டு விற்று விலை ப்ரமாண இசைவு தீட்டுக் கொடுத்தோம் ஆதிசண் டேசுவர தேவற்கு இவ்வனைவோம் இந்த . . . .

12 க்காசு ஐஞ்ஞூறுமே விலையாவுதாகவும் இதுவே விலை ப்ரமாண இசைவு தீட்டாவுதாகவும் இதுவே

13 செலவோலை ஆவுதாகவும் இதுவல்லது வேறு பொருள் மாவறுதிப் பொருள் செலவோலை காட் . . . .

14 ம் இப்படி இந்த புன்செய் குழி ஆயிரத்துக்கும் இக்காசு ஐஞ்ஞூறும் விலைக்குற விற்று பொருளறக் கொண்டு விற்று . . . .

15 றாகக் கொடுத்தோம் ஆதிசண்டேச்ஂவர தேவற்கு இவ்வனை வோம் இந்த புன்செ குழி ஆயிரத்துக்கும் இக்காசு ஐஞ்ஞூ . . .

16 ண இசைவு தீட்டுக் குடுத்தோம் உடையார் திருப்பஞ்ஞீலி உடைய நாயனார் கோயில் ஆதிசண்டேசுவர தேவற்கு சீரிளங்

17 கோ பட்டனும் சாத்தனுடையானான திருவரங்க பெருமாள் அழகிய மணவாள வேளானும் நல்வயலூர் உடையான்

18 . . . . . . . . . . . . . . . . .

19 இவர்கள் சொல்ல் இப்பிரமாணம் எழுதினேன் திருவெள்ளறை மத்தியதந்

20 திருப்பைஞ்ஞீலியுடையான் உய்யக் கொண்டானான பண்டிதப் பிரியன் எழுத்து

21 இப்படிக்கு இவை நல்வடலூருடையான் வாஸுதேவன் எழுத்து இப்படிக்கு இவை நல்வ

22 யலுடையான் ஆழிகொண்டான் எழுத்து இப்படிக்கு இவை சாத்த னூருடையா

23 ன் ஈசன் திருவரங்கப் பெருமாளான அழகிய மணவாள வேளான் எழுத்து இப்படி

24 க்கு இவை புள்ளமங்கலத்துச் சீரிளங்கோப்பட்டன் எழுத்து இப் படிக்கு

25 இவை நென்மலி உடையான் குனிக்கும் பிரான் வடவாயில்

26 நம்பி எழுத்து இப்படிக்கு இவை நல்வயலூருடையான் பெரியான் உன்

27 மய தேவனான கிளினாட்டு வேளான் எழுத்து இப்படிக்கு இவை நென்

28 மலியுடையான் தேவன் வடவாயில் நம்பி எழுத்து இப்படிக்கு இவை

29 நல்வயலூருடையான் பெரியான் வடகோபுரமுடையான் எழுத்து

30 இப்படிக்கு இவை சிற்றறும்பாக்கமுடையான் எழுத்து இப்படிக்கு

31 இவை ஆலங்குடையான் செங்கயாள்வனான பெரிய பிள்ளை எழுத்து இப்

32 படி அறிவேன் . . . . . . முடையான் பெரிய நாட்டு வேளான் எழுத்து இப்

33 படி அறிவேன் . . . . . . சோம வில்லிவாக்க

34 கச் செட்டி

நான்காம் கல்வெட்டு

திருப்பைஞ்ஞீலி கோயில் முதல் திருச்சுற்றின் தெற்குச் சுவரிலுள்ள இக்கல்வெட்டு மூன்றாம் இராசராசன் காலத்தில் பொறிக்கப்பட்டதாகும்.கல்லன் சதுரனான மழைநாட்டு விழுப்பரையனுக்கு தொடையூரைச் சேர்ந்த நால்வர் செய்த நிலவிற்பனையைஇக்கல்வெட்டு தெரிவிக்கிறது. நாற்பது வேலி நிலம் அன்றாடு நற்காசு 10,300க்கு விற்கப்பட்டுள்ளது. இந்த ஆவணம் பிரமாண இசைவுத் தீட்டு என்று குறிக்கப்படுகிறது. என்றபோதிலும், கல்வெட்டு, 'இந்நிலத்துக்கு இவன் வேண்டின போதே பிரமாணம் பண்ணிக் குடுக்கக் கடவோமாகவும்' என்று குறிப்பிடுவது காண்க. இதே போன்ற கல்வெட்டுச் செய்தி ஒன்றிற்கு ஆவணம் முதல் இதழின் ஐயந்தவிர் பகுதியில் அறிஞர்கள் விளக்கம் தந்துள்ளனர் - ஆவணம் அக்டோபர் 1991 இதழ், பக். 93. மூன்றாம் இராசராசன் இராசகேசரியாவார். ஆனால் இக்கல்வெட்டில் அவர் பரகேசரியென்று பிழைபடக் குறிப்பிடப்படுகிறார். இதே தவறு இம் மன்னனுடைய திருஎறும்பியூர், திருஒற்றியூர்க் கல்வெட்டுகளிலும் காணப்படுகிறது. காலம்: கி. பி. 1222.

1-2 ஸ்வஸ்திஸ்ரீ சீர்மன்னி இரு நான்கு (மெய்க்கீர்த்தி)

3 . . . . . கோப்பரகேசரிபன்மராந திரிபுவன சக்கரவத்திகள் ஸ்ரீ இராசராச தேவற்கு யா

4 ண்டு 6வது தனு ஞாயற்று . . . . பக்ஷத்து நவமியும் வியாழக் கிழமையும் பெற்றச் சித்திரை நாள் வடகரை ராஜராஜ வளநாட்டுப் பாச்சில் கூற்றத்து மீபலாற்று தொடையூர் . . . . . . . . . . திருவரங்கப் பெருமாள் சிங்கப்பிள்

5 ளையாந செந்தாமரைக் கண்ண பட்டனுங் கவுசியந் திருவரங்க தேவன் மண்டல புருஷனான சூரியதேவ பட்டனுங் கவுசியந் வீற்றிருந்தான் திருவாளப் பிள்ளையான திருவரங்கமாளி பட்டனும் வாச்சியன்திருவானைக்கா உடையானான சுந்தரதோளுடையாநாந . . . . .

6 மபட்டனும் இவ்வனைவோம் ஸபை$_4$ விலைப் பிரமாண இசைவு தீட்டு இன்னாட்டுக் கலாற் கூற்றத்து நகருடையான் கல்லன் சதுரனான மழை நாட்டு விழுப்பரையனுக்கு நாங்கள் விற்றுக் குடுத்த புன்செய் நிலமாவது நானூற்றுவன் குறிச்சியாந பிள்ளையாண்டான் குறிச்சி செ

7 யந்நு பேர் கூவப்பட்ட நிலத்துக்குக் கீழ்பாற்கெல்லை மீசங் கோட்டுக்கு மேற்கு தென்பாற் கெல்லை பாண்டிகுலாசணிபுரத்து எல்லைக்கு வடக்கு மீபாற்கெல்லை நெல்வேலியெல்லைக்குக் கிழக்கும் வடபாற்கெல்லை திருப்பைஞ்ஞீலி யெல்லைக்குத் தெற்கு மாக யிசைந்த பெ

8 ருநான் கெல்லைக்குள்பட்ட நிலத்து இவற்கு விற்ற நானூற்று குறிச்சியாந பிள்ளையாண்டாந் குறிச்சிய் நத்தமும் நீர் நிலைக் குளமும் இக்குளத்தால் விளையுனிலமும் இது சூழ்ந்த புன்செய்யும் நிலக்குடியும் பெற்ற கோலால் வடகிழக்கடைய உடையார் திருப்பை

9 ஞ்ஞீலியுடைய நாயனாற்கு மிக்குறிச்சியில் விநாயகப் பிள்ளை யாற்குங் கவுசியன் திருவரங்கப் பெருமாள் திருவரங்கச் செல்வ னாந செல்வ நம்பி விற்ற நிலம் நீக்கி இவற்கு விற்ற நிலம் நாற்பதிற்று வேலி இன்னிலம் நாற்பதிற்று வேலிக்கும் இற்றை நாளால் விற்றுக் குடுத்துக் கொள்வதாந எம்மிலிசைந்

10 த விலைப் பொருளன்றாடு நற்காசு 10,300 இக்காசு பதினா யிரத்து முன்னூறு மாவணக்களியே காட்டேற்றி கைச் செலவறக் கொண்டு விற்று விலை ப்ரமாண இசைவு தீட்டுக் குடுத்தோம் கல்லன் சதுரநான மழை நாட்டு விழுப்பரையனுக்கு இக்கவுசியன் திருவரங்கப் பெருமாள் சிங்கப் பிள்ளையான

11 செந்தாமரைக் கண்ண பட்டனுங் கவுசியன் திருவரங்க தேவன் மண்டல புருஷனான சூரியதேவபட்டனுங் கவுசியந் வீற்றிருந் தான் திருவாளப் பிள்ளையான திருவரங்கமாளி பட்டனும் வாச்சியன் திருவானைக்காவுடையாந் சுந்தர தோளுடையாநான சீராமபட்டனு மிவ்வனைவோம் இந்நானூற்றுவன் குறிச்சியான பி

12 ள்ளையாண்டான் குறிச்சியில் நத்தமும் நீர் நிலைக் குளமுமிக் குளத்தால் விளையு நீர்நிலமு இது சூழ்ந்த நிலமும் . . . புன்செய்யு முள்பட இந்நில னாப்பதிற்று வேலிக்கு மிக்காசு பதினாயிரத்து முன்னூறுமே விலையாவுதாகவும் இதுவே பொருள் மாவறிதிப் பொருள் சிலவோலையாவுதாகவு மிதுவல்லது வேறு பொ

13 ருள் மாவறிதிப் பொருள் சிலவோலை காட்டக் கடவதாகவும் இன்னிலம் நாற்பதிற்று வேலியில் மேனோக்கிந மரமும் கீழ் னோக்கின கிணறும் . . . . ச்ரயங்களுமுள்பட விற்றுக் குடுத் தோம் நகருடையான் கல்லன் சதிரனான மழைநாட்டு விழுப் பரையனுக்கு இக்கவுசியன் திருவரங்கப் பெருமாள் சிங்க

14 ப் பிள்ளையான செந்தாமரைக் கண்ண பட்டனும் கவுசியன் திருவரங்க தேவன் மண்டல புருஷனான சூரியதேவ பட்டனும் கவுசியன் வீற்றிருந்தா

15 னு வாச்சியன் திரு . . . . பட்டனும் மிவ்வனைவோம் இந்நிலம் நாற்பதிற்று வேலியும் இவனுக்கு தானதனமிக்கிரியங்களுக்கு உரித்தாவுதாகவும் இந்நிலத்துக்கு இவன் வேண்டினபோதே பிரமாணம் பண்ணிக் குடுக்கக் கடவோமாகவும் ப்ரமா

16 ணம் பண்ணிக் குடுத்திலோமாகில் இசைவு தீட்டுப் பிரமாணமாவ தாகவும் இப்படி சம்மதித்து ப்ரமாண இசைவு தீட்டுக் குடுத்தோம் இவ்வனைவோம் இவர்கள் பணியால் இப்பிரமாண இசைவுத் தீட்டெழுதினேன் இவ்வூர் மத்$_4$யஸ்தன் அம்பிலுடையான் கணக்குக்

17 குமாரமங்கலமுடையான் திருப்பைஞ்ஞீலியுடையானெழுத்து இவை கவுசியன் திருவரங்கப் பெருமாள் சிங்கப் பிள்ளை செந்தாமரைக் கண்ண பட்டநெழுத்து இப்படிக்கு இவை கவுசியன் வீற்றிருந் தான் திருவாளப் பிள்ளையான திருவரங்கமாளி பட்டனெழுத்து இப்படிக்கு இவை கவுசியன் அழகிய பெருமாளா

18 ன திருவரங்க தே . . . . னெழுத்து இப்படிக்கு இவை . . . . டுத்த தெம்பெருமான் திருமுற்றத்து அசனாபோகங் காணியுடைய அனந்த நாராயணன் அ.வாதனெழுத்து இப்படி அறிவேன் செந்திரத்து ஸ்ரீக்ரிஷ்ண பட்டனெழுத்து இப்படிக்கிவை காசிபன் திருநா[டு]டையான் வீற்றிருந்தான் விக்கிரம சோழ

19 ப்$_3$ரஹ்மாராயனெழுத்து . . . . அன்பிலுடையானுய்ய நின்றாடு வாநெழுத்து இப்படியறிவேன் பெரும . . . . ருடையாந் செந்தா மரை கண்ணபிரான் னெழுத்து இப்படியறிவேன் செங்குறக் குடையான் தம்பியாண்டானான மீசங்கிளி நாட்டு விழுப்பரைய

20 னெழுத்து இன்னாயநாற்கு . . . . கும்ப நாயற்று பூர்வ பக்ஷத்து உத்திரட்டாதி நாள் பாண்டி மண்டலத்துப் பெருமாள் . . . .

21 ட்டாதினாள் பாண்டி மண்ட . . . . பாண்டிய தேவர் ம

22 ண்டல முதலிகளில் மலை மண்டலத்துக் காலடிச் சங்கரனு மக னான மழவராயற்

23 நகருடையான் கல்லன் சதிரனான மழைநாட்டு விழுப்பரையனேன் ப்$_3$ரஹ்மதே$_3$யம்

24 தொடையூர் ஸபை₄யார் பக்கல் னான் . . . . இப்ரமாணப்படி நிலம் நாற்பதிற்

25 று வேலிக்கும் இவர் பக்கல் கைக்கொண்ட காசு 10,300 இக்காசு பதி

26 னாயிரத்து முன்னூறுங் கைக்கொண்டு இவர் சொல்ல வடவழி னாட்டு உடை

27 யார் திருப்பைஞ்ஞீலியுடைய னாயனாற்கு திருநாமத்துக் காணி யாக இப்ரமா

28 ணத்திலே திரிவிட்டுக் குடுத்தேன் னாந் நகருடையான் கல்லன் சதிரனான ம

29 ழை னாட்டு விழுப்பரையநேன் இப்படிக்கு இவை நகருடையான் கல்லன்

30 சதிரனான மழைநாட்டு வி[ழுப்ப]ரையனெழுத்து இப்படிக்கு இவை நகரு

31 டையாந் கல்லன் பெரிய தேவனெழுத்து இப்படிக்கு இவை நகருடையாந்

32 கல்லந் பெருமாள் எழுத்து இப்படிக்கு இவை நகருடையான் கல்லந்

33 சீராள தேவனெழுத்து

## (ii) அம்மன் கோயில் கல்வெட்டுகள்

**வே. கல்பகம், இரா. கலைக்கோவன், மு. நளினி.**

முதற்கல்வெட்டு

விசாலாட்சி அம்மன் கோயிலில் கிழக்குச் சுவரிலுள்ள இக் கல்வெட்டு மூன்றும் இராசராசனுக்குரியது. இக்கல்வெட்டில் மன்னரின் ஆட்சியாண்டு 'ஐந்தாவதின் எதிராமாண்டு' என்று பாண்டிய முறையில் குறிக்கப்பட்டுள்ளது. முப்பத்து நாலாயிரம் காசுக்கு நில விற்பனை. விற்றவர் மேலை மாத்தூரைச் சேர்ந்த நாராயண நம்பி சங்கரதேவன். வாங்கியவர்கள் தாயிலு நல்லானான யாதவராயனும் அவர் தம்பி அஞ்சாத பெருமாளான இலங்கேசுவரனும். அஞ்சாத பெருமாள் பைஞ்ஞீலிக் கோயிலில் அறுபத்துமூவரை எழுந்தருளுவித்

திருந்தார். கல்வெட்டில் சோழகோன் மடம் என்ற பெயரில் ஒரு மடம் குறிக்கப்படுகிறது. இதில் வரும் விலைப்பிரமாணத் திரிவுதீட்டு என்ற தொடர் ஆய்வுக்குரியது. காலம்: கி. பி. 1222.

1–6 ஸ்வஸ்திஸ்ரீ சீர்மன்னி திசை விளங்கு . . . . [மெய்க்கீர்த்தி]*

7 [ய கோவிராசகேசரிபன்மரா]ன த்ரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ ராஜராஜ தேவற்கு யாண்டு அஞ்சாவதி னெதிராமாண்டு தநு நாய

8 . . . . யும் சனிக்கிழமையும் பெற்ற அவிட்டத்து நாள் ராஜராஜ வளநாட்டு வெண்ணையூர் னாட்டு மேலை

9 மாத்தூருடைய னாராயண நம்பி சங்கர தேவனேன் வி. [சயாகய] ஜனனாத வளநாட்டு ஆற்றூர் கூற்றத்து ஆறகளூருடை

10 . . . . தாயிலு நல்லானான யாதவராயனுக்கும் இவன் தம்பி அரசனஞ்சாத பெருமாளான இலங்கேச்வரரும் தானில

11 . . . . தீட்டுக் குடுத்த பரிசாவது செந்தாமரைக் கண்ணநல்லூர் விளை நிலம் முப்பத்து னாலரையே மூன்று மா அரைக்

12 . . . . கயு ஊர் நத்தமுங் குளமும் புறணிப் புன்செயும் ஸ்ரீ கோயி லுந் திருமுற்றந் தேவதான திருவிடையாட்ட இறை

13 . . . . டனாந பழுவூர் கிழவனான முதலியாண்டான் பக்கல் விலை கொண்ட படியிலே திரிவிட்டுக் குடுத்து இப்ரமாணத்திலே

14 . . . . [முப்ப]த்துனாலாயிரமும் !இக்காசு முப்பத்து நாலாயிரமு மிவன் பக்கல் கைக்கொண்டு இன்னில விலை ப்ரமாணத் திரி விட்டுக்கு

15 . . . . அரசன் தாயிலு நல்லானான யாதவராயற்குமிவர் தம்பி அஞ்சாத பெருமாளான இலங்கேச்வரற்க்கும் மேலை மாத்தூ

16 . . . . நம்பி சங்கர தேவனேன் இவை என்னெழுத்து இவர்கள் சொல்ல இன்னில விலை ப்ரமாணத் திரிவு தீட்டெழுதினேன் திருவெ

17 . . . . ய பெருமாளான அரிந்தவன் சோழப் பிரியனெழுத்து இப்பிரமாண இசைவு தீட்டின் மேல்பட இச்செந்தா

18 , , , , னாட்டு மேலை மாத்தூருடையா னாராயண நம்பி சங்கர தேவன் பக்கலிப் பிரமாணப்படி காசு முப்பத்துனாலாயிரமு

---

* வரிகளின் தொடக்கம் கட்டடப் பகுதிக்குள் சிக்கியுள்ளது.

19 . . . . அரசன் தாயிலு நல்லானான யாதவராயன் பேரிலும் அரசனஞ்சாத பெருமாளான இலங்கேசுரதேவர் பேரிலுந் தி

20 . . . . மாய் இவர்க அப$_4$ரவத்து என்னுதாயிருந்த இச்செந் தாமரைக்கண்ண நல்லூர் எங்கள் தமையனாரஞ்சாத பெ

21 . . . . யிலில் எழுந்தருளுவி[த்த] எம்பெருமக்கள் அறுபத்து மூவற்கும் அமுதுபடி சாத்துப்படிக்கும் வேண்டுவது பொ

22 . . . . ல செய்த சோழகோன் மடப்புறத்துக்கு ஆக இப்படி நீர் வார்த்துக் குடுத்தேன் அறகளூருடையா னரசன் தாயி

22 . . . . எழுதினேன் திட்டைக் குடியில் கோயிற் காணியுடைய சிவப்$_3$ராமண . . . . ம் பெருமாளான தியாக

இரண்டாம் கல்வெட்டு

மன்னரின் நேரடி ஆணையைக் கூறும் இக்கல்வெட்டும் விசாலாட்சி அம்மன் கோயில் கிழக்குச் சுவரில் உள்ளது. வாணாதராயன் பரிந்துரையால் கோயில் நிலங்கள் தேவதான இறையிலியாக அறிவிக்கப் படும் செய்தியைக் கல்வெட்டு தருகிறது. திருத்தொண்டத்தொகை நல்லூர், தியாகசமுத்திரநல்லூர் என்னும் ஊர்ப் பெயர்கள் குறிப்பிடத் தக்கன.

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் [ராஜ]

2 ராஜ வளநாட்டு உடையார் திருப்பைஞ்ஞீலி உடைய நாயனார் கோ

3 யில் தேவர்கன்மிக்கும் ஸ்ரீமாஹேச்ஂவர கண்காணி செய்வார்களுக் கும் இத்தேவர்

4 க்கு பூசைக்கும் திருப்பணிக்கு உடலாக இந்நாட்டுப் பாச்சில் கூற்றத்து மீபலாற்று

5 திருநாமத்துக் காணியாக ஆறாவது நாளில் விலை கொண்ட செந்தாமரைக் கண்ண [நல்]

6 லூரான திருத்தொண்டத் தொகை நல்லூர் வெட்டிப் பேறுங் கிளி நல்லூரும் திருப்பேற் சோழ எ

7 ல்லைக்கும் கருமாணிக்க நல்லூரும் சிறியான்நல்லூர் எல்லைக்கு கிழக்கும் உலகளங்ககாற

8 ன் நல்லூர் எல்லைக்கு தெற்கும் செட்டி மங்கலமும் இத்தேவர் தேவதான நெல்வேலியும் தியா

9 க சமுத்திர நல்லூரும் எல்லைக்குத் தெற்கும் நடுவு உள்ப்பட விளை நிலம் முப்ப[த்த]ஞ்சே முக்காணி அரை

10 க் காணி முந்திரைக் கீழரையும் குடியிருப்பும் நத்தமும் குளமும் புன்செய் நிலமும் தேவதான இறையிலி

11 யாய் நிற்கக் கடவதாகப் ; பெற வேணுமென்று சோழகோன் சொல்லி வரக் காட்டினாநாக வாணாதராயன் ந

12 மக்குச் சொன்னமையில் இப்படி செய்யக் கடவதாகச் சொன் னோம் இந்நிலந் தேவதான இ

13 றையிலியாக அனுபவிக்க எழுதினேன் திருமந்திர ஒலை . . . . . மூவேந்த வேளானெழுத்து

14 இவை நந்தீ[பராய]ன் எழுத்து . . . . . இவை வாணாதராயன் எழுத்து

மூன்றாம் கல்வெட்டு

கோயிலாருக்கு வாணாதராயன் அனுப்பிய ஒலை கல்வெட்டாக இடம் பெற்றுள்ளது. சிதைந்த இரண்டு பகுதிகளாகக் கிடைத்திருக்கும் இக் கல்வெட்டால் கோயிலுக்குரிய திருநாமத்துக் காணியைத் தேவ தான இறையிலியாக்குமாறு மன்னர்க்குப் பரிந்துரை செய்த வாணாத ராயர் ஓர் ஓலை வழி மன்னனின் ஆணையைக் கோயிலார்க்குத் தெரி வித்துள்ள பாங்கினை அறிய முடிகிறது. இவ்விரண்டு பகுதிகளும் விசாலாட்சியம்மன் கோயிலின் கிழக்குச் சுவரில் காணப்படுகின்றன.

முதற்பகுதி

1 வணாதராஜன் ஒலை . . . . . . . . . . . திருப்பைஞ்ஞீலி உடைய நாயனார் கோயில் ஸ்ரீமாகேச்ுவர கண்காணி செய்வார்களும் தேவர்கன்மி செய்வார்

2 . . . . . . . இன்னாயனார் உடலாகத் திருநாமத்துக் காணியாக விலை கொண்ட விளை நிலம் முப்பத்தஞ்சே முக்காணி அரைக் காணி

3 . . ' . . . வேணு மென்று . . . . . . . இந்நிலம் தேவதான இறை யிலியாக இட்டு ப்ரஸாதஞ் செய்தருளின தி . . . . .

இரண்டாம் பகுதி

1 , . . . . கண்ண நல்லூரான திருத்தொண்டத் தொகை நல்லூர்
2 . . . . . காணி நிலமும் தேவதான இறையிலியாக இடப்பெற
3 . . . . ருப் பணியும் தாழவுட்டாமல் செய்ய பண்ணுவதே இவை வாணாதராஜன் எழுத்து

நான்காம் கல்வெட்டு

புதிய அம்மன் (விசாலாட்சி) கோயிலின் வடக்கு, மேற்குச் சுவர்களில் இக்கல்வெட்டு காணப்படுகிறது. பாச்சில், வணிக கிராமமாக இருந்த செய்தி கிடைக்கிறது. வியாபாரிகளுக்கு வழங்கப்படும் சிறப்புப் பட்டமான 'எட்டி' இக்கல்வெட்டில் குறிக்கப்படும் வணிகரான காமபிரியன் அம்பலவனான வளவகோனுக்குத் தரப்பட்டுள்ளது. இவர் தமக்குச் சொந்தமான ஊரைக் கோயிலுக்குப் பன்னீராயிரம் அன்றாடு நற்காசுகளுக்கு விற்ற செய்தியைக் கல்வெட்டு தருகிறது.
காலம்: மூன்றாம் இராசராசன் கி. பி. 1243.

இக்கல்வெட்டின் முதலிரண்டு வரிகள் முற்றிலுமாய்ச் சிதைந்துள்ளன. 3-18 வரிகள் மெய்க்கீர்த்தியைப் பேசுவதால் முதலிரண்டு வரிகளில் அதன் தொடக்கம் இருந்திருக்கலாம்.

1-18 [மெய்க்கீர்த்தி]
19 கோ இராசகேசரி பந்மரான திரிபுவனச்சக்க
20 ரவத்திகள் ஸ்ரீ ராஜராஜ தேவற்கு யாண்டு 27 ழாவது த
21 னு நாயற்று பூர்வ்வ பக்ஷத்து தெசமியும் செவ்வா
22 ய்க் கிழமையும் பெற்ற இரேவதி நாள் வடகரை
23 இராசராச வள நாட்டுப் பாச்சில் வணிக கிராமத்து வியா
24 பாரி எட்டி சிறுவேளூர் உடையான் காமபிரியன்
25 அம்பலவனான வளவகோநேன் நல் விலைப் பி
26 ரமாண இசைவு தீட்டு இந்நாட்டு வடவழி நாட்டு
27 உடையார் திருப்பைஞ்ஞீலி
28 உடைய நாயனார் கோயில் ஆ
29 திசண்டேசுர தேவர் கன்மிகளு
30 க்கு நான் விற்றுக் குடுத்த ஊர்
31 . . கோட்டையூருடையான்
32 பக்கலு மாத்தூருடையான் பொ
33 ற்கோயில் நம்பி பக்கலும் ப . . . . நறாங்கு
34 டையான் திருமழபாடி உடையான் பக்க

35 லும் நான் விலைகொண்டு உடையேநாய் எ
36 ன்னுதாய் நான் அனுபவித்து வருகிற ஊர்க்
37 கு கீழ்பாற் கெல்லை காட்டுக்குளத்தும் மா
38 றமங்கலத்து எல்லைக்கு மேற்கு தென்
39 பாற் கெல்லை திருப்பஞ்ஞீலி எல்லைக்கு வ
40 டக்கு மேல்பாற் கெல்லை . . . . . . .
41 றத்தும் குன்றத்தூரும் எல்லைக்கு கிழக்கு
42 ம் வடபாற்கெல்லை இந்னாயநார் திருநா
43 மத்துக்காணி மூவாயிர நல்லூரான பஞ்ச[ந]
44 திவாண நல்லூர் எல்லைக்கு தெற்கும் ஆ
45 க இசந்த நான்கெல்லைக்கு உள் ப
46 ட்ட கண்ட நாராயண கோட்டை என்று பேர்
47 [கூவப்பட்ட] வட ஊரில் உள்ள நத்தமும் மனையும் த
48 ன்செய் நிலமும் புன்செய் நிலமும் உள்பட
49 விற்று குடுத்து கொள்வதான எம்மிலிசந்
50 த விலைப் பொருள் அன்றாடு நற்காசு 12,000
51 இந்த காசு பன்னீராயிரமும் கொண்
52 டேன் இக் . . . . . . .
53-56 . . . . . . . . .*
57 செலவறக் கொண்டு விற்று விலை பிரமா
58 ண இசைவுத் தீட்டு குடுத்தோம்
59 திருப்பஞ்ஞீலி உடைய நாய[னார் கோயில்]
60 ஆதி தண்டேசுர தேவர்கன்மிக்கு
61 சிறுவேளூர் உடையான் அம்பலவனான
62 னேன் இவூருக்கு இக்காசு பன்னீராயிரமு
63 ம் விலையாவுவதாகவும் இதுவே பொரு
64 [ள்ம] ாவறிதிப் பொருள் சிலவோலையாவதாகவு
65 இதுவலது வேறு பொருமாவறிதிப் பொ
66 ருள் சிலவோலை காட்ட கடவதல்லவதாகவு
67 ம் இ[வ]ர்[க்கு] இவர் வேணுமென்ற போதே பிர
68 மாணம் பண்ணிக் குடுக்கக் கடவதாகவும் கு
69 டுத்திலோமாகில் இப்பிரமாணம் இசைவு தீட்டு பிரமா
70 ணமாவுதாகவும் இவூர் நத்தமும் மனையு

---

* வரிகள் சிதைந்துள்ளன.

71 ம் நந்செய் நிலமும் புன்செய்[நிலமும்]
72 கரையும் கரைவாய் நீர்க்கோப்பும் மனையு மனை
73 ப் படப்பையும் மேநோக்கின மரமும் கீழ்நோ
74 க்கின கிணறும் மற்றும் எப்பேற்பட்ட உரி
75 மைகளும் அகப்பட விலைக்குற விற்று பொருள
76 ற விற்று விலை ப்ரமாண இசைவு தீட்டு[க்கு]
77 டுத்தேன் உடையார் திருப்பை
78 ஞ்ஞீலியுடைய நாயனார் கோ[யில்]
79 லாதிதண்டேச்ுவர தேவகன்மி
80 [களுக்]கு இந்நாட்டில் சிறுவேளூருடை[யா
81 ன்] அம்பலவனான வளவகோ
82-90 . . . . . . . . .*
91 பிராமணன் திருவுண்ணாழிகை சக்கரவத்தி . . . . .
92 [இப்படி] அறிவேன் சிறுவஞ்ஞூர் கிழவன் தென்னவரையன்
93 னே எழுத்து இப்படி அறிவேன் கொற்றமங்கல மு
94 டையான் . . . . வ வாண்டான் பெரியகோயில் நம்பி எழு
95 த்து இப்படி அறிவேன் குளக்கானத்தூருடையான் . . .
96 வன் தண்டேச்ுவர நம்பி எழுத்து இப்படி அறிவே
97 ன் புல்லைத்து திருமேற் கோயில் தி . . . . . இப்படிக்கு[மா]
98 தேவன் நின்ற நம்பி சிங்கப் பெருமானெழுத்து இப்படி
99 அறிவேன் பெருநல்லூருடையா னெழுத்து இப்படி யறிவே
100 ன் மாத்தூர் கிழவன் சேரகோனெழுத்து இப்படி அறி
101 வேன் மழவதரைய னெழுத்து

## iii) கற்பலகைக் கல்வெட்டுகள்

சுந்தரேசன், ஆ. பொன்மணி, மு. நளினி.

முதற்கல்வெட்டு

திருப்பைஞ்ஞீலி கோயில் வளாகத்தில் அமைந்துள்ள சோறுடைய நாயனார் கோயிலருகே உள்ள கற்பலகையில் இக்கல்வெட்டு காணப் படுகிறது. அருணாசலக் கவுண்டர் மனைவி காமாட்சி அம்மாள், கோயில் திருவிழாச் செலவுக்காக இலுப்பைத் தோப்பைக் கொடையா கத் தந்ததும் அதைப் பரிபாலனம் செய்பவராக ஓமாந்தூர் சிவப்பிரகாச குருசாமிகள் பெயரைக் குறித்திருப்பதும் இக்கல்வெட்டால் அறியப்படும் செய்திகளாம். காலம்: கி. பி. 1891.

* வரிகள் சிதைந்துள்ளன.

1 சிவமயம் கலியுகாதி ௵
2 4992 ஸ்வஸ்திஸ்ரீ
3 சாலிவாகன சகாப்த்தம்
4 1813 இதன் மேற்
5 செல்லா நின்ற விகரு
6 தி ௵ தை மீ" [25] தி திறு
7 குடிக்கிராமம் அருணா
8 சலக் கவுண்டன் பெண்
9 சாதி காமாச்சி அம்மா
10 ள் திருப்பைஞ்ஞீலி ே
11 க்ஷத்திரம் நீலவனேசு
12 வர சுவாமிக்கி யெழுதி
13 வைத்த சிலாசாசனம்
14 திருச்சினாப்பள்ளி [யிபெ]
15 த்திக் கட்[டளை]ச் சேர்ந்த
16 மேல்ப்பத்து கிறாமத்தி
17 ல் நான் சுத்தக் கிரையத்
18 துக்கு வாங்கி விட்டிருக்கு
19 ற சர்வே உநி . . டிசமல்நி
20 லதின் வரும்படியைக் கொ
21 ண்டு மேற்படி சுவாமிக்கி நடக்கும்
22 மகோற்சவத்தில் ஒன்பதா
23 ந் திருவிழா தண்ணீர் பந்
24 தலும் மு[ப்]பதாந் திருவிழா
25 மண்டகப்படியும் மேற்படி க்ஷேத்தி
26 றத்தில் தேவ தீற்த்தத்திற்கு வட
27 க்கு என்னால் வைத்துப் பயிர்
28 செய்த இலுப்பைத் தோப்பின்
29 வரும்படியைக் கொண்டு சுவ
30 ாமிசந்நிதானத்தில் நித்தியதீப
31 வுபையமும் நடந்து வரும்ப
32 டி நான் மனப்பூருவமாக தரு
33 ம சாதனம் செய்து வைத்தே
34 ன் இத்தருமத்தை ஒமாந்தூ
35 ர்[மழு] சிவப்பிரகாச குருசாமி
36 [க]ளார் தினம் திருசுவாமி களும்
37 சிவபுண்ணியத்தில் விருப்ப
38 முள்ள புண்ணியவான்களு
39 ம் பரிபாலனம் பண்ணி வ
40 ருவராக்கவும்

இரண்டாம் கல்வெட்டு

முதற் கோபுரத்தருகே உள்ள கற்பலகையில் இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. துறையூர் கோட்டாத்தூரைச் சேர்ந்த அருணாசல செட்டியார், கோயிலுக்கு இலுப்பைத் தோப்பு தந்ததைக் குறிக்கிறது.

1 திருப்பைஞ்ஞீலி உட
2 யந் நீலிவனசுவ[ாமி]*க்கு
3 துரை ஊர் தாலு
4 கா கோட்டாத்தூரி
5 லேயிறுக்கும் விங்
6 காசிரெட்டி மக
7 ன் அருணாச்செல ரெ
8 ட்டி பிரபாவ ௵
9 ஆவணி மீ" 10ல்
10 திருகட்டளைகி
11 யிலுப்பை மர
12 ம் தோப்பூ [ரு]
13 தறுமம் பரிபா
14 லனம்

# 15. திருப்பத்தூர் கல்வெட்டுகள்

மு. ம. கோபாலன், மு. வீராசாமி, மு. நளினி.

பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டத்திலுள்ள திருப்பத்தூர்* திருத்தளிநாதர் கோயிலில் இருந்து இதுவரையிலும் படியெடுக்கப்படாத பல கல்வெட்டுகளை டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம் தன்னுடைய களப்பணியின்போது கண்டறிந்தது. அவற்றுள் சில இங்கு இடம் பெறுகின்றன.

## முதற் கல்வெட்டு

திருத்தளிநாதர் கோயில் வளாகத்தின் இரண்டாம் திருச்சுற்றில் மடப்பள்ளிக்கு அருகிலுள்ள கிழக்குச் சுவரில் இக்கல்வெட்டு காணப் படுகிறது. பைரவர் திருமுன்னுக்கு முன்பாகவுள்ள மண்டபத்திற்கு அவனி நாராயணன் மண்டபம் என்ற பெயர் இருந்ததையும், திருப்புத் தூர் மூலபருடையார் அம்மண்டபத்தே கூடியிருந்து கோயிலுக்குத் தரப்பட்ட சந்திக்கொடையை ஏற்றுக்கொண்ட செய்தியையும் இக்கல் வெட்டால் பெறுகிறோம். கொடை திருத்தளிநாதருக்கும், அவரது பள்ளியறை நாச்சியார்க்கும், காமக்கோட்ட நாச்சியார்க்குமாய் வழங்கப்பட்டுள்ளது.

1 ஸ்வஸ்திஸ்ரீ உ கோச்சடையபன்மரான திரிபுவனச்சக்ரவத்திகள் ஸ்ரீ வீரபாண்டிய தேவற்கு யாண்டு 4வது கன்னி நாயற்று 4 . . ம் அபரபக்ஷத்து ச . யும் சனிக்கிழமை

2 யும் பெற்ற ரோசனி நாள் கேரள சிங்க வளநாட்டு ப்ரமதே₃யம் திருப்புத்தூர் மூலபருஷ மஹாசபையோம் உடையார் திருத்தளி யாண்ட நா

3 யனார் ஸ்ரீகோயிலில் ஆண்ட பிள்ளையார் திருமண்டபம் அவனி நாராயண[னில்] கூட்டக் குறைவரக் கூடி இருந்து மாடக்குளக் கீழ் மதுரைப் பெரும

4 ாள் திருமடைப்பள்ளி ஆண்டாள் மகன் இராசனான கன்னனும் ஓவாத பாண்டி . . . . இன்னாள் முதல் இன்னாயனாற்கு சந்த்₃ ராதி₃த்யவற் செ

5 ல்வதாக கட்டின ஸந்தி₄க்கு நாங்கள் ஸபைவிலையாக இந் நாயனார் திருநாமத்தால் விற்றுக் கல்வெட்டின நிலமும் ஆதி ஸண்டேஸ்வர விலையாக

6 விற்று கல்வெட்டின நிலமும் ஆக ஸபாவினிஒக வரி தவுந்து கல் வெட்டின நிலமு ஆக காலே மாகாணியால் உள்ள ஸப₄ாவிநிஒக வரி கொண்டு உச்ச ஸந்தி₄க்கு

---

* திருப்புத்தூர் பிற்காலத்தில் திருப்பத்தூர் என்று மாறியுள்ளது.

7 பின்பாக ஆடியருள . . . . உடையார்க்கு திருவமுதுக்கு அரிசி நானாழி . . . . பள்ளியறை நாச்சியார்க்கு அரிசி இரு நாழியும் இக்கோயில் திரு

8 க்காமக்கோட்ட நாச்சியார்க்கு அரிசி இருநாழியும் ஆண்ட [பிள்ளையார்க்கு] . . . . நாழியும் ஆக நாள் ஒன்றுக்கு கால் . . . . அரிசி குறுணி நானாழி

9 . . . . இகோயிலிலே கல்வெட்டிக் கொள்க

10 . . . . அருளால் ஸபைக் கணக்கு . . . . .

11 . . . . ஈஸ்வர ரக்ஷை

இரண்டாம் கல்வெட்டு

இரண்டாம் திருச்சுற்றில் மடப்பள்ளிக்கு அருகிலுள்ள கிழக்குச் சுவரில் காணப்படுகிறது. கோயில் நிலத்துக்கு சபாவிநியோகம் என்ற வரியை மூலபருடை மகாசபையார் நீக்கிய செய்தி கிடைக்கிறது.

1 மூலபருஷை மஹாஸபை$_4$யோம் ஓலையுடையார்

2 திருமேற்தளியாண்ட நாயனார் ஸ்ரீகோயில் ஸ்ரீகாரிய

3 ஞ் செய்வார்களுக்கும் தேவகன்மிகளும் கண்டு யாண்

4 டு 4 வது பொற்காலமான மறி விளாகத்து இந்நாயனார்

5 தேவதானம் பொற்கால் கீழ . . . . தற்கடைய நிலம் [அ]

6 ரை மாவும் ஸப$_4$ாவிநிஓக வரி தவுந்து . . . . ஸ்ரீ பண்டார

7 த்து தேவர் கன்னனும் ஒவ்வாத பாண்டிய தேவர் முதலிகள் வசம்

8 குடுத்த அச்சு ஒன்று இவர்க்கு ஒன்றுங் குடுப்பித்து இந்நிலம் சந்த$_3$ராதி$_3$

9 த்யவற் செல்ல ஸபாவிநிஓக அச்சு தவுந்து கல்வெட்டி

10 கொள்க அருளால் குலிசேகர மூவேந்த வேளான் எழுத்து

11 அருளால் திருப்பத்தூருடையான் எழுத்து இது ஸ்ரீமாஹேஸ்வர ரக்ஷை

மூன்றாம் கல்வெட்டு

இரண்டாம் திருச்சுற்றில் மடப்பள்ளிக்கு அருகில் கிழக்குச் சுவரில் இக்கல்வெட்டு காணப்படுகிறது. கல்வெட்டு பெரிதும் சிதைந்துள்ளது. உய்யவந்தான் ஒப்பிலாதான் தாக்கப்பட்டு அவன் கண்களும் பறிக்கப் பட்டது. இந்தக் கொடுமைக்குத் துணைநின்ற ஆழ்வான் உய்ய வந்தானின் நிலங்களை மூலபருடை மகாசபையார் பறிமுதல் செய்து கோயிலுக்கு விற்றதுடன், இவன் வீட்டையும் இடித்துத் தரைமட்ட மாக்கி இவன் சரீர தண்டனையும் பெறுமாறு செய்தனர்.

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவர்திகள் ஸ்ரீ வீரபாண்டிய[தேவர்] க்கு யாண் . . . . .

2 . . . . மூலபருஷ மகாசபையோம் ஒலை உடையார் [திருத்த] ளியாண்

3 ட நாய[னார்] ஸ்ரீ [கோயில்] ஸ்ரீகாரியஞ் செய்வார்களும் அபி முத்தீச்₂வரமுடையானும் தேவகன்மி

4 யும் பங்காளரும் யாண்டு 4 வது . . . . . . நாள் உய்யவன்தாரெ

5 நாப்பிலாதான் வயல் புக்கு வாரா நிற்க இவனை அ . . . , . . இவனை கண்ணை பறிச்சுப்

6 போனவர்களுக்குக் கூட்டாய் நின்று ஆழ்வான் உய்யவ . . , பர சுதாரணம் [ப] ண்ண வேணு

7 மென்று நாங்கள் சொன்னடத்து இவன் பரசுதாரணம் . . . . . ட்டாமையில் மூலபருஷ

8 த்துங் கூடி இருந்து ஆராஞ்சு பார்த்தடத்து இவன் இதுக்கு கூட்டாகையாலும் இவன் தம்

9 பி முன்பே ெ[ஹ]ாஹத்து பண்ணி சிவன் அபராதியாதலாலும் இவர்கள்

10 மக . . . . ண்டாரமாக விற்றுக் குடுப்பதாக வியவஸ்தையும் இவன் அகமும் இடி

11 த்து த₄ர்ம்ம ஸபை₄யாரையிட்டுக் காரியப்பிள்ளையையிட்டு ச₂ரீர தெண்டங்களு

12 ம் பண்ணி இவன் மாத்தமான . . . . . ஸ்ரீமாயத₃ஸாக் க[ட்] டுவித்து சுடுவித்து இவன் சொத்தில்

13 உடையார் திருத்தளியாண்ட நாயனார்க்கு விற்று குடுத்த பூமியாவது இவூர் வடவாய் வயல்

14 [நாஹாங்பிறகுடி] சேர்பூத்தது கிணற் . . . பள்[ள]ம் பி.வ கிணற்று வாய் உள்பட . . . . .

15 உய்யவந்தான் பிள்ளையார்க்கு வடகடைய கிணற்று வாய் நிலங் கீழறை நீக்கி நின்ற நிலம்

16 ஒரு மா அரைக்காணி முந்திரைகைக் கீழ் முக்காலில் வட கிழக் கடை புதுக் கிணறும் கரையும் நிலம்

17 கீழறை நீக்கி நின்ற நிலம் . . . . இந்நிலம் ஒரு மா அரைக்காணி முந்திரிகையுங் காலும் இப்புதுக்

18 கிணற்றிலும் கரையிலும் இவர்கள் சிற்றப்பன் பெரிய தேவர் உய்யவந்தான் கண்ணன் வயக்கலுக்கு

19 பாதி நீக்கி . . . . இக்கிணற்றங்கரை மாக்களிலும் மரங்களிலும் ஏத்த கோவையாலும்

20 . . . . பழந் . ம் . . . இன்று . . . வயக்கலுக்கு ஏத்த வாய்க்கால் போவதாகவும் ச . .

21 ங்க . . . . படச் செய்யும் அக[வொ]டு தோட்டத்தில் நின்றும் புகுந்த நிலம்

22 . . . . சாதப் பிள்ளை தக்ஷிணாமூர்த்தி ஆறில் ஒன்று நிலம் * நீக்

23 கி நின்ற நிலத்தில் இவன் சிற்றப்பன் மகன் போய் தேவர் உய்ய வந்தான் பாதி நீக்கி நின்ற கு

24 . . . . இந்நிலம் காணி யரைக்காணி முந்திரிகைக் கீழ் எட்டு மா முக்காணி அரைக் கா

25 ணி முந்திரிகையும் இச்செய் கிணற்றிலுங் கரையிலும் மரங்களிலும் குனிக்கும் பிரான் . . . .

26 உள்ளிட்டார் பாதி நீக்கி நின்ற பாதியில் இவன் சிற்றப்பன் பெரிய தேவர் உய்யவந்தானுக்கு மூன்றிலொ

27 ன்று நீக்கி நின்ற இரு கூறு முற்றும் சிற்றம்பலவன் நிலம் அரை மாவின் கீழ் முக்காலும் பல . . . .

28 இவர்கள் குறிச்சிகளிலும் குப்பைக் குழிகளிலும் பாதி முற்றும் வேட்பூாலை வாய்க்கால் முதல் ஏ

29 ம்பல் இவர்க வோகரி அனுஸந்தானமும் இந்நிலங்களில் மரங்களிலும் புளிக்களிலும் வோகரியும் ஆக இவனைச்சு முற்றும் குடுத்து இவ்வற்று இவ்வனைச்சுக்கும் வி

30 லைப் பொருள் பொன்னு முதலான அச்சு 16 இவ்வச்சு பதினாறும் பண்டாரத்திலே வாங்கி தேவர் க

31 ண்ணனும் ஒவ்வாத பாண்டிய தேவர் கணக்கர் காரியஞ்செய்வார்கள் வசம் குடுப்பித்து இவ்விற்ற நில

32 ங்களுக்கும் நெடுமரத்து வயலில் பொன்னம்பல க . த்தா [உய்ய] கொண்டார் உள்ளிட்டார் நிலம் [ஆதிஸண்டே]

33 ச்₀வர விலையாக சபை [விலை] விற்ற நிலங்களும் . . . . இவ்வாண்டு முதல் ஸபாவினியோக வரி த

34 விந்து விற்றுக் கொடுத்தோம் மூலபருஷ மகாசபையோம் . . . . (இறுதி இரண்டு வரிகள் (35–36) சிதைந்துள்ளன.)

---

* கல்வெட்டில் இந்த இடத்தில் நிலத்தின் அளவு குறியீட்டில் உள்ளது.

நான்காம் கல்வெட்டு

இரண்டாம் திருச்சுற்றில் மடப்பள்ளியின் வடக்குச் சுவரில் உள்ளது. ஆமூரண்யா மடம், திருத்தொண்டத்தொகை மடம் ஆகியன சுட்டப்பட்டுள்ளன. திருத்தொண்டத்தொகையான் திருமடத்து அருளாளர்கள் வைகாசித் திருநாளில் வந்த மாகேசுவரர்களை அமுது செய்விப்பதற்காக மடப்புறமாகத் தரப்பட்ட நிலத்தை மூலபருடையார் இறையிலியாக்கிய தகவல் கிடைக்கிறது.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோசடைபந்மரான த்ரிபு$_4$வன சக்ர

2 வத்திகள் ஸ்ரீ வீரபாண்டிய தேவர்க்கு யாண்டு 4 . . கேரளசிங்கவ

3 ளநாட்டு பிரமதேயம் திருப்புத்தூர் முலபருக்ஷ மகாசபையோம் நம்மூர் ஜயங்கெ

4 ாண்ட வண்ணக்குப் பெருமான் திருமுற்றத்து நரலோகன் திரு மண்டபத்து கூட்ட

5 க்குறையரக் கூடியிருந்து ஆமூரண்யா மடத்து சை$_\circ$வ ப்ரதி ஷ்டாச்சார்ய ஸந்தான

6 த்து ஆநந்த கூத்த[னெ]னும் ஸிவநாமத்தை உடையார் உடையார் திருத்தளியா

7 ண்ட நாயனார் ஸ்ரீ கோயிலில் சை$_\circ$வ நெறி காட்டிநார் என்னும் சி$_\circ$வ நாமத்தால் ப்ரதி

8 ஷ்டை பண்ணி பூஜை கொண்டருள்கின்ற தனியூர் பெரும்பற்ற புலியூர் முதலியார் ஸெந்தாநத்த

9 ாரில் செல்வத் திருவ.நால் தெற்கில் மடத்து முதலியான் திருவேட மழகியார்க்கு கல்வெ

10 ட்டி கொடுத்தபடியாவது முன்பு ச$_\circ$காப்$_4$த$_3$ம் 1060 நாளில் இத் திருப்பதியில் தெற்கில் திருவீதி

11 யில்[களிதைபிரான்] முதலியார் சி$_\circ$வநாமந் திருத்தொண்ட தொகையன் என்னும் பெயரி

12 ல் ஸெந்தாநத்தாற்க்கு நெடுவயலுடையான் திருச்சிற்றம்பல முடையான் உத்தமா செய்.

13 த்து குடுத்த இத்திருதொண்டத்துகையா திருமடத்தில் இஸ்ஸந் தானத்தில் [வசிக்கும்] தவ

14 ஸ்விகள் வைகாசி$_\circ$த் திருநாளில் வந்த மாஹேஸ்வரரை அமுது செய்விக்கைக்கு இவ்வூர் வயலில் இ

15 வ் . . மா விலை கொண்டு பழந்தே . . . . துரும் போந்த திரு முண்டம

16 ழகியானான . ஞ் செய்ய . . . . ாயுருவம் போந்த படியே பே

17 ரதவும் பழங்குள . செந்தானத்தாருக்கு உத$_3$க பண்ணிக் கொடுத்த இறையிலி காராண்மையான

18 குடிக்காடு . . . . தாற்க்கு சே°ஷமாகவும் மகிழம் பள்ளத்து சிறு செய்யும் துரவுந் கிணறுந் குறு

19 ச்சியும் . . . ஞ் செய்யும் உத்தமா வம்சத்தார் கொண்டு தங்கள் முதலியார் திருவேடமழகி

20 யாற்க்கு குடுத்தபடியே யாண்டு 4வது தை மாதம் முதல் இந் நிலத்தால் வந்த தரத்தின்படி கடமை அ

21 ந்தராயம் இருப்பதாகவும் சபாவினியோகம் மற்றும் வருவான் வருவினவும் எப்பேற்பட்டனவுந் தவு

22 ந்து எங்களுக்கே பா . . கைக்கு இவுத்தம வம்ச°த்தார் பக்கல் திருவம்பல பெருமாள் தருவித்த பழ

23 ங்காசு 22½ யிப் பழங்காசு இருபத்திரண்டரையும் ஸப$_4$ாவிநி யோகமாக கைக்கொண்டு ஆலங்குடி

24 யில் உத்தமா வம்ச°த்தார் கொண்டுவிட்ட மடப்புறம் ஸெந்தானத் தாருக்கு சே°ஷமாவதாகவும் இப்பே

25 சப்பட்ட நிலங்களில் இத்திருவேடமழகிய முதலியாரும் இவர் நிச்°சயித்தாரும் குடுத்த நியோக$_3$ப்

26 படி , . . . செல்லக்கடவதாகவும் ஸபை$_4$ய . . . . ரத்தில் ஸ்வாதந் திரியம் சொல்ல ப . . . தா

27 ராகவும் இசைந்தபடியே பூசத்$_3$ரதாரம் ஸெந்தான மடப்புற இறையிலியாக செல்ல கடவத

28 ரக கல்வெட்டி குடுத்தோம் மூலபருஷை மகாஸபையோம் அருளால் ஸபைக் கணக்கு

29 ஸ[ங்]காலியாயன் குழை[ந்த]ான் குலைசேகர மூவேந்த வேளா னெழுத்து அருளார் ஸபை$_4$

30 க் கணக்கு திருப்புத்தூருடையானெழுத்து அருளார் கல்வெட்டி னேன் தென் திருசிற்றம்

31 பல ஆசாரியனெழுத்து இது ஸ்ரீமாஹேஸ்வர ரக்ஷை

ஐந்தாம் கல்வெட்டு

இரண்டாம் கோபுரத்தின் உட்புறத்தே வடபுறச் சுவரில் உள்ளது. திருத்தளிநாதர் திருவாசல்முன் எழுந்தருளியிருந்த வினைதீர்த்த பிள்ளையார்க்கு பூசைக் கட்டளையாகத் தம்மைய நாயக்கர் நிலக் கொடை தந்தார். காலம்: கி. பி. 1502.

1 ஸ்வஸ்திஸ்ரீ மந் மஹாமண்டலே

2 ச்₀வரந் ஹரி [ஹராய]* விப$_4$ாடந் ப$_4$ா

3 ஷைக்குத் தப்புவராயிர கண்ட

4 ந் மேதினிமீசுரகண்டன் கட்டா

5 ரி சாளுவன் சிரிமத் நரஸிம்ஹ பு$_4$

6 ஜபலராயர் த$_4$ம்மராயற்கு

7 நரஸா நாயக்கர் ப்ரதீ$_4$வி ராஜ்ய

8 ம் பண்ணியருளா நின்ற ச₀

9 காப்$_3$த$_3$ம் உ 1424 இ

10 தன் மேற் செல்லா நின்ற துந்து

11 பி$_4$ வருஷம் மாசி மாதம் முதற்

12 தியதி ஸ்ரீமந் திப்பரச உடையா[ர்]

13 காரியத்துக்குக் கர்த்தராந தம்

14 மைய னாயக்கர் கேரளசிங்க வ

15 ளனாட்டு ப்$_3$ரஹ்மதே$_3$யம்

16 திருப்புத்தூர் உடையார் திருத்த

17 ளியாண்ட நம் னயிநார் திருவாசல்

18 முன் எழுந்தருளியிருக்கிற வினாயகன் வி

19 னை தீத்த பிள்ளையாற்கு பூசைக் கட்டளைக்கு

20 தீப பாச₀ய . னமும் தன்மமாக இற்

21 றை னாள் சி₀வராத்ரி புண்ணிய காலத்தில்

22 தேவதானமாக விட்ட திருப்புத்தூர் [ஸ்த] வயில்

23 வேப்பங்குறிச்சி வாய்க்கால்க் கீழ் ஸுப்$_3$ரஹ்மண்யனும் இதன் கீழ் . . . . .

24 ஆக நிலம் உபஉ இது அம்முன்னாள் விட்ட உடைகுளம் நிலம் ப ஆகத் திருப்புத்தூற்படி நிலம் ௩ப இன்னில

25 மூன்று மாவும் இந்த வினை தீத்த பிள்ளையாற்கு தேவதானமாக விட்ட அளவுக்கு

26 இம்மரியாதியிலே சந்த்$_3$ராதி$_3$த்யவற் செல்ல ஸர்வமாண்யமாக அனுப$_4$வித்துக் கொள்ளவும்

ஆறாம் கல்வெட்டு

இரண்டாம் கோபுரத்தின் உட்புறத்தே தென்புறச் சுவரில் உள்ளது. தம்மைய நாயக்கர் எக்கலாதேவி அம்மை திருக்கட்டளைக்கு நிலம் தந்தார். காலம்; கி. பி. 1502.

1 ஸ்வஸ்திஸ்ரீ மத் மஹாமண்டலே
2 ச்$_0$வரத் ஹரிஹர[ர]*ய விப$_4$ாடந்
3 ப$_4$ாஷைக்குத் தப்புவராயர்
4 கண்டன் மூவராயர் கண்டன்
5 மேதினிமீசுர கண்டன் கட்டாரி
6 சாளுவன் ஸ்ரீமத் நரஸிம்ஹ ப$_4$ஜ
7 ப$_4$லராயர் த$_4$ம்மராயற்கு நரஸா நா
8 யுக்கர் ப்ரதி$_4$விராஜ்யம் பண்ணியருளா
9 நின்ற ச$_0$காப்$_3$த$_3$ம் 1424 இதன்
10 மே[ல்] செல்லா நின்ற துந்துபி வருஷம்
11 புரட்டாதி [மாதம்] 22 ஸ்ரீமத் திப்பரச உ
12 டையர்க் காரியத்துக்கு கர்த்தரான த
13 ம்மைய நாயக்கர் கேரள சிங்
14 க வளநாட்டு ப்$_3$ரஹ்மதே$_3$யம் திருப்புத்
15 தூர் அம்மை எக்கலா தேவி அம்மை
16 . . . . திருக்கட்டளைக்கு நம்முடைய . . . . .
17 . . . . பட்ட திருபுத்தூர் அகவயலிலே
18 . . . . யில் உட்பட்ட . இதன் தெற்கு மேற்
19 . . . . டுங்கு விட்டுப் போந்து தொ[கு]
20 . . ஆக திருப்புத்தூர் . . . லம் மூன்று மாவும் தேவி
21 . . . இம்மருவாதி . . . ச் சந்திராதித்தவத் செல்ல அங்
22 த$_4$ம்மத்தை . . . பண்ணிக்கொண்டவர்கள் கெங்கை
23 . . . பண்ணின பல . . . தவும் இந்த தர்ம்மத்துக்கு ஆத
24 . . . கை கரையி[ல்] ப்$_3$ரஹ்மதிலும் கார[ர]ம் பசுக் கொன்ற பாவ

(இறுதி இரண்டு வரிகள் (25-26) சிதைந்துள்ளன.)

---

### பாராட்டி வாழ்த்துகிறோம்

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையில் தொல் பொருள் அலுவலராகப் பணியாற்றும் திரு. சொ. சாந்தலிங்கம் அவர்களின் வரலாற்றில் தகடூர் என்னும் நூலுக்குத் தமிழக அரசின் 1990ம் ஆண்டிற்குரிய சிறந்த நூல் பரிசு கிடைத்துள்ளது. பரிசு பெற்ற திரு. சொ. சாந்தலிங்கம் அவர்களைப் பாராட்டி மகிழ்வதில் ஆவணம் பெருமை கொள்கிறது.

## 16. கல்பாளையம் கல்வெட்டு

மு. வீராசாமி, அர. அகிலா, ஆ. பொன்மணி, மு. நளினி.

சமயபுரத்துக்கு அருகிலுள்ள கல்பாளையத்தில் ஊருக்குப் புறத்தே உள்ள வயற்காட்டில் புதையுண்டு கிடக்கும் கல்லில் காணப்படுகிறது. தகவல் தந்தவர் புரத்தாகுடியைச் சேர்ந்த புலவர் குழந்தைசாமி. கல்வெட்டுத் தொடக்கத்தின் மேலுள்ள பகுதியில் நடுநாயகமாக சங்கும் சக்கரமும் வெட்டப்பட்டுள்ளன. கலப்பை, உடுக்கை, விளக்கு ஆகியவை சக்கரத்திற்கு வலப்புறமும், விளக்கொன்று சங்கிற்கு இடப்புறமும் காட்டப்பட்டுள்ளன. கலப்பை இக்கல்வெட்டுக்குரிய சித்ரமேழிப் பெரியநாட்டாரைக் குறிக்கிறது. மக்ாபிரதானனான நல்லண்ணன்கள் என்பாரும் அவர் தமக்கையார் அக்கச்சி அக்கன் என்பாரும் போசள நாட்டுக் குறுவம் என்ற ஊரில் எழுந்தருளுவித்த சிங்கப்பெருமாளுக்கும், யாதவப் பெருமாளுக்கும் திருவாராதனை மற்றும் திருப்பணிகளுக்கான உடலாக ஜனநாதநல்லூர் என்னும் ஊரை சித்ரமேழிப் பெரியநாட்டரர் நீர்வார்த்துக் கொடுத்தனர். இந்த நிகழ்ச்சி திருப்பிடவூரிலுள்ள பிள்ளையார் திருவேப்பந்தெற்றி உடையார் திருமண்டபத்தே நிகழ்ந்தது.

1 ஸ்வஸ்திஸ்ரீ உத்தம நிதி உயர் பெருங் கீர்த்தி முத்தமிழ் மா
2 லை மும்மையும் நிறைந்த சித்தரமேழிப் பெரிய நா
3 ட்டு வடகரை ராஜராஜ வளநாட்டு மேல் வழிப்
4 பட்ட கானக் கிளியூர் நாட்டோமும் திருப்பிடவூர்
5 நாட்டோமும் பாச்சில் குறுவட்டத்து நாட்டோமும்
6 வள்ளுவப்பாடி நாட்டோமும் இவ்வனைவோம் தி
7 ருப்பிடவூர் பிள்ளையார் இதிருவேப்பந்தெற்றி உடை
8 யார் திருமண்டபத்து நிறைவற நிறைந்து குறை
9 வரக் கூடித் தெர்க்கு நிறைந்து பிறர்தர கடக்கச் சத்துரு
10 நாச நிதிபாண நியாய வல்லப இராஜராஜப் பெருநி
11 ரவியோம் த்ரிபு$_4$வன சக்கரவதிகள் ஸ்ரீராஜராஜ தே
12 வற்கு யாண்டு 26 வது கற்கட நாயற்று அபர பக்ஷத்
13 து திரிதியையும் புதந் கிழமையும் பெற்ற பூரட்டாதி நா
14 ள் ஸ்ரீமந் மஹா ப்ரத$_4$ாநன் நல்லண்ணங்கள் போ
15 சள ராஜ்யத்துக் குறுவத்து எழுந்தருளுவித்த சிங்
16 கப் பெருமாளுக்கும் இவர் தமக்கையார் அக்கச்
17 சி அக்கன் எழுந்தருளிவித்த இயாதவப் பெருமாளுக்
18 கும் திருவாராதநத்துக்கும் திருப்பணிக்கும் உடலா

19 க இத்திருப்பிடவூர் நாட்டு ஜநநாத நல்லூர் இருபத்
20 தைஞ்சாவது வரையும் ஊர் குடியும் இன்றிக்கே உ
21 ழுவாரும் இன்றிக்கே பாழ் கடந்து போதுகையில் இ
22 வ்விருபத்தாறாவது முதல் குடியும் ஏற்றி இவ்வூர் நான்கெ
23 கல்லைக்குள் பட்ட நன்செய் புந்செய் நிலத்து தேவதா
24 நந் திருவிடையாட்டம் ஐயந் பாத்தி பிடாரி பட்டிப் ப
25 ள்ளிச் சந்தம் ஊற் காணிஆளர் ஊரமை இறையிலி நீ
26 க்கி நீக்கி நின்ற நந்செய் புந்செய் அடங்களும் செ
27 கெக் கொண்டுப் பயிரேற்றி குடிநீங்காத் திருவிடையா
28 ட்டம் ஆகக் கொள்வதாகவும் இஜநநாதநல்லூர்
29 உடல்கொண்டு திருவாராதநமும் திருப்பணியும் செ
30 சலுத்தக் கடவதாகவும் இவ்வூர் இவ்விருபத்தாறா
31 வது முதல் மாக்கலம் உள்பட்ட ஆயங்களும்
32 மற்றும் எப்பேர்ப்பட்ட ஆயங்க தவிந்து இஜ
33 நநாத நல்லூர் சந்திராதித்த வரையும் இ

பின்புறம்

34 றையிலி ஆக இச்சிங்கப் பெருமாளுக்கும் இந்த யா
35 தவப் பெருமாளுக்கும் திருக்கைகளிலே நீர் வார்த்துக்
36 குடுத்தோம் கானக்கிளியூர் நாட்டோமும் திருப்பிட
37 வூர் நாட்டோமும் பாச்சில் குறுவட்டத்து நாட்டோமு
38 ம் வள்ளுவப்பாடி நாட்டோமும் இவ்வனைவோம் [இ
39 ப்படிய்]க் கல்வெட்டி ஊர் நத்தத்திலே நாட்டிக் கொ
40 ள்ளவும் திருவாழியும் திருச்சங்கும் கல்லிலே வெட்டி ஊ
41 ரிலே நாட்டுவதாகவும் சொன்னோம் இந்நாட்டவரோம்
42 நாட்டவர் பணியால் நாட்டுக் கணக்[கு]* குறுக்கை உ
43 டையாந் குலோத்துங்க வேளாந் எழுத்து இப்படிக்கு
44 இவை பூலாங்குடையாந் நம்பு செய்வாந் எழுத்து
45 இப்படிக்கு இவை குறுக்கையாந் தெந்நவராயன் எழுத்து
46 இப்படிக்கு இவை எதிர் மலை உடையான் குருகுலரையன் எழுத்து
47 இப்படிக்கு இவை மீநவராயன் எழுத்து இப்படிக்கு இவை கூ
48 ற்றூர் உடையாந் தெந்நவதரையந் எழுத்து இப்படிக்கு இ
49 வை ப்₃ரஹ்மதேயம் திருப்பிடவூர் சேந்தந் திருமழபாடி பட்டன்
50 எழுத்து இப்படிக்கு திருப்பிடவூர் மலையேந்தி கௌசிய

51 சேந்தபிரா்ந் ஆகார வல்லவப் பிரமாராயந் எழுத்து இப்ப
52 டிக்கு இவை திருப்பிடவூர் கௌசியந் குலோத்துங்க சே
53 சாழப் பிரமாராயந் எழுத்து இப்படிக்கு இவை கயத்தூர்
54 ருடையாந் எழுத்து இவை குன்ற முடையாந் எழுத்து இப்படி
55 க்கு இவை நல்லூருடையாந் விஜயபாலந் எழுத்து
56 இப்படிக்கு இவை வத்தலை உடையாந் மாதவராய
57 ந் எழுத்து இப்படிக்கு இவை மீசங்கிளியூர் நாட்டு வ
58 ழுப்பரையன் எழுத்து இப்படிக்கு இவை நடுவிரு
59 க்கை நம்பி எழுத்து

---

## 17. கொரட்டூர் கல்வெட்டு

சு. இராசவேலு

சென்னைக்கு அருகிலுள்ள கொரட்டூர் மாரியம்மன் கோயிலில் உள்ள தூண் கல்வெட்டு. சிவன் கோயிலுக்கு நிலவிற்பனை.
**காலம்:** முதலாம் இராசராசன், கி. பி. 1007.

1 ஸ்வஸ்திஸ்ரீ சாலை கலமறுத்த கோராஜராஜகேஸரிவ
2 ர்ம்மற்கு யாண்டு 12ஆவது புழற் கோட்டத்து அம்பத்
3 தூர் நாட்டுக் குறட்டூர்க் [கீழ்] ஸ்ரீபராந்தகச் சதுர்வேதிமங்
4 கலத்து ஸபை$_4$யோம் விற்கின்ற நிலவிலை ஆ
5 வண கைய்யெழுத்து எம்மூர் செம்பியன்
6 மஹாதேவி ஈச்$_2$வரத்து மஹாதேவர்க்கு விற்றுக் குடுத்த நி
7 லத்துக்கு கீழ்பாற்கெல்லை ஏரி உப்பலூர் நின்று தெற்கு
8 நோக்கி எ வதிக்கு மேர்க்கும் தென்பாற்கெல்லை . . . . இப்பரி
9 . . . . எ வதி வாய்க்காலுக்கு வடக்கும் மேற்பாற்கெல்
10 லை இதேவர் பூமிக்கு நீ . . . . எ வதிக்குங் கிழக்கும் வட
11 க்கும் மேற்பாற்கெல்லை இவ்வேரி [கிளின்று] வடக்கு சே
12 நாக்கி எ வதிக்குக் கிழக்கும் வடபாற்கெல்லைச் செம்பியன்
13 மஹாதேவி வாய்க்காலுக்கு தெற்கும் இநான்கெல்லைக்கு
14 ள் அகப்பட்ட உண்ணிலன் ஒழிவின்றி எப்பேர்பட்ட
15 து தேவர்க்கே உரித்தாக இறையிழிச்சி தேவபே$_4$ர்க$_3$மர்க விற்றுக்
குடுத்தோம் இப்பூமி . . . . நீரோ . . .
16 கால மாணிக்க தேவன் . . .
17 பூமி விளங் . . . . வர் . . . .

---

# 18. திருநெல்வேலித் தலைவமார் செப்பேடு

தே. கோபாலன்

இச்செப்பேடு திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலின் தென்புற முள்ள சங்கிலி மண்டபத்தின் இடப்புறமுள்ள துர்க்கை அம்மனின் உச்ச சந்தி பூசைக்காக மூன்றாம் முத்து வீரப்பன் காலத்தில் ' அறம் வளர்த்த கட்டளை ' எனும் பெயரில் பூசை நடத்துவதற்கு வன்னிக்குட்டம் ஊரின் தலைவமார், நிலம் தானமாகக் கொடுத்த தகவலைத் தெரிவிக் கின்றது.

இத்துர்க்கை அம்மன் திருமஞ்சன வடிவம்மன் என அழைக்கப் படுகின்றது. செப்பேட்டில் வடிவம்மன் எனக் குறிப்பிடப்படு கின்றது. வன்னிக்குட்டம் என்ற ஊர் தற்போது சிதம்பரனார் மாவட் டத்தில் திருவைகுண்டம் வட்டத்தில் இருவப்பபுரம் (பெரும்படை சாஸ்தா கோயில்) என்றழைக்கப்படும் கிராமத்திற்கு மேல்புறமுள்ள, ஊர் இருந்து அழிந்த பகுதியாகும். இப்பகுதி தற்போது இருவபுரம் என்றழைக்கப்படுகிறது. தலைவமார் என்பது ஏதோ ஒரு தொழில் அல்லது சாதிப் பிரிவைக் குறித்ததாகத் தெரிகிறது.

காலம்: மதுரை நாயக்க அரசன் மூன்றாம் முத்துவீரப்பன். கி.பி. 1682.

1 சகாத்திதம் 1604க்கு மேல் செல்லாநின்ற கொல்லம்
2 858ஹு துன்முகிஹு பங்குனிமீ ம் 3உ பூறுவபட்சத்துத் திசமியும்
3 ஆதித்த வாரமும் சுபயோக சுபகரணம் பெற்ற ரேவதி நட்சத்தி
4 ரத்தில் நாள் செய்த உதக தன்மதான விலைப்பிரமாணம் ஆ
5 வது சீள்வேம்புநாடு திருநெல்வேலி உடைய நயினார் நெல்வே
6 லிநாதசுவாமி வடிவம்மன் உச்சிசந்தி அறம்வளர்த்தகட்டளை
7 க்குக் காரியஞ்செய்யும் சர்க்கரவர்த்தி யவர்களுக்கு குட
8 னாடு வன்னிக்குட்டத்து தலைவமாரோம் தன்மதான விலைப் பிர
9 மாணம் ஆவது சவ்வதுரங்க கிட்டிணமுத்து வீரப்பநாயக்க
10 ர் யவர்களுக்கு புண்ணியமாகவும் தாங்கள் திருவேங்கடநாதர்
11 யவர்களுக்குப் புண்ணியமாகவும் நாங்கள் ஆற்சந்திரராற்
12 கம் சந்ததிப் பிரவேசம் ஆண்டனுபவித்து வருகிற யெங்க
13 ள் வகையான காடுதரிசு வன்னிக்குட்டத் தென்யெல்
14 கைத் தரிசைக்காடு கிரையம் பொன்* ஐந்தின் இந்தப் பொன் அஞ்

---

* பொன் என்பது குறியீட்டால் குறிக்கப்பட்டுள்ளது.

15 சுக்கும் கிறையமாகக் குடுத்த தரிசுக் காட்டுக்கு யெல்
16 கையாவது கீழ் யெல்கை பெரும்படைச் சாத்தாவின் கோ
17 யிலுக்கு மேற்கு, தென்யெல்கை ஆறுமுகமங்கலத்தார்
18 யெழுதிக் குடுத்த கட்டளை யெல்கைக்கு வடக்கு, மேல் யெ
19 ல்கை காட்டாத்தி யெல்கைக்குக் கிழக்கு, வடயெல்கை ம
20 றுகாலுக்கும் ஓடைக்கும் வெள்ளையன் செவ்வல் விளைக்குந்
21 தெற்கு, இந்நான்கு யெல்கைக்குள்ப்பட்ட காட்டில் ந
22 ஞ்சை புஞ்சை பயிரிட்டுக் கொண்டு அறம்வளத்த உச்சிசந்தி
23 கட்டளைக்கு ஆதித்த சந்திரார்க்கும் சந்ததிப் பிரவேசம் ஆ
24 ண்டனுபவித்துக் கொள்வாராகவும் இந்நிலத்துள்ள நி
25 தி நிச்சய சிலை தருபசானம் அட்டவற்சன்னியா சாமியா
26 சித்த சாத்த மென்னப்பட்ட போக தெச்சு ஊளிய
27 ங்களுக்கும் இவரே யோக்கியர்ராக செம்பிலுஞ் சிலையி
28 லும் வெட்டி ஆற்சந்திரார்க்கம் அனுபவித்துக்கொள்வரா
29 கவும் இப்படிச் சம்மதித்து இந்த தன்ம்மதானம் விலைப்
30 பிரமாணம் சாதனம் யெழுதிக் குடுத்தோம் வன்னிக்குட்
31 டத்துத் தலைவமாரோம் திருநெல்வேலி நெல்வேலிநாதசுவாமி வ
32 டிவம்மன் அறம் வளத்த கட்டளைக் காரியஞ் செய்யும் ச
33 ர்க்கரவர்த்தியாரவர்களுக்கு இந்தப்படிக்கு இந்த
தன்மத்தை பரிபாலி
34 ணம் பண்ணினபேர் கெங்கைக் கரையிலே அனேக
35 கோடி சிவலிங்கப் பிரதிட்சை பண்ணின பலத்தையு

இரண்டாம் பக்கம்

36 ம் அநேக அசுமேதி யாகம் பண்ணின பலத்தையும் பெ
37 றுவாராகவும் இந்த தன்மத்துக்கு யாதாதொருத்தர் லிகா
38 தம் பண்ணினபேர் கங்கைக் கரையிலே காரம்
39 பசுவைக் கொன்ற தோசத்திலே போவாராக இந்தப்படிக்கு இந்த
சாதனம் யெழுதினேன் சிதம்பர
40 நாதன் யெழுத்து

# 19. அவ்வயார்குப்பம் பட்டயம்

*கொடுமுடி ச. சண்முகன்*

அவ்வயார்குப்பம் தென்னார்க்காடு மாவட்டத்தில் சென்னை - திருச்சி சாலையில் மயிலம் கூட்டுச் சாலையிலிருந்து மேற்கே ஒரு சில கிலோ மீட்டரில் அமைந்துள்ளது. இவ்வூரின் முன்னாள் ஊராட்சித் தலைவர் திரு. மனுகாந்தி அவர்கள் மூலம் பெறப்பட்டது இச்செப்புப் பட்டயம்.

பட்டயம் 30.3 செ. மீ. 32 செ. மீ. அளவுடையது. அதன் மேற் பகுதியில் மூன்று குவிமாட விமானம் போன்று வெட்டப்பட்ட பகுதி உள்ளது. பட்டயத்தின் தொடக்கத்தில் ஆண், பெண் அனுமான் ஆகியோர் உருவங்கள் வரைகோட்டுச் சிற்பங்களாக உள்ளன. பின் பக்கம் ஒரு பெண்ணின் தலையை அரிந்து உடலும், தலையும் தனி யாகக் கிடப்பது போன்ற ஒரு படமும், மூன்று தேர்களை ஒன்றன் பின் ஒன்றாகச் சேர்த்து தலையில் கட்டிய கயிற்றால் ஒருவர் இழுப்பது போன்ற படமும் செதுக்கப்பட்டுள்ளன.

இந்தப் பட்டயத்தை எடுத்துக் கொண்டு ஒருவர் ஆண்டுதோறும் இப்பகுதியில் வீடு வீடாகச் சென்று நெல்லும் பணமும் பெற்றுச் செல்வதாகவும் கொடுக்காத வீட்டின் முன் மேளம், மத்தளம் அடித்துப் பாடி ஆடி என்னென்னவோ சொல்லுவதால் அனைவருங் கொடுக்க வேண்டி வருகிறது என்றும், அண்மைக் காலங்களில், ஊராரே வசூல் செய்து சுமார் 300 ரூபாயும், கொஞ்சம் நெல்லும் அவருக்குக் கொடுத்து அனுப்பிவிடுவதால் தெருத் தெருவாய் செய்யும் கூச்சல் இல்லை என்றும் திரு. மனுகாந்தி விவரித்தார். பட்டயத்துக்குரியவரின் ஊர் செஞ்சி என்றும் உடன் பிறந்தோர் நால்வர் என்றும், ஒவ்வொருவரும் வசூலுக்கென்று ஒரு பகுதியை ஒதுக்கிக் கொண்டுள்ளதாகவும் தெரி கின்றது.

### பட்டயத்தின் சுருக்கம்

காஞ்சி காமாட்சியம்மன் கோயில் தேர் இழுப்பதில் ஒரு சமயம் இடங்கை வலங்கையர் இடையே சண்டை வந்துவிட்டது. அரசாங்கத் தார் தலையிட்டும், சண்டை தீரவில்லை. ஒரு சாரார் இழுத்த தேரை இன்னொரு சாரார் நிறுத்திவிடுகின்றனர். காஞ்சிபுரத்தில் பிறந்து சேரநாடு சென்று மந்திர தந்திரங்களில் வல்லமை பெற்ற ஒருவன் வந்து கர்ப்பிணியான தன் மனைவியையும் தன் தங்கையையும் நரபலி கொடுத்து, தேரை நிறுத்திய பூதங்களை விலக்குகிறான். பின்னர் மூன்று தேர்களையும் ஒன்றன் பின் ஒன்றாகக் கட்டி ஒரு முனை யைத் தன் தலையில் கட்டி இழுத்து வந்து நிலை சேர்த்துகிறான்.

அதற்காக ஊரார் மகிழ்ந்து வீட்டிற்கு 3 வள்ளம் தானியமும் கால் வராகன் பணமும் கொடுக்க வேண்டுமென்று முடிவு செய்து இப்பட்டயம் வழங்கியதாகக் கூறப்படுகிறது.

பட்டயத்தின் முதல் பகுதியான மெய்க்கீர்த்திப் பகுதி விசயநகர அரசுக் கால பட்டய வாசகம்போல் கருதுமாறு செய்யப்பட்டுள்ளது. அதனால் அப்பகுதி எழுத்துக்களுக்கு மெய்ப்புள்ளி வைக்கவில்லை. கீழுள்ள கதைப் பகுதியில் மெய்யெழுத்துக்கள் புள்ளி பெற்றுள்ளன. ர எழுத்து 'ா' போல எழுதப்பட்டுள்ளது. மற்றபடி எல்லாம் திருந்திய தமிழ் எழுத்துக்களே.

பட்டயச் செய்தி மெய்போலும் விளங்க வேண்டி அழகான கதை புனையப்பட்டுள்ளது. கவர்மெண்டார் என்ற சொல் அடிக்கடி வருகிறது. இது போன்ற சொற்கள், இப்பட்டயம் பிற்காலப் பட்டயம் என்பதை அடையாளம் காட்டுகின்றன. பட்டயத்தில் வரும் சக, கலி ஆண்டுகள் தவறாக உள்ளன. பெரும்பாலும் கடந்த ஒரு நூற்றாண்டுக்குள் எழுதப்பட்டிருக்கலாம். ஒரு குடும்பம் வாழ்க்கை நடத்துவதற்காக, இப் போலிப் பட்டயம் பயன்பட்டு வருகிறது. இன்றும் இப் பழக்கம் உயிரோடு இருப்பது வியப்பளிக்கின்றது. எழுத்தில் இருப்பதெல்லாம் உண்மை என்று மக்கள் நம்புவதை இது உறுதி செய்கிறது.

இப்பட்டயம் போலி என்றாலும், இது போன்ற ஆவணங்கள் கொடுக்கும் படிப்பினை ஒன்று உண்டு. பழைய கல்வெட்டுக்கள், பட்டயங்கள் ஆகியவை அறம், பக்தி என்ற நோக்கங்களைக் வெளிப்படையாக குறிப்பிட்டாலும் அதற்கும் ஒரு பொருளாதாரப் பின்னணி நிச்சயம் உண்டு என்பதே. மேலும் இது தோன்றிய காலத்தில் நாட்டில் நிலவிய வலங்கை இடங்கை போராட்டங்களைப் பற்றி அறியவும், சில பிற்போக்கான எண்ணங்களை அளந்தறியவும் இப்பட்டயம் பயன்படும். (இதனைப் போன்ற வேறு பட்டயங்களும் உண்டு. பார்க்க : செ. இராசு, கொங்கு வட்டார சமுதாய ஆவணங்கள், தமிழ்ப் பல்கலைக்கழகம், 1992).

1 கணபதி துணை காமாக்ஷி துணை சொஸ்த்தஸ்ரீ ரிவகயருயார்பூத சாலிவாகன சாகாற் . .

2 . . ஷு 1222 கலியுகதாபிதா ஷு 1423 யிதுக்கு மேல் செல்லா னின்ற சற்வதாரி

3 ஷு வைய்யாசி மீ 23தி சுக்ற வாறம் அஷ்டமி பூரட்டாதி னஷ்த் திறம் சுபனாம யோகம் யிந்த சுபதினத்தில் சாதன பட்

4 டையம் யெழிதி குடுத்த விபறம் யென்னமென்றால் யிடங்கய்யார் விபறம் தெரிவிப்பது சோமசுந்திற அக்கினி கோத்திற

5 தில் னன்மையாய் பிறம்மாவசியன கறத்தார், செங்கோந்தம், தேவேந்திற பன்ளன் கோசங்கிறயன் தேரோடும் வி

6 அரியராய விபாடன் பாஷக்கு தப்புவறாத கண்டண் மூவறாய கண்டண் கண்டனாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான்

7 துலுக்கர் தள விபாடன் துலுக்கர் மோகந் தவிற்த்தோன் ஒட்டியர் தள விபாடன் ஒட்டியர் கொட்டந் தவித்தோன் பின் மண்

8 டலமுங் கொண்ட ராஜாதிராஜன் ராஜகெம்பீரன் அஸ்பதி கஜபதி ராஜகோபாலன் ராஜபறமேஸ்பரன் ராஜ

9 மாற்தாண்டன் யிந்திற துறந்திறன் துரந்தரன் அஷ்ட மனோகர இறயன் அசுராண விருது கோடி படைத்தவ

10 ரான நரபாலன் கோதண்டராமன் கலியுகயிரான கண்ணன் வாளுக்கு பீமன் தோளுக்கு அபிமன்னன் குணத்து

11 க்கு தர்மன் அழகுக்கு அர்சுனன் அமர்ந்தாகு அரிச்சந்திரன் ஆன்மைக்கு அனுமான் ஆக்கிணைக்கி சுக்கிரீபன்

12 கொடைக்கி கர்னன் செல்வத்திர்க்கு அதலாகேசூரன் பலத்துக்கு வாயு பகவான் உலகத்துக்கு கதிரோன் உலா

13 வும் உலகமெல்லாம் படைக்க நினைத்ருளிய வீராதிவீர வன்னியப் பிரதாபன், கிருஷ்ணதேவ மகாஇராயர்,

14 அச்சுதேவ மஹாஇராயர், புஜபலதேவ மஹாஇராயர், திருமலை தேவ மஹாஇராயர், நரசிங்கதேவ மகாஇரா

15 யர், இராமதேவ மஹாஇராயர், பிரவிடதேவ மஹாஇராயர், மல்லிகா அர்சுனாதேவ மஹாஇராயர், பிரதிவிரா

16 ஜ்ஜிய பரிபாலனம் பண்ணி அருளாநின்ற சகாப்தம் 1563 யிதர்க்குமேல் நின்ற ஆங்கிரஷ

17 ஸு மிதுன மாஷத்து பூர்வ ஷஷ்ஷத்து அஷ்டமியும் பூரட்டாதி நக்ஷத்திரமும் பெற்ற சோமவாரம் நாள்

18 வடகரை விருதப பசங்கற வளநாட்டுக்கு மேற்கு நாடு யிருங்கோள பாண்டிய வளநாடு தொண்ட மண்

19 டலம் சோழ மண்டலம் பாண்டிய மண்டலம் கொங்கு மண்டலம் யிந்த நாலு மண்டலத்திற்கு

20 அழகான தொண்டா வளாநாடுக்கு அழகான காஞ்சி நாடு திருகாமாஷி அம்மனுக்கு அவள் சன்ன

21 திக்கி. °6°* சாதிக்கும் வன்ளியர் மனுமாண்டி ஆசாரி °1000°*கோத்திரம், தேவேந்திர பன்ளன் யிவர்

* 6, 1000 என்ற எண்கள் தமிழ் எண்களாகத் தரப்பட்டுள்ளன.

22 கள் எழுதி குடுத்த ஒண்டிபுலி ருமசாமி நாக்கனுக்கு
யிவர்கள் யிடங்கை °6°* பாணத்தாரும் கூடி

23 காஞ்சிபுரம் காமாஷி தேவிக்கும் ஏகாம்பர யிஷ்வரருக்கும்
திருக்கல்லியாணம் உபயமும் நடத்தி வரும்

24 நாளையில் வலங்கையாருக்கும் யிடங்கையாருக்கும்
சச்சரவுபட்டு யிந்த காமாஷி உபயத்தை எ

25 ங்களுக்கும் பேர்பாதி குடுக்க வேணுமென்று
வலங்கையார் கேழ்க்க யிடங்கையார் எங்களுடைய உபயத்

26 தை வலங்கையாருக்கு தரமாட்டோம் என்று சொல்லிநாற்.
ஆனால் உங்களுடைய ரதம் எங்கள் வீதிக்கி வ

27 ற கூடாது என்று சொன்னாற். அதற்கு மின்னோர்கள்
நடத்தினபடிக்கி நாங்க னடத்தி வருவோம். அதில் யி

28 டங்கையாருக்கும் வலங்கையாருக்கும் உத்தங்கள்
செய்து சண்டை நேரிட்ட படியால் வலங்கையா

29 ர் படையில் உயிர்ச் சேதம் ஆய்விட்டது. படையில்லை
யிடங்கையாருக்கு படைகள் சாஷ்தி. வலங்கையா

30 யார்மதிக்காமல் போய் விட்டார்கள். கெவர்மெண்டார்
வலங்கையாருக்குச் சொன்னது உங்களுடைய வல்

31 லமை சூதால் தேறை நிருத்தி விட்டால் அப்போது அவர்களை
நாங்கள் தெண்டித்து விடுகுரோம் என்

32 று கெவர்மண்டார் சொன்னாற். வலங்கையார் எந்த
விதத்தில் தேறை நிருத்தலாமேன்று யோசித்தார்கள். அ

33 ப்படி அல்ல நம்ப வலங்கையாரை யாரையாகிலும்
மந்திரம் கற்றவரைக் கொண்டு வந்து தேரை விடாமல் படி

34 க்கி நிருத்தி விட்டு கெவற்மண்டார்யிடம் பிரையாது
குடுத்து விடுவோம். அதர்க்கு அவர்கள் என்ன தெண்டிக்குரார்

35 களோ தெண்டிக்கட்டும் என்று வலங்கை சேணியன்
ஏர்ப்பட்ட பல்லாக்கு பூதம் எடுக்குரது. அவன் நெய்யப்

36 பட்ட தரியானது பூதம் நெய்குரது. அப்பேர்ப்பட்ட
பூதவசியகாரனைக் கொண்டு வந்து நடுத்தெருவில் வந்த தேரை பூ

37 தத்தை விட்டு நிருத்தி விட்டான். அந்த பூதத்துக்கு ஆகாரம்
ஆருமாதம் தலசன் பிள்ளைகாரியும் கன்னியஸ்

---

* 6 என்ற எண் தமிழ் எண்ணாகத் தரப்பட்டுள்ளது.

38 ரியும் °7° ஆனை °7° ஆட்டுக்கெடா °7° அண்டா
சாதமும் போயி குடுத்து பிண்ட பிரசாதம் குடுக்குரேன் என்று சே

39 ணியன் பூதங்களுக்கு பிரதிக்கினை செய்து தேரை
நிருத்தும்படி பூதங்களை அனுப்பி தேரை நிருத்தி விட்டான்.

40 வலங்கையார் கெவர்மெண்டார் யிடத்தில் பிரையாது குடுத்து
விட்டார். கெவர்மெண்டார் யிடங்கையாரை வர

41 வழைத்து வாக்கு முலம் விசாரித்து யிடங்கையார்
சொல்லுகுறார் வலங்கையாருடைய சூது மார்க்கத்தினால்

42 எங்களுடைய தேரை நிருத்தி விட்டான். யிடங்கையார்
கெவர்மெண்டார்யிடம் எங்களுக்கு ஒரு மாசம் லீவு குடு

43 த்தால் எங்களுடைய யிடங்கையில் யாராகிலும் கொண்டு வந்து
தேரை ஓட்டிக் கொண்டு போகுரோம் அப்படி ஒ

44 ரு மாசத்தில் ஓட்டிக் கொண்டு போகாவிட்டால் பன்னீராயிரம்
பேரையும் சிரசாக்கினை செய்து கொள்ளுங்கள் எ

45 ன்று யிடங்கையார் வாக்கு மூலம் கொடுத்து விட்டார்.
யிடங்கையார் காமாக்ஷி அம்மன் சன்னதியில் வந்து அனைவ

46 ரும் யோசித்து நாலு திக்குக்கும் திருமுகம் எழுதி அனுப்பிநார்
மூனுதிக்குத் திருமுகம் வந்துவிட்டது. மேற்கே மலையாள

47 ம் போன திருமுகம் வரயில்லை. யிதர்கு முந்தி சின்ன காஞ்சிபுரம்
வெப்பன் சேரி தெருவு வெங்கடராமநாக்கன்

48 பட்ராஜா வம்முஷத்தில் ஒரு பெண்ணை சிரை எடுத்து
அதின் வயிற்றில் யிரண்டு பிள்ளையும் ஒரு பெண்ணும்

49 பிரந்து கல்வி சாலையில் வைத்தார்கள். வாசித்துயிருக்கும்
நாளையில் தாய் தகப்பன் யிரந்து விட்டா

50 ர். யிவர்களை ஆதரிப்பார் யாருமில்லை யிவர்கள் தட்டார்
அடுப்பு வேலை எடுத்துக் கொண்டு வேளையில் கிளம்

51 பி விட்டார். மூவரில் ஒருவன் யிரந்து விட்டான். மற்றவனும்
தங்கையும் பென் மலையாளம் சேர்ந்து வித்தை

52 களைக் கற்றுக் கொண்டு மலையாளத்தில் ஒரு
பெண்ணைசிரை எடுத்துக்கொண்டு தன்வித்தைகளை அந்தப்பெண்

53 ணுக்குக் கற்ப்பித்து கொடுத்து அந்தப் பெண் கற்று யிருந்த
வித்தையை தான் கற்றுக் கொண்டு ஆண் மலையாளம் போ

---

* 7 என்ற எண் தமிழ் எண்ணாகத் தரப்பட்டுள்ளது.

54 ய் சேர்ந்து அந்த ராசாவிடத்தில் வித்தைகளாடி கரடிபுலி
களை வரவழைத்து பேய் கூத்தாட்டி பூமியில் புலி

55 போல் சக்கரம் எழுதி தன் பென்ஷாதியை சக்கரத்தில்
உக்கார வைத்து சாட்டுக்கூடை மூடி மந்திரம் சொல்லி திரந்

56 தான் அந்த பெண் புலியாய் விட்டது. அந்த ஒரு புலியை
ஆட்டவைத்து ராஜாவிடத்தில் வெகுமானம் பெற்று

57 கொண்டு கொச்சி மலையாளம் போய்ச் சேர்ந்தார்
ஏசோந்தர ராஜாவிடத்தில் வேண்டிய வித்தைகளாடி தன் பெண்

58 ஷாதி பாலாஎஷ்ஷிமியை புலி ஆக்கி ராஜாவிடத்தில்
ஆடவைத்து வெகுமானம் பெற்றுக் கொண்டான்.

இரண்டாம் பக்கம்

1 அவனுடைய நாமதேயம் ராமசாமி நாக்கன் பென்ஷாதியை
புலிரூபமாய் ஆட்ட வைத்ததில் சிம்ப அனுமந்தன் ஒ

2 ண்டிபுலி நாமதேயம் ராஜா வைத்தார். காஞ்சிபுரத்தில் யிருந்து
திருமுகம் கொச்சிக்கு வர யிடங்கையாரும் வலங்

3 கையாரும் ராஜாவிடத்தில் சென்று இந்த திருமுகத்தை
வாசித்து ஒண்டிபுலியை அழைப்பித்து காஞ்சி காமா

4 ஷி தேரை உன்னால் ஓட்ட முடியுமா என்று கேட்டார்கள்.
அதர்க்கு ஒண்டிபுலி நான் ஓட்டி வைக்குரே

5 ன் என்று சொன்னான். வலங்கையார் இந்த ஒண்டிப்புலியை
அனுப்பினால் எந்த விதத்திலும் தேரை

6 ஓட்டி விடுவான் என்று நம்ப வலங்கையாருக்கு அபிமானம்
வரும் அனுப்பதகாது என்று சொல்ல இடங்கையார் உ

7 ங்களுடைய வம்முஷமாய் இருந்தால் அனுப்ப வேண்டாம்
எங்கள் வம்முஷமாய் இருந்தால் அனுப்புஓம் உடனே

8 ஒண்டிப்புலியை விசாரித்ததில் தான் இடங்கைதான் என்று
சொல்ல இடங்கையார் ஒண்டிப்புலியையும் திரு

9 முகம்கொண்டு வந்தவனையும்கூட்டி காஞ்சிபுரம்அனுப்பிவிட்டார்.
ஒண்டிப்புலி காஞ்சிபுரம் போய் அங்குள்ள

10 வன்னியர், ஆசாரிமார், செட்டிமார், செங்கொந்தர், பொச்சுக்
கொள்ளர், தெலுங்கெடையர், குரும்பெடையர், ஒத்த செக்கன்.

11 தேவேந்திரப்பள்ளன், கொடும்பள்ளன், சொம்பள்ளன், கோசங்கி
இந்த ஒன்பது பாணத்தாறும் ஒண்டிப்புலியை

12 பார்த்து சந்தோஷப்பட்டு முப்பத்திரெண்டு விருது. 18 ஆயுதமும் குடுத்து காஞ்சி பட்டணம் சுத்திவர சொன்னா

13 ர். அப்படி ஒண்டிப்புலி சுத்தி வரும்போது வலங்கை சேணியன் 12 விருது கட்டிக் கொண்டு அவன் எதிர்பட்

14 டான் ஒருவர்க்கு ஒருவர் உத்தம் செய்து கெவர்மண்டார் இடம் போய் விழுந்தார்கள். கெவர்மண்டார் இருவரையும்

15 பார்த்து உங்களுடைய வித்தைகளை ஆடுங்கள் பார்ப்போம் என்றார். இவர்கள் வித்தைகளை ஆடினார். ஒருவருக்

16 கு ஒருவர் தோர்ப்பு இல்லை என்று கெவர்மண்டார் சொல்லு குறார் உபயத்தை சமபாதியாய் போங்கள் என்று கெ

17 வர்மண்டார் சொல்ல அதர்க்கு ஒண்டிப்புலி வித்தை ஒருவர் பங்கு அல்ல சத்தியத்தில் விடவேண்டும் கா[மா]

18 ஷி அம்மன் சன்னதியில் இரண்டு சூலத்தை நட்டு °32° விருதும் காமாஷி உபயமும் வலங்கையானுக்

19 கு செல்லும் என்று சூலத்தின் மேல் படுக்க வேண்டும் ஒண்டிப்புலி ஒரு சூலத்தின்மேல் படுக்க வேண்டும் இதில் யார்

20 உயிர்ரோடு இருப்பவனுக்கு உண்டு. இருவரும் இரண்டு சூலத் தின் பேரில் படுத்தார்கள். சேணியன் இரந்து விட்டான். ஒ

21 ண்டிப்புலி சூலத்தை விட்டு இரங்கி கோர்ட்டாரையும் இடங்கை யாரையும் சருணம் செய்தான். சத்தியத்தில் நீ செலி

22 த்ததினால் தேரை ஓட்டிக்கொண்டு போங்கலென்று தீர்மாநித்தார் ஒண்டிப்புலி அஞ்சணம் போட்டு தேரின் பேரில் இருக்கப்

23 பட்ட பூதங்களை தேரைவிட்டு இரங்கும்படி ஆக்காபித்தான் பூதம் எங்களுக்கு தலசன் பிள்ளை ஆருமாதம் கெர்பஸ்ரீயும்

24 கன்னிஸ்ரீ °7° ஆனை °7° கெடா °7 அண்டாசாதம் எங்களுக்குக் குடுத்தால் தேரை விட்டு இரங்குஒம் பூதம் சொல்ல இடங்கை

25 யாரை ஒண்டிப்புலி கேட்க அவர்கள் நரபொலி ஒப்புக் கொள்ளவில்லை ஒண்டிப்புலி துணிந்து தன் பெண்ஷாதியை சிரசை

26 யும் தங்கை சிரசையும் அருத்து பெண்ஷாதி வயத்தில் கருவு எடுத்து °7° அண்டா சாதத்தில் °7° ஆனை உதிரம்°7° கெடா உ

27 திரம் கலந்து உருவு போட்டு பிண்டப் பிரசாதம் பூதங்களுக்கு குடுத்துதன் வசமாக்கி மூனு தேர் வடத்தையும் ஒன்றாக பூட்டி மூக்கி

28 ல் மாட்டி நாலு வீதியும் தேரை இழுத்து வந்து தன் நிலையில் நிருத்திவிட்டு சருணம் செய்தான். இடங்கையார் நமக்காக

29 ஒண்டிப்புலி பெண்ஷாதி பிள்ளை வெட்டி நரபொலி குடுத்து நம்ப தலையை காப்பாத்தினவனுக்கு என்ன குடுத்தால் பா

30 பம் திரும் வேண்டிய ஊரும் வேண்டிய மானியமும் குடுத்தாலும்
நிலைக்காது உடையார்பாளையம் சச்சிராயர், காஞ்

31 சி ஸ்தளம் செங்கல்ராய நாக்கர், பிச்சவரம் பண்டாரி,
திருப்பதிமுத்துமல்லரெட்டியார்,காலேஸ்திரிதிருமலைநாக்கர்,வெ

32 ங்கடகிரி ஆருமுக ஆசாரி, மனுமாமண்டி ஆசாரி, சேலம்
திருமலபள்ளன், முத்துப்பட்டணம் கொடும்பள்ளன், அரியலூர் சி

33 வலிங்க பத்தர், செஞ்சி ராமசாமி கவுண்டர், படவேடு முத்துசாமி
கவுண்டர், முத்துப்பத்தர் இவர்கள் அனைவரும் யோசித்

34 து அவன் அய்யோவென்றால் ஏழு தலமுறைக்கும் பாபம்
பிடித்துக் கொள்ளும் என்றும் பில்லும் பூமியும் சந்திர சூரியாள்

35 ஆகாஷவாணி உள்ளவரைக்கும் பிற்ம கற்பனையாய்
அன்பத்தாறு தேசத்தில் உள்ள இடங்கையார் பேரில் எ

36 ழுதிக்கொடுத்த சாதீணப் பட்டையம் விபரம். வன்னியாள்
தலைக்கட்டுக்கு விராகன் கால், அரிசி 3; பஞ்சாளத்தார் தலைக்

37 கட்டுக்கு விராகன் கால், அரிசி 3; சதகோத்திரம்
தலைகட்டுக்கு விராகன் கால், அரிசி3; செங்கொங்தர் தலைக்
கட்டுக்கு

38 விராகன்கால், அரிசி 3; தேவேந்திரன் கொடும்பள்ளன்
தலைக்கட்டுக்கு விராகன் கால், அரிசி3; கொல்லர் தலைக்கட்

39 டுக்கு விராகன் கால், அரிசி 3; கோசங்கி தலைக்கட்டுக்கு
விராகன் கால், அரிசி 3; அஞ்சி கோழி, அஞ்சி கட்டு பில், அ

40 ஞ்சி கட்டு விரகு, வன்னியாள் ஊருக்கு விருது கட்டினால்
பாபந்தீர ஆட்டுகிடா கொடுக்க வேண்டும். இதில் ஆறாகிலு

41 ம் பணத்தின் பலத்தினாலேயும், சேனக்கட்டு பலத்திநாலேயும்
சற்காற் பலத்திநாலேயும் வாது ஆடின பேருக்கு 1000* கோ

42 வை கொண்ண தோஷத்தில் போவார்கள். ஆயிரம் பிறாமனாளை
கொண்ண தோஷத்தில் போவார்கள். இந்த விருதுக

43 ளும் இந்தப் பட்டயத்தைக்யும் கொண்டு வந்த பிள்ளையை
தன் பிள்ளையைப் போல் பாவித்து இந்த பட்டயத்தை

44 வாசித்த பேர்களும் தப்புப் பிழை இருந்த போதிலும் அவர்ள்
ஆள்போல் தழைத்து அருகுபோல் வேர்ரோடி முங்கல் போ

45 ல் முனிசித்து முசியாமல் வாழ்ந்து, நித்த கல்லியாணம்
பஸ்துரனமாய் என்று சிரஞ்சீவியாய் வாழ; இதர்க்கு சா

46 க்ஷி சந்திரசூரியாள், ஆகாஷவாணி, பூமி தேவி,
காமாஷி தேவி, ராமலிங்க படையாச்சி, சிவலிங்க பத்

47 தர், சச்சலிங்க நயினார், புத்தாமல்ல செட்டியார்,
கருஊர் முத்துசரப்பள்ளன், செஞ்சி பெரிய அகரம்

---

* 1000 என்ற எண் தமிழ் எண்ணாகத் தரப்பட்டுள்ளது.

48 சோ-வீராசாமி கவுண்டர் கையெழுத்து
49 பழவர்க்காடு-ஆரியமுத்து செட்டியார் கையெழுத்து

---

## பாராட்டி வாழ்த்துகிறோம்



தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையில் பதிவு அலுவலராகப் பணியாற்றி வரும் திரு. மா. சந்திரமூர்த்தி அவர்களின் இரணியூர்க்கோயில், தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் 1989–90 ஆம் ஆண்டிற்கான சிறந்த நூல் பரிசைப் பெற்றுள்ளது. ரூபாய் ஐந்தாயிரம் மதிப்புள்ள இப்பரிசை மாண்புமிகு நிதியமைச்சர் முனைவர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் நூலாசிரியர்க்கு அளித்துப் பொன்னாடை போர்த்திப் பாராட்டினார்கள்.

இராமநாதபுரம் பாண்டித்துரைத் தேவர் தமிழ்ச்சங்கம் நடத்திய சிறந்த நூல் பரிசுப் போட்டியிலும் மா. சந்திரமூர்த்தி தம்முடைய தேமம் கோயில் என்னும் நூலொன்றிற்காகப் பரிசு பெற்றுள்ளார். ஒரே ஆண்டில் இரண்டு பரிசுகளைப் பெற்றிருக்கும் மா. சந்திரமூர்த்தி அவர்களை ஆவணம் பெரிதும் பாராட்டி வாழ்த்தி மகிழ்கிறது.

## 20. அலவந்தபுரம் செப்பேடு - ஒரு குறிப்பு

எஸ். இராமச்சந்திரன்

தஞ்சைமாவட்டம் பட்டுக்கோட்டையைச் சேர்ந்த திரு.தேவநாதன் என்பவரிடமிருந்து 09.03.85 அன்று தமிழ்நாடு அரசின் கலைப் பொருள் விலைக்குப் பெறும் குழுவினரால் இச்செப்பேட்டுத் தொகுதி யும், சிறிய செப்பு சிலைகள் ஐந்தும் விலைக்கு வாங்கப்பட்டன. இவை யனைத்தும் தற்போது தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை யின் பொறுப்பிலுள்ள தஞ்சை மராட்டியர் அரண்மனை அகழ்வைப் பகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

செப்பேட்டுத் தொகுதியில், 28செ.மீ.×19செ.மீ. அளவு கொண்ட மூன்று செப்பேடுகள் உள்ளன. மூன்று ஏடுகளும் மேற்புறத்தில் துளை யிடப்பட்டு விசய நகர அரசின் (சாளுவ குல) முத்திரையான வராக முத்திரை வளையத்தில் கோக்கப்பட்டுள்ளன. நந்தி நாகரி எழுத்து களில் செப்பேட்டு வாசகங்கள் எழுதப்பட்டுள்ளன. முதல் மற்றும் மூன்றாம் ஏடுகள் ஒருபுறம் மட்டுமே எழுதப்பட்டுள்ளன. இரண்டாம் ஏடு இருபுறமும் எழுதப்பட்டுள்ளது. மூன்றாம் ஏட்டில், ஏழாம் வரிக்குப் பின்னர் 7.5 செ.மீ. வெறுமையாக இடைவெளி விடப்பட்டு மீண்டும் தொடர்ந்து எழுதப்பட்டுள்ளது. இறுதியில் ஸ்ரீ விருபாக்ஷ என்று தெலுங்கில் கையொப்பம் இடப்பட்டுள்ளது.

### செப்பேட்டின் முன்பதிப்பு

இச்செப்பேட்டினைப் படித்து ஆய்வு மேற்கொண்டபோது, ஏற் கனவே இச்செப்பேடு திரு.ஒய்.ஆர். குப்தா அவர்களால் பேயலபண்ட செப்பேடு என்ற பெயரில் பதிப்பிக்கப்பட்டுள்ளது எனத் தெரிய வந்தது.[1] ஆனால் அச்செப்பேடு கிடைத்த இடம் ஆந்திர மாநிலம் அனந்தப்பூர் மாவட்டமாகும். நம் செப்பேடு பட்டுக்கோட்டையில் கிடைத்ததாகும். இச்செப்பேடு, பேயல பண்ட செப்பேட்டின் மறுபிரதி யாகும். இச்செப்பேடு குறிப்பிடும் செய்திகள், தமிழ்நாட்டில்திருச்சிராப் பள்ளியிலிருந்து கரூர் செல்லும் வழியிலமைந்துள்ள கிருஷ்ணராயபுரம் என்ற ஊருடன் தொடர்புடையவை. செப்பேட்டுக்கு உரியவர்கள் கன்னடத்தைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள். விசய நகர அரசுக் கருவூலத்துக்குரிய ஒரு பிரதி ஆந்திர மாநிலத்திலும், மறுபிரதி செப் பேடு வழங்கப்பட்ட குடும்பத்தினர் வசமும் உள்ளன எனக் கொள்ள லாம். விசய நகர அரசின் கருவூலப் பிரதி, ஆந்திர மாநிலம் அனந்த பூர் வட்டம் ராயதுர்க்கம் என்ற ஊரின் வட்டாட்சியரிடமிருந்து மையத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப் பிரிவினரால் பெறப் பட்டதாக 1913 ஆம் ஆண்டின் கல்வெட்டறிக்கை கூறுகிறது.

செப்பேட்டு வாசகங்களும் விளக்கமும்

செப்பேடு மொத்தம் 105 வரிகள் கொண்டது. முதல் வரியிலிருந்து 64ஆம் வரி வரை கிருஷ்ணதேவராயரின் மெய்க்கீர்த்தி பொறிக்கப் பட்டுள்ளது. 64ஆம் வரியிலிருந்து 87ஆம் வரி வரை சமஸ்கிருத மொழியில் கொடை பற்றிய செய்தி தெரிவிக்கப்பட்டுள்ளது. விசய நகர மன்னரான கிருஷ்ணதேவராயர், சக ஆண்டு 1446, தாரண வருடம், வைகாசி மாதம் முழு நிலா நாளில் துங்கபத்திரை நதிக் கரையில் விருபாட்சர் திருமுன்னில் வழிபட்ட பின்னர் இவ் ஆணையை வழங்கியுள்ளார். ஆணையின்படி, அகஸ்திய கோத்திரம், போதாயன சூத்திரத்தைச் சேர்ந்தவரும் யஜுர் வேத அத்தியயனம் கற்றவருமான பஞ்சாக்கி விஷ்ணுயஜ்வா என்பவரின் புதல்வரும், வேதங்களில் வல்ல வருமான ந்ருசிம்ஹாத்வரி என்ற பிராமணர்க்கு ''பேயல பண்ட'' என்ற பெயருடைய கிராமம் கிருஷ்ணராயபுரம் எனப் பெயர் மாற்றம் செய்யப்பட்டுக் கொடையாக வழங்கப்பட்டது (பேயல பண்ட என்ற ஊர்ப்பெயர், 77ஆம் வரியில் இடம் பெற்றுள்ளது).

87 ஆம் வரியிலிருந்து 98ஆம் வரி வரை, கொடையாக வழங்கப் பட்ட ஊரின் எல்லைகள் தேச பாஷையில் (நாட்டு மொழியில்) கூறப் படுகின்றன. தேசபாஷை என்பது இங்குக் கன்னட மொழியாகும்.

இதன் பின்னர் 105 ஆம் வரி வரை ஒம்படைக் கிளவி எனத்தகும் சமஸ்கிருதப் பாடல்கள் நான்கு பொறிக்கப்பட்டுள்ளன.

வரி 88–ல் இடம் பெறும் ''த்வீபே யலபந்தோ'' என்ற தொடர் முன் பதிப்பில் ''ஈ பேயல பண்டே'' எனப் படித்துப் பதிப்பிக்கப்பட் டுள்ளது. நந்தி நாகரி எழுத்து மயக்கத்தால் இத்தவறு ஏற்பட்டிருக்க லாம், ''த்3வீபே யலபந்தே'' என்பதன் பொருள் ''யலபந்த என்ற தீவு'' என்பதாகும்.

''யலபந்த'' என்ற பெயருடைய தீவு, கிருஷ்ணராயபுரம் எனப் பெயர் மாற்றம் செய்யப்பட்டுக் கொடையாக வழங்கப்பட்டுள்ளது. இவ் வூர் திருச்சிராப்பள்ளி மாவட்டம் குளித்தலை வட்டத்திலுள்ள கிருஷ்ண ராயபுரமே என்பது தெளிவு. கி.பி. 1545ஆம் ஆண்டைச் சேர்ந்த விசய நகர அரசர் சதாசிவராயரின் திருவரங்கக் கல்வெட்டு கிருஷ்ண ராய அலவந்தபுரம் என இவ்வூரைக் குறிப்பிடுகிறது.[2] எனவே ''அல வந்தபுரம்'' என்பதே ''யலபந்த கிராமம்'' என நமது செப்பேட்டில் கூறப்படுகிறது என்பது புலனாகும். மேலும் கிருஷ்ணராயபுரம் ஊரின் இருபுறமும் இரு ஆறுகள் ஓடுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. காவிரியாற்றுக்கும், கட்டளை வாய்க்கால் எனத் தற்போது வழங்கப் படும் உய்யக் கொண்டான் கால்வாய்க்கும் இடையில் கிருஷ்ணராயு புரம் அமைந்துள்ளது.

வாமன முத்ரை என்பது கன்னடப் பகுதியில் ஆறு முறை குறிப் பிடப்படுகிறது. வைணவ பிராமணர்களுக்குக் கொடுத்ததற்கு அடை யாளமாகவே வாமன முத்திரைக் கற்களை நட்டு எல்லை வகுத்தார்கள் எனலாம்.[3]

சமஸ்கிருதப் பகுதியில்குறிப்பிடப்படும் எல்லைகள் விவரம்

யல பந்த என்கிற கிராமம், ''நடகல்ல துர்க்கம்'' எனும் ராஜ்யத் தின் கிழக்கில் நிர்மாணிக்கபட்டது என்றும், குறும்படீவரம் என்ற சீமையில் அடங்கியது என்றும் கூறப்படுகிறது. கேங்கரை என்ற பெய ருடைய் கிராமத்தின் கிழக்கிலும், ஹல்லூர் என்ற பெயருடைய் கிரா மத்தின் தெற்கிலும், தண்ட மார்க்கத்தின் மேற்கிலும், குறும்படீவரம் என்ற கிராமத்தின் வடக்கிலும் இவ்வூர் நிர்மாணிக்கப்பட்டது எனவும் குறிப்பிடப்படுகிறது.

நடகல்ல துர்க்க ராஜ்யம் எனப்படுவது மதிட்கரை எனப்படும் ஊர்ர அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்ட நாட்டுப் பிரிவா கும். மதுக்கரை எனத் தற்போது அழைக்கப்படும் மதிட்கரையிலுள்ள செல்லாண்டியம்மன் கோயிலில் மூவேந்தர்களும் ஒன்று கூடி, எல்லைத் தகராறுகளைத் தீர்த்துக் கொண்டனர் என்று மதுக்கரைப் பட்டயம் கூறும்.[4] இவ்வாறு வகுக்கப்பட்டதாக நம்பப்படும் மதிள் கரையின் தடயங்களைக் கரூரிலிருந்து மதுரை செல்லும் வழியில் இன்றும் காண லாம். இம்மதிட்கரையின் கிழக்கில் உள்ள பகுதி என்றவிவரத்தினையே இச் செப்பேடு, நடகல்ல துர்க்க ராஜ்யத்தின் கிழக்கு எனக் குறிப்பிடு கிறது. குறும்படீவரம் என்ற சீமை குளித்தலை வட்டமாகும். குளித் தலை வட்டம், சோழர் காலக் கல்வெட்டுகளில் ''குறும்பூர் நாடு'' எனக் குறிப்பிடப்பட்டது.[5] குறும்படீவரம் என்ற கிராமம் குறும்பூர் நாட்டின் தலைமையிடமாக இருந்திருக்கலாம். இவ்வூர் தற்போது குறும் பப்பட்டி என்ற பெயரில் வழங்குகிறது. ஹல்லூர் என நமது செப்பேடு குறிப்பிடுவது அல்லூரே என்பது தெளிவாகும். தண்ட மார்க்கம் என் பது ராஜவீதி எனப்பட்ட பெருவழியாக இருக்கலாம். கேங்கரை எனக் குறிப்பிடப்பட்டுள்ள கிராமம், தற்போது சேங்கல் என வழங்கப்படும் ஊர் போலும்.

அடிக்குறிப்புகள்

1 Peyālabanda, Grant of Krishnaraya, EI, 19, No. 22.

2 நடன். காசிநாதன், கு. தாமோதரன், கல்வெட்டு ஓர் அறிமுகம், தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1976. பக். 54-55.

3 வாமன முத்திரை என்பது பெருமாள் கோயில் நிலங்களின் எல்லைக் கற்களில் பொறிக்கப்படும் முத்திரை எனக் கருதப்படுகிறது. (தென்னிந்தியக் கோயில் சாசனங்கள், பக். 1488). ஆனால் செப்பேட்டில் பெருமாள் கோயில் குறிப்பிடப்படவில்லை.

4 மதுக்கரைப் பட்டயம் கொங்கு — 1974. சோழநாட்டின் மேற்கு எல்லையாகச் சோழ மண்டல சதகம் (பதிப்பு : மாயனூர் சோமசுந்தரதேசிகர் - 1916) கூறும் ''கோட்டைக்கரை'' என்ற ஊரும் குளித்தலை வட்டத்தில் இருப்பதாகக் கருதப்படுகிறது. ''நடைகல் துர்க்கம்'' என்பது கோட்டைக் கரையாக இருக்கக் கூடும். ஆயினும் ராஜ்யம் என்ற பிரிவு, மதிட்கரைக்கே பொருந்தக் கூடியதாகும்.

5 SII, 23, No. 20.

---

## பாராட்டி வாழ்த்துகிறோம்

கட்டடக் கலைத் துறையிலும் கல்வெட்டுத் துறையிலும் இணையற்ற பணி செய்து வரும் பொறிஞர் திரு. கொடுமுடி ச. சண்முகன் அவர்கள் அறிவியல் தமிழ் வளர்ச்சியிலும் பெரிதும் ஈடுபாட்டோடு உழைத்து வருகிறார்கள். கிண்டி பொறியியற் கல்லூரி அண்மையில் நடத்திய இருநூற்றாண்டு நிறைவு விழா நிகழ்ச்சிகளின் போது அறிவியல் தமிழுக்கு கொடுமுடி ச. சண்முகன் ஆற்றியிருக்கும் சிறப்புக்குரிய தொண்டினைப் பாராட்டி அவருக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டு மடல் வாசித்தளிக்கப் பெற்றது.

உரிய நேரத்தில் உரிய பெருமகனாருக்குப் பாராட்டு மங்கலம் நிகழ்த்திய பொறியியற்கல்லூரி நிர்வாகிகளைப் பாராட்டுவதோடு பாராட்டு பெற்ற கொடுமுடி ச. சண்முகனாரையும் வாழ்த்தி மகிழ்கிறோம்.

## 21. நாட்டார் பட்டயம்

பா. சுப்ரமணியன், சி. இலட்சுமணன்

சிதம்பரம், பேராசிரியர் க. வெள்ளைவாரணன் அவர்கள் 7-10-85 அன்று தமிழ்ப் பல்கலைக்கழகத்திற்கு அன்பளிப்பாக வழங்கிய சர்க்கரை இராமசாமி புலவரின் கையெழுத்துச் சுவடிகளுள் 'நாட்டார் பட்டயமும்' ஒன்றாகும். இப்பட்டயம் அரிய கையெழுத்துச் சுவடித் துறையில் பாதுகாக்கப் பெற்று வருகிறது.

ஓரியூர் சீமை மாகாணத்தில் அஞ்சுக்கோட்டைப்பத்தைச் சேர்ந்த நாட்டார் பெருநிலக்கிழார்களாக விளங்கிய பிள்ளைமார், அம்பலக்காரர் முதலியோர் பாகவத காவியம் பிரசங்கம் என்று போற்றப் பெற்ற சர்க்கரைப் புலவருக்கு அவர் செய்த இராமாயணப் பிரசங்கத்திற்காகக் கொடுத்த பட்டயமாகும்.

இப்பட்டயத்தைத் தொடர்ந்து காணப்படும் குறிப்பு யாரால் எழுதப் பெற்றது என்ற தகவல் தரப்படவில்லை. எனினும் பேரா. வெள்ளை வாரணன் அவர்கள் எழுதியிருக்கக்கூடும் என்று கருதவும் இடமுள்ளது.

### பட்டயம்

மஹா மண்டலேஸ்வரன் ஹரிராய தளவிபாடன் மூவராய கண்டன் மண்ட துட்டரில் துட்டன நெட்டூரன், சிட்டரில் சிட்டன் ... உத்தர் சப்த தீவாதிபன் எம் மண்டலமும் திறை கொண்டருளிய ராஜாதி ராஜன் ராஜபரமேஸ்பரன் ராஜகெம்பீரன் ராஜாக்கள் தம்பிரான் ராஜ சமாகோலாகலன் . . . சாளுவன்அஷ்டலக்ஷ்மி சம்பனன்கோப தளவிட பாடன் கோலகண்டன் ஒட்டியர் தழுவிபாடன் ஒட்டியர் மோகந் தவிர்த் தான். துளுவர் மோகந் தவிர்த்தான். துலுக்கர் தளவிபாடன் இளஞ் சிங்கங் கொட்ட மடக்கினன் வையாளி நாராயாணன் இவுளி பாவடி மதிச்சேருவார் கண்டன் பரிக்கு நகுலன் கொடைக்குக் கன்னன் வில் லுக்கு விஜயன் சொல்லுக் கரிச்சந்திரன் சேது காவலன் ராமநாதசுவாமி காரிய சுவாமி பூசாதுரந்தான் அனுமக்கொடி, சிங்கக் கொடி, கருடக் கொடி, புளிக்கொடி, சேவல்கொடி, காவிக்கொடி குடை மேல்ச் சல்லி தீபன் செம்பி வளநாடன் நாவலம் பெருந்தீவுக்கு நாயகன் பிரபு மகா தேவராயர் மல்லிகா விருப்பாக்ஷிதேவ மகாராயர் ஸ்ரீவாகராய பூதேவ ராய அச்சுததேவமாராய . . . . . . . விராச்சியம் பண்ணியருளா நின்ற சாலிய வாகன சகாப்தம் 1775 க்கு மேல் செல்லா நின்ற விப ஸூ உத்திராயணம் சித்திரை மீ 24 தேதி சுக்கிர வாரமும் சதுர்த்தியும்

அசுவதியும் கூடின சுபதினத்தில் ராசமானியார் மகாராசா சாயபு அவர் கள் காரியத்துக்கு கர்த்தரான வெங்கோசி அப்பா அவர்கள் காரியம் ரெங்கநாத முதலியார் அவர்க்கு வடக்கு ஓரியூர்ச் சீமை மாகாணம் அஞ்சுகோட்டைப்பத்து பாம்பாத்துக்குத் தெற்கு திருவேகம்பத்துக்கு கிழக்கு சமுத்திரத்துக்கு மேற்கு நான்கெல்லைக்குள்ப்பட்டவர்கள் பாக வத காவிய பிரசங்கம் சர்க்கரைப் புலவருக்குப் பட்டயங் கொடுத்த பரிசாவது.

அஞ்சுகோட்டைப்பத்து நாட்டார் அறுநூற்றுமங்கலம் . . . . . கி கணக்கப்பிள்ளை திருவத்தூர் பாண்டிப் பெருமாள் பிள்ளைகட்கு குடி தேவித்தா பிள்ளை கொட்டகுடி அழகபிள்ளை கள்ளிக்குடி சேவுகப் பெருமாள் பிள்ளை சூரப்புளி அழகிய நம்பியா பெருமாள் பிள்ளை வாகைக்குடி பெருமாள் பிள்ளை புல்லுக்குடி அழகபிள்ளை இவர்கள் முதலிய பிள்ளைமார்களும்

அஞ்சுகோட்டை தேவத்தான அம்பலகாரன் கருமலைத் தேவன் சின்னாதித் தேவன் பிச்சைக் . . . . . . . பிள்ளையாரேந்தல் மல்லா ரித்தேவன் கிளியூர் ராக்கத்தேவன் ஐஞ்சு ரெண்டு வயல் மன்னங்காரன் அம்பலம் சேமணி வயல் மாதரிவ கோட்டை சோற்றுப் பாளைய அம்பலம் மங்கலம் மார்க்கனம்பலம் கல்லூர் பலகுடி பச்சை மாலைப் பெருமாள் பிள்ளை ஆடானை ஆதியூர் ஆதிகாவ வாடானை குப்பைப் பிச்சை மருதன்குடி கருப்பன் அம்பலம் ஆற்றங்கரை மாகாணம் ஆண்டியப்பணம்பலம், இரவுசேரி அனுமத்தேவன், வெங்களூர் திடக் கோட்டை தேவன் மல்லித்தேவன் திருக்கோட்டித் தேவன் பொன்னன் செட்டியார் ஆக்களூர் கட்டத்தேவன் ஆவணியாத் தேவன் பேய்த் தேவன் நாராயணசெட்டி வீரக்கோன் புலியூர் நல்லாப்பிள்ளை புல்லூர் ஆண்டித்தேவன் . . . . . . . . வீரப்பன் அம்பலகாரன்புள்ளாருதேவன் வேடப்பன் அம்பலகாரன் கஞ்சாங்கோன் பணிச்சக்குடி ஆவுடையப்பப் பிள்ளை சித்தாமங்கலம் சேவுகன் அம்பலகாரன் குஞ்சரங்குளம் மரிச்சி வெட்டி அம்பலக்காரன் ஓரியூர் உடையார் அம்பலகாரன் மாகாளி முக்கந்தன்

பனஞ்சாயல் வெள்ளையத்தேவன் குப்பாதேவன் நாவலூர் வடுகத் தேவன் ஆவத்தாபிள்ளை பெரியண்ணபிள்ளை மருங்கூர் முருகப்பன் பெருமாள்க்கோன் வட்டாணம் வீராண்டி. . . .சின்னத்தொண்டிபொன் னக் கண்டி இடை நாச்சியப்பன் தேளூர் திருமலைக்கோன் மணக்குடி கருதேவன் பளங்குளம் கோரணி அம்பலகாரன் முளுத்தகம் எழுத்தார் அளதேவன் . . . . . . ஆண் திருத்தல் வளை சித்திரன் அம்பலகாரன் சீனி அம்பலக்காரன் பாரூர் ஆடானை அம்பலக்காரன் இலுப்பைக்குடி உடைச்சி அம்பலக்காரன் ஆயங்குடி ஆண்டான் அம்பலகாரன்

கொக்காகூரணி ராயப்பன் அம்பலகாரன் ஆயங்குடி ஆவுடைய . . . . . . . சனவேலி சாத்தப்பன்அம்பலகாரன் கீழ்ப்பனையூர் கோணத் தேவன் சிறுவண்டல . . . . . . . . பரன் தோட்டாமங்கலம் செய்யான் அம்பலக்காரன் நகரிகாத்தான் பெரியம்பலக்காரன் சின்ன அம்பல காரன் ஆலம்பாடி சின்னக் கள்ளப்பத்தான் பாவூர் ஆடானைத் தேவன் அரசத்தூர் வீரப்பன் அம்பலகாரன்

பெறுவாக்கோட்டை ரெகுநாதன் சேருவைக்காரன் மங்கலக்குடி ராயப்பன் முத்துவீரப்ப முக்கந்தன் மல்லனூர் உடையார் அம்பலக் காரன் சிறுநல்லூர் குப்பையன் அம்பலக்காரன் பாகனூர் நல்லபெரு மாள் தேவன் ஆலத்தூர் முட்டாபிள்ளை முருகப்பன் வசந்தனூர் ராம லிங்க . . . . . அம்பலக்காரன் குதிரைவெட்டி ராவுத்தன்அம்பலகாரன் சருவன் அம்பலகாரன் களபத்தூர் முண்ணை அம்பலகாரன் கப்பலூர் கரிய மாணிக்கம் படிக்காசு அம்பலக்காரன் பொன்னாண்டான் அம்பல காரன் . . . . . . . . . கண்ணங்குடி படை கண்டான் அம்பலகாரன் சிறுக் கல் உடைச்சியம்பலக்காரன் திருப்பக்கோட்டை சாத்தப்பன் விளங்குடி திருவெங்கடக்கோன் ஆரக்கோட்டை கருங்க நாடான் அனுமந்தக் குடி வணங்காமுடி அம்பலக்காரன் விளாங்காட்டூர் கருதப்பன் அம்பல காரன் சிறுவாரூர் சின்னப்ப அம்பலம் சிறுணையூர் சங்ககிரி நாச்சியப் பனம்பலம் பிடாரனேந்தல் உலகப்பனம்பலகாரன் நனியூர் பொத்த அம்பலகாரன் சுக் . . . . . சித்தூர் நாட்டாரனைவரும் திருவாடா னையில் ஆதிரெத்னேஸ்வரர் சந்நதியில் கொடுத்த பட்டயமாவது

ராமசரித்திர ராமாயணம் பரிசுக் கட்டளையாக இச் . . . . . . . . . . . தேவதாயம் பிரமதாயம் மானியம் மடப்புறம் பண்ணைக் கிராமம் ஆமரக் கிராமத்தில் அரமனைக்கும் குடிக்கும் பொதுவில் நஞ்சைபுஞ்சை விளைந்த நிலத்துக்கு மாத்தாக் குறுணி . . . . . . . . நாட்டார் பட் டயமாகக் கொடுத்த படியினாலே இந்தப் பட்டயம் பிரகாரம் சந்திராத் தித்தர் வரைக்கும் பயனெவ்வளவோ அந்தப் பலனை அடைவதாகவும்

இதைப் பொய்யென்று நினைத்தவர்கள் சேதுவிலே காசியிலே காராம் பசுவைக் கொன்ற தோஷத்தை அடைவாரகவும், இந்தப் பட்ட யம் மெழுதினேன் வாகைக்குடி பெருமாள் பிள்ளை.

பின்குறிப்பு

இன்ப நலன் பழுஇனிய கவியிசைக்கு ஆற்றலுடையவராய்ப், பிரசங்கம் ஆற்றுவதில் வல்லுனராய்ச் சமயநெறி வழுவாத வொழுக்க முடையவராய் விளங்கினார்.

சேது சமஸ்தானத்திலுள்ள இராஜசிங்கமங்கலம் தாலுகா, அறு நூற்று மங்கலந் தாலுகா, அனுமந்தக்குடித் தாலுகா, ஒரூர்த் தாலுகா,

கோட்டைப் பட்டணம் தாலுகா என்று ஐந்து தாலுகாக்களிலும் மாத்தாக் குறுணி சாரி மகமைப் பட்டயம் சேதுபதிகளால் முன்னரே பொன்னெட்டி மாலைச் சர்க்கரைப் புலவருக்குக் கொடுத்து அம் மகமைத் தவறாது நடைபெற்று வருவதன்றி ஓருர் மாகாணத்திலுள்ள பெருநிலக் கிழவர்களாகிய அம்பலக்காரர்களும், முக்கந்தர்களும், குடிகளும், இவர் செய்த இராமாயணப் பிரசங்கத்துக்குப் பரிசாக இவருக்குக் குடிவாரத்தில் மாத்தா பதக்குப் பட்டயம் எழுதிக் கையெழுத்திட்டு கொடுத்திருக்கிறார்கள். இதனாலேயே இவர் பெருமையும் இவர்பால்அவர்கள் வைத்த பேரன்பும் தெள்ளிதின் விளங்குகின்றது. இப்பட்டயமாவது . .

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

முக்கந்த ரென்பவர் வெற்றிலைக் கொடிக்காற் பயிரிடுபவர்களுக்குத் தலைவர்.

---

## பாராட்டி வாழ்த்துகிறோம்

டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையத்தின் மதிப்புறு கல்வெட்டாய்வாளரான செல்வி மு. நளினி அவர்கள் திருச்சி நகரத்தின் மிகச் சிறந்த பத்துப் பெண்களுள் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அண்ணாநகர் மகளிர்மன்றத்தாரால் பாராட்டப் பெற்றார்.

திருச்சி நகர அனைத்து மகளிர் மன்றங்களும் இணைந்து நடத்திய மகளிர் ஆண்டு சிறப்பு விழாவின் போது திருச்சியின் பெருமைக்குரிய மகளிரில் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மு. நளினிக்கும் பாராட்டும் பரிசும் அளிக்கப்பட்டன.

ஒரே ஆண்டில் இரண்டு பரிசுகளைப் பெற்ற மு. நளினி அவர்களை ஆவணம் பாராட்டி வாழ்த்துகிறது.

## 22. கல்வெட்டுக்கள் வாயிலாக அறியப்படும் சில பாண்டிநாட்டுத் துறைமுகப்பட்டினங்கள்

பா. ஜெயக்குமார்

பொதுவாகத் தென்னிந்தியாவில் பழங்காலத் துறைமுகங்கள் அல்லது கடற்கரை நகரங்கள் தங்கள் பெயர்களுடன் 'பட்டினம்' என்ற பின்ஒட்டுடன் காணப்படுவது யாவரும் அறிந்த ஒன்றாகும். சங்க இலக்கியங்களும், வெளிநாட்டவர்களின் குறிப்புகளும் பழங்காலத் தமிழகத்தின் துறைமுகப் பட்டினங்களைப் பற்றிய பல குறிப்புகளைக் கொண்டு விளங்குகின்றன. இவையன்றி கி.பி. 11ஆம் நூற்றாண்டு முதல் நமக்குக் கிடைக்கும் கல்வெட்டுக்கள் பல துறைமுகப் பட்டினங்களைப் 'பட்டினம்' என்ற பின் ஒட்டுடன் சுட்டுகின்றன.

இராமநாதபுரம் மாவட்டத்தில் இராமேஸ்வரம் தீவிற்கு வடக்கே ஒரு சிறு மீனவ கிராமமாக அமைந்துள்ள தேவிபட்டினம் இடைக்காலத்தில் ஒரு முக்கியத் துறைமுகமாக இருந்தது. தேவிபட்டினத்தில் கிடைக்கின்ற கல்வெட்டுக்களில் ஒன்று மாறவர்மன் இரண்டாம் சுந்தர பாண்டியன் காலத்தில் கி.பி.1242ஆம்ஆண்டு வெளியிடப்பட்டதாகும். இக்கல்வெட்டு இக்கடற்கரைப் பட்டினத்தைச் சீறிளங்கோ மங்கலம் என்ற உலகமாதேவிப்பட்டினம் என்றும், இவ்வூர் செவ்விருக்கை நாடு என்ற நாட்டுப் பிரிவில் அமைந்திருந்ததாகவும் குறிப்பிடுகிறது.[1] இப்பெயர் உலகமாதேவி என்ற பாண்டிய அரசியின் பெயரால் தோன்றியிருக்க வேண்டும். இங்குக் கிடைக்கின்ற மற்றொரு கல்வெட்டு பாண்டியன் சடையவர்மன் இரண்டாம் விக்கிரமபாண்டியனின் நான்காவது ஆட்சியாண்டில் (கி.பி.1348) வெளியிடப்பட்டுள்ளது.[2] இக்கல்வெட்டு இத்துறைமுகப் பட்டினத்தை ஸ்ரீவல்லபட்டினம் என்று குறிப்பிடுகிறது. இப்பெயர்கொண்டு இவ்வூர், பாண்டியமன்னன் ஸ்ரீவல்லபன்பெயரால் அழைக்கப்பட்டுள்ளது என்று திடமாகக் கருத இடமுண்டு. ஆனால் 16ஆம்நூற்றாண்டில் வெளியிடப்பட்டுள்ள கல்வெட்டு ஒன்று இத்துறைமுகத்தின் பெயரைத் தேவிபட்டினம் என்று மட்டுமே குறிப்பிடுகிறது.[3] இது, முதலில் குறிப்பிடப்பட்டுள்ள உலகமாதேவிப்பட்டினம் என்பதன் சுருக்கமே எனக்கருதலாம். அடைப் பகுதியான 'உலகமா' என்பது பிற்காலத்தில் மறைந்திருக்கிறது.

மேலே காட்டியுள்ள குறிப்புக்களிலிருந்து இடைக்காலப் பாண்டியர்கள் தேவிப்பட்டினத்தை ஒரு முக்கியத் துறைமுகப் பட்டினமாகக் கருதியதை உணர முடிகிறது. இதற்கு மேலும் வலுவூட்டும் வகையில், தேவிப்பட்டினத்தில் கிடைக்கின்ற கல்வெட்டுக்கள் இத்துறைமுகத்தில் இறக்குமதி (இறங்குவன), ஏற்றுமதி (ஏறுவன)செய்யப்பட்ட பொருள்களையும் அப்பொருள்களின் மீது விதிக்கப்பட்டுள்ள வரிகளைப் பற்றி

யும் குறிப்பிடுகின்றன.[4] பலவகையான சரக்குகள் இத்துறைமுகத்தின் வழியாகச் சென்றுள்ளன. குறிப்பாகப் பாக்கு, மிளகு மற்றும் பல நறு மணப் பொருள்கள் இங்கிருந்து பிற இடங்களுக்கு ஏற்றுமதி செய்யப் பட்டுள்ளன. இவையன்றி, உள்நாட்டில் பல இடங்களிலிருந்தும் வியாபாரப் பொருள்கள் இத்துறைமுகம் வழியாக ஏற்றுமதி செய்யப் பட்டுள்ளதையும் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. சரக்குகள் சிறிய மற்றும் பெரிய கலங்கள் மூலம் இத்துறைமுகத்திற்குக் கொண்டு வரப் பட்டன. இக்கலங்கள் மீதும் துறைமுகத்தில் வரிகள் விதிக்கப்பட்டன. ஒரு தோணிக்குத் துறைமுக நுழைவு வரியாகக் கால் பணம் வசூலிக்கப் பட்டது. தோணியைக் காட்டிலும் சற்றுப் பெரியதாகக் கருதப்படும் சிற்றுரு என்னும் வகையைச் சேர்ந்த கலம் ஒன்றுக்குத் துறைமுக நுழைவு வரியாக அரைப்பணம் வசூலிக்கப்பட்டது. நானாதேசிகள் எனப்படும் பழந்தமிழகத்தின் வணிகக் குழுவினர் இத்துறைமுகப் பட்டி னத்தில் தங்கிக் கடல் வாணிகத்தில் ஈடுபட்டிருந்தனர்.

தேவிப்பட்டினத்தைப் போலவே வீரபாண்டியன் பட்டினம் மற்றும் குலசேகரபட்டினம் ஆகிய இரண்டு துறைமுகப் பட்டினங்களும் இடைக் காலப் பாண்டியர்களின் முக்கியத் துறைமுகங்களாக விளங்கின. இவ் விரண்டு துறைமுகங்களின் பெயர்களும் முறையே அவை பாண்டிய அரசர்களாகிய வீரபாண்டியன் மற்றும் குலசேகர பாண்டியன் ஆகி யோர் பெயரால் அழைக்கப்பட்டன என்பதைத் தெளிவாகக் காட்டு கின்றன. தற்பொழுது இவ்விரண்டு கடற்கரைக் கிராமங்களும் 10கி.மீ. இடைவெளித் தூரத்தில் வ.உ. சிதம்பரனார் (முன்னாள் திருநெல் வேலி)மாவட்டம் திருச்செந்தூர் வட்டத்தில் அமைந்துள்ளன.

வீரபாண்டியன் பட்டினத்தில் கிடைத்துள்ள கொல்லம் ஆண்டு 563இல் (கி.பி. 1387இல்) பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றில் இவ் விடம் 'சோணாடு கொண்டான் பட்டினம்' என்று குறிப்பிடப் பட்டுள்ளது.[5] 'சோணாடு கொண்டான்' என்பது பாண்டிய மன்னன் முதல் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் (கி.பி.1216-41) ஒரு சிறப்புப் பெயராகும். இதே கல்வெட்டு இத்துறைமுகத்தில் ஏற்றுமதி, இறக்கு மதி சிறப்பாக நடைபெற்றதைக் குறிக்கின்றது. எவ்வகையான சரக்கு கள் ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்பட்டன என்பது கல்வெட்டில் காணப்படவில்லை. எனினும், சரக்கு விற்பனை விலையில் 4 பணத் திற்குக் கால் பணம் இவ்வூரில் அமைந்திருந்த 'ஜீமாத்துப் பள்ளி'க்குப் பரிசாகக் கொடுக்கப்பட்டது. இடைக்காலப் பாண்டியர்கள் ஆட்சியில் முஸ்லிம் இனத்தவர் இத்துறைமுகப் பட்டினத்தில் செல்வாக்குப் பெற்று விளங்கினர் என்பதை இதன் மூலம் அறிய முடிகின்றது. இதே கால கட்டத்தில் பாண்டியர்களின் மிகச்சிறந்த துறைமுகமாகக் கருதப்பட்ட காயல்பட்டினம் இவ்வூரிலிருந்து 7கி.மீ. தொலைவில் அமைந்திருந் தது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

மதுரையை ஆட்சி செய்த நாயக்க மன்னர்களில் ஒருவரான வீரப்ப நாயக்கர் காலத்தில் கொல்லம் ஆண்டு 744 (கி.பி. 1569) இல் வெளியிடப்பட்ட கல்வெட்டு குலசேகரபட்டினம் துறைமுகமாக இருந்ததைக் காட்டுகிறது.[6] அப்பொழுது இப்பகுதி மானவீரவளநாடு என்ற நாட்டுப் பிரிவில் இருந்தது. பிற்காலப் பாண்டியர்களுள் ஒருவரான குலசேகரன்பெயரால் அமைந்த இத்துறைமுக ஊர், நாயக்கர் காலத்திலும் அம்மன்னன் பெயராலேயே வழங்கப்பட்டதென்பதை இக்கல்வெட்டு உணர்த்துகிறது. இத்துறைமுகத்திலிருந்து எடுத்துச் செல்லப்பட்ட முக்கிய சரக்காக நெல் காணப்படுகிறது. இத்துறைமுகத்தில் தரகர்களது 'தரகுக்கடைகள்' இருந்தன. இத்தகைய தரகர்கள் துறைமுகத்திற்கும், துறைமுகத்தைப் பயன்படுத்துபவர்களுக்கும் நடுவில் பிரதிநிதிகளாகச் செயல்பட்டு அதற்குக் கைமாறாகத் 'தரகு' பெற்றனர். சரக்குகளைப் பாதுகாப்பாக வைப்பதற்கு ஒரு பண்டகசாலையையும் இத்துறைமுகம் கொண்டிருந்தது.

13 ஆம் நூற்றாண்டின் இடைப்பட்ட காலகட்டத்தைச் சார்ந்த கல்வெட்டு ஒன்று தேவர் திருமகனார் (முன்னாள் இராமநாதபுரம்) மாவட்டம், பிரான்மலையில் உள்ள சொக்கநாதர் கோயிலின் தென் பக்கச் சுவரில் உள்ளது.[7] இக்கல்வெட்டு திசையாயிரத்து ஐநூற்றுவர், பதினெண் விசயத்தார் மற்றும் நகரத்தார் போன்ற வாணிகக் குழுக்கள் மேற்கொண்ட ஏற்றுமதி, இறக்குமதி வாணிகம் மற்றும் அக்காலத்திய முக்கிய வியாபாரச் சரக்குகளின் பெயர்களையும் குறிப்பிடுகிறது.[8] இக்கல்வெட்டில் சுட்டப்படும் பல வணிக நகரங்களுள் குலசேகரபட்டினம் என்ற பெயரும் காணப்படுகிறது. அருவிமாநகர் என்று முதற் பெயர் கொண்டிருந்த இந்தக் குலசேகரபட்டினம் கேரள சிங்க வளநாடு என்ற நாட்டுப் பிரிவின் கீழ் அமைந்திருந்ததாகவும்சொல்லப்படுகிறது. கேரளசிங்க வளநாடு திருப்பத்தூர் வட்டத்தில் மையம் பெற்றிருந்தது. மேலும், அருவியூர் திருப்பத்தூர் வட்டத்தில் சிவகிரிக்கு அருகில் உள்ள ஊர் என்பது அவ்வூர்க் கல்வெட்டுக்கள் வாயிலாகத் தெளிவாகின்றது.[9] ஆகவே கடற்கரைத் துறைமுகமான குலசேகரபட்டினம் வேறு பிரான் மலைக் கல்வெட்டும் சுட்டும் குலசேகரபட்டினம் வேறு என்பதும் இதன்படி தெளிவாகின்றது. மாறாக, மீரா ஆப்ரஹாம் தம் கட்டுரையில் மேற்கூறிய இரண்டு குலசேகரபட்டினங்களையும் ஒன்றாகக் கருதி பிரான் மலைக் கல்வெட்டில் சொல்லப்படும் இறக்குமதி, ஏற்றுமதிப் பொருள்கள் இத்துறைமுகம் வழியாகத்தான் சென்றன என்று கருத்துத் தெரிவித்துள்ளது சரியானதன்று.[10] ஆயினும் கல்வெட்டிலுள்ள வாணிகப் பொருள்கள் மேலே கூறப்பட்டுள்ள பாண்டி நாட்டின் துறைமுகங்கள் வாயிலாகவே இறக்குமதி, ஏற்றுமதி செய்யப்பட்டிருக்க வேண்டும். அந்த வகையில் திருச்செந்தூர்க்கருகில் உள்ள குலசேகரபட்டினமும் ஒன்றாக இருந்திருக்க வாய்ப்புண்டு. இவ்வாணிகப் பொருள்கள்

அனைத்துமே பாண்டி நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன என்று சொல்ல இயலாது. பல பொருள்கள் வெளிநாடுகளிலிருந்து இத்துறை முகங்கள் வழியாக இங்கு இறக்குமதி செய்யப்பட்டு பின்பு இங்கிருந்து பிற இடங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டிருக்கலாம். காட்டாக, குதிரை நிச்சயமாக மேற்கு ஆசியாவின் ஒரு பகுதியிலிருந்து வந்திருக்க வேண்டும். இதே காலத்தில் காயல்பட்டினத்தில் செங்கடல் மற்றும் ஏடன் வளைகுடாப் பகுதிகளுக்கு இடைப்பட்ட அரேபிய பகுதிகளிலிருந்து பெருமளவில் குதிரைகள் இறக்குமதி செய்யப்பட்டதை மார்க்கோ போலோ குறிப்பிலிருந்து அறிகிறோம்.[11]

அடிக்குறிப்புகள்

1. SII, Vol. VIII, No. 404, pp. 214-215.
2. SII, Vol. VIII, No. 403, pp. 213-214.
3. SII Vol. VIII, No. 408, p. 216.
4 SII, Vol. VIII, No. 403 & 405, pp. 213-215.
5. ARE, No. 311: 1964, p. 85.

* பாடம்:

... சோணாடு கொண்டான் பட்டினத்து ஜீமாத்துப் பள்ளிக்கு உதைய மார்த்தாண்டப் பெரும்பள்ளி என்று பேருங் குடுத்து ... ... இந்தப் பள்ளிக்கு சுவந்திரமாக இந்தச் சோணாடு கொண்டான் பட்டினத் துறையில் ஏற்றுமதி இறக்குமதி கொள்ளும் வகைகளுக்கு ... ...

6. ARE, No. 308: 1964, p 85.

* பாடம்:

... ... மான வீர வளநாட்டு குலசேகரன் பட்டினத்து நயினார் குலசேகர வின்னகர் எம்பெருமானுக்கு ... ... ... மார்த்தாண்டபிள்ளையும் மங்காதமைத்தானும் தானப்பிரமானம் எழுதிக் கொடுத்தப் பரிசாவது இவ்வூராரின் தரகுக் கடையிலும் கடற்கரைப் பண்டக சாலையிலும் அழத்திடும் வாள் நெல் பெ[குவா]யில் தரகு நெல்லில் பொதி ஒன்றுக்கு நெல்லு நாழியாக ...

7. SII, Vol. VIII, No. 442, pp. 231-234.
8. இப்பகுதியிலிருந்து முக்கிய ஏற்றுமதி, இறக்குமதிப் பொருள்களாக உப்பு, நெல், அரிசி, பயறு, அவரை, துவரை, ஆமணக்கங் கொட்டை, பாக்கு, மிளகு, மஞ்சள், சுக்கு, வெங்காயம், கடுகு, சீரகம், இரும்பு, பருத்தி, நூல், பரும் புடவை, நென் புடவை, மெழுகு, தேன்குடம், பட்டு, சந்தனம் அகில், பன்னீர், கற்பூரம், குதிரை மற்றும் யானை போன்றவை காணப்படுகின்றன.
9. ARE, No. 16-83: 1929, pp. 7-13.
10. Meera Abraham, 'A Medieval Merchant Guild of South India,' Studies in History, Vol. IV. No. 1, (1982) pp. 1-26.
11. Nilakanta Sastri, K.A., Foreign Notices of South India, University of Madras, Reprinted 1972, pp. 179–180.

---

* கல்வெட்டுப் பாடங்களைப் பார்க்க அனுமதி வழங்கிய இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை கல்வெட்டியல் இயக்குநர் அவர்களுக்கு நன்றி.

# மலையமான் திருமுடிக்காரியின் முள்ளூர் மலை அடையாளம் தெரிந்தது

கொடுமுடி ச. சண்முகன்

திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த சங்க காலக் குறுநில மன்னன் திருமுடிக்காரியைப் 'பெண்ணையம் படப்பை நாடு கிழவோனே' என்று அழைத்தனர் புலவர் (புறம் 126).

''செவ்வேல் முள்ளூர் மன்னன் கழல்தொடிக்காரி'' என்பார் கல்லாடனார் (அகம் 209). 'பயன்கெழு முள்ளூர்' என்பார் கபிலர் (புறம் 123). ''பெருமழைக்கு இருக்கை சான்ற உயர்மலைத் திருத்தகு சேய்'' என்பார் வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனார்.

திருமுடிக்காரியின் முள்ளூர் மலை எதுவென அறிஞருலகம் இது வரை அறியாதிருந்தது. அண்மையில் இந்த மலை அடையாளம் காணப் பட்டது.

ஒரு மலையடிவாரத்தில், கல்வட்டங்கள், தாழி ஓடுகள், கறுப்பு, சிவப்பு ஓடுகள் கிடைக்கின்றன வென்றும், அவற்றைக் காணவேண்டு மெனவும் பனைமலைப் பேட்டைப் புலவர் சி. மகிழ்நன் சில ஓடுகளோடு சில நாட்களுக்கு முன்பு வந்து கூறினார். அங்கு ஊர் எதுவும் இல்லை என்றும் முள்ளூர், கிராமம் என்றும் சொன்னார்.

செஞ்சி வட்டத்தில், அனந்தபுரத்திலிருந்து, கணக்கன்குப்பம் செல்லும் வழியில் தாண்டவ சமுத்திரத்திற்கு முன்னதாக ஒரு மலைத் தொடர் தெரிகின்றது. அது அமைந்துள்ள இடம் முள்ளூர் கிராமம். ஒரு மலையின் பெயர் முள்ளூர் மலை. மற்றது பாஞ்சாலத்தார் மலை என்றழைக்கப்படுகிறது. முள்ளூர் ஏரி என்ற பெயரில் ஓர் ஏரியும் உள்ளது.

பாஞ்சாலத்தார் மலை அடிவாரத்தில் திரு. லூர்துசாமி என்பவர் குடும்பத்தோடு குடியிருந்து கொண்டு கொல்லைகளைப் பார்த்து வருகிறார். ஆய்வுக்கு அவர்கள்செய்த உதவி போற்றற்குரியது. அவர் மலையடிவாரத்தில் பல பழமைச் சின்னங்களைக் காட்டினார். கல்வட்டங்கள் பல இன்னும் உள்ளன. புல்டோசர் மூலம் வேளாண் பொறியியல் துறை ஒரு குட்டைக்கான மண் தோண்டிக் கரை அமைத்துள்ளது. கரையில் மண் ஈமப் பேழையின் உடல்பகுதி, கால்கள், எலும்புகள், கறுப்பு, சிவப்பு ஓடுகள் போன்றவை கிடைக்கின்றன.

சில கல்வட்டங்களின் நடுவில் ஈமக் கற்பேழையின் பலகைக் கற்கள் காணப்படுகின்றன. புல்டோசர் இழுத்து வந்த கற்பலகைகளும் ஆங்

காங்கு கிடைக்கின்றன. வயலாக்குவதற்காகவும் சில கல்வட்டங்கள் சிதைக்கப்பட்டுள்ளன. மூன்று சிறு கால்களில் நிற்கும் சிறு பானையின் அடிப்பக்கத் துண்டு கிடைத்தது. மண் ஈமப்பேழையின் வயிற்றுப்பகுதிப் பல்அலங்கார வரிசை கொண்ட சிற்றோடு கிடைத்தது. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முந்திய ஊரின் எச்சங்கள் இவையென்பதில் எந்த அய்ய மும் இல்லை. முள்ளூர் மலை அருகில் ஊர் அமைந்திருக்கக் கூடிய மேட்டுப்பகுதி தென்படுகிறது. அந்த இடம் முழுவதும் தற்போது வய லாகி விட்டது. ஒருவயலுக்குப் பெயர் ''நடுத்தெருக் கொல்லை''. இன் னொன்று ''கம்பத்தடிக் கொல்லை''. இவை ஓர் ஊர் இருந்ததற்கான குறிப்புகளெனக் கொள்ளலாம்.

திரு. லூர்துசாமி அந்த வட்டாரத்தில் நான்கு கல்வெட்டுகளைக் காட்டினார். கல்லேரி ரோட்டுத் தெருவில் தேவடியார் பாறையில் ஒரு கல்வெட்டும், தச்சம்பட்டுக் கல்லோடைப் புறடையில் ஒன்றும், நெல்லி மலை சுனைப்பாறையில் ஒன்றும், முள்ளூரை ஒட்டியுள்ள தாண்டவ சமுத்திரம் கிராமம் சந்திக்குமிடத்தில் பாஞ்சாலம் பாறையில் ஒன்றும் உள்ளன. அனைத்தும் 200 ஆண்டுகட்கு உட்பட்டவை. கடைசிக் கல் வெட்டு கீழ்வருமாறு உள்ளது.

குறோதி வருடம் காத்திகைப் 15 ஆவது
வெங்களி நாயக்கர் தன்மமாக
முள்ளூர் எல்லைல் மலைறாமேரகுகளி
ஆண்டார்கும் கப்பால திருமென்றாயினர்கும்
மற்றும் உள்ளிட்டாற்கும் விட்ட தன்மம்
இத்தன்மத்துக்கு அகுதம் நினைத்தவன்
கெங்கைக் கரையிலே காராம்பசுவை
கொன்ற பாவத்திலே போவன்
அங்கறாயர்

பழம் தொல்லியல் சின்னங்களையும், முள்ளூர் என்ற பெயரொப்புமை யையும், அது அமைந்துள்ள பெண்ணைப் பகுதியையும் கருத்தில் கொண்டால் இம்முள்ளூரே பெரும்பாலும் மலையமான் திருமுடிக்காரி யின் முள்ளூர் என்று கொள்வது தவறாகாது.

---

## 24. தேர்க்குரவைகள்

அர. அகிலா, மு. நளினி, வே. கல்பகம், இரா. கலைக்கோவன்.

தொல்காப்பியப் பொருளதிகாரத்துப் புறத்திணை இயலில் வாகைத் திணையின் பல்வேறு துறைகள் பேசப்படுமிடத்து தேர்க்குரவைகள் சுட்டப்படுகின்றன. ''தேரோர் வென்றகோமான் முன்தேர்க் குரவையும்', 'ஒன்றிய மரபிற் பின்தேர்க் குரவையும்'[1] என்ற வரிகளால் இருவிதத் தேர்க்குரவைகள் இருந்தமையும், அவை தேரின் முன்னும் பின்னும் ஆடப்பட்டமையால் முன்தேர்ப், பின்தேர்க் குரவைகளாயின என்பதும், முதற்குரவையில் மன்னனும் கலந்து கொண்டான் என்பதும் விளக்கமாகின்றன.

இளம்பூரணர் முன்தேர்ச் குரவையைக் குறிக்கும் தொல்காப்பிய வரிக்கு உரையெழுதுமிடத்துத் 'தேரோரைப் பொருது வென்ற அரசன் தேர்முன் ஆடும் குரவையும்' என்று விரித்துச் சொல்கிறார்.[2] இதற்கு அவர் எடுத்துக் காட்டியிருக்கும் சங்கப்பாடல் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. இந்தப் பாடலில் தேர் இடம் பெறவில்லை என்பது ஒரு புறமிருக்கக் குரவை என்ற சொல்லே எடுத்தாளப்படவில்லை. பாடலின் இறுதி வரிகள்,

'உருகெழு பேய்மகள் அயரக்
குருதித்துகள் ஆடிய களங்கிழ வோயே'[3] என்று முடிகின்றன.

போர்க்களத்தில் பிணந்தின்று குடல் மாலை சூடி மகிழ்ந்த பேய்மகள், தன் பசி தீர்த்த மன்னனை வாழ்த்தியாடிய செய்திதான் இவ்வரிகளில் அடைக்கலமாகியுள்ளது. கல்லாடனார், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனைக் களங்கிழவோயே என்று விளித்துப் பாடிய பாடல் இது. போர்க்களம் வென்றார்க்கு உரித்தானமையால், வென்ற வேந்தனைக் களங்கிழவோயே என்பது மரபு. 'குருதித் துகளாடிய' என்பதற்கு உ. வே. சா. உரையில் விளக்கமில்லை. 'குருதி உலர்ந்து துகள்பட்ட போர்க்களத்தை உரிமை கொண்டவனே' என்று கல்லாடனார் நெடுஞ்செழியனைப் பாடிப் புகழ்வதாக திரு. அவ்வை சு. துரைசாமி பொருள் தருகிறார்.[4]

பேய்மகள் அயர என்ற தொடரில் உள்ள 'அயர்தல்' என்னும் சொல்லுக்குப் பல பொருள்கள் உண்டு. அவற்றுள் ஆடுதல் என்ற பொருளே இங்குப் பொருந்தும். புறநானூற்றின் மற்றொரு பாடலிலும்,

'அழுகுரல் பேய்மகள் அயரக் கழுகொடு
செஞ்செவி எருவை திரிதரும்
அஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே'[5] என்று வருவது இங்கு

ஒப்பு நோக்கத்தக்கது. ஆடல் பற்றி வரும் சங்கப் பாடல்களுள் பல அயர்தல் என்றே ஆடலைக் குறிக்கின்றன.

''நறவுநாட் செய்த குறவர்தம் பெண்டிரொடு
மான்தோல் சிறுபறை கறங்கக் கல்லென
வான்தோய் மீமிசை அயரும் குரவை''[6]

''குழையன் கோதையன் குறும்பைந் தொடியன்
விழவயர் துணங்கை தழூஉகம் செல்ல'' [7]

''அன்புறு காதலர் கைபிணைந்து ஆய்ச்சியர்
இன்புற்று அயர்வர் தழூஉ''[8]

இதனால், நெடுஞ்செழியனின் போர்க்களத்தில் பிணந்தின்று மகிழ்ந்த பேய்மகள் அதற்குக் காரணமான மன்னனைப் போற்றி ஆடிய செய்திதான் இளம்பூரணரின் எடுத்துக்காட்டிலிருந்து கிடைக்கிறது. இப்பேய்மகள் ஆடியது முன்தேர்க் குரவையாகுமா? இளம்பூரணர் எப் படி முன்தேர்க் குரவைக்கு இப்பாடலை மேற்கோளாகக்கொண்டார்?

முன்தேர்க் குரவை நூற்பா வரிக்கு உரையெழுதும்போது நச்சி னார்க்கினியர், 'தேரின்கண் வந்த அரசர் பலரையும் வென்ற வேந்தன் வெற்றிக் களிப்பாலே தேர்த்தட்டிலே நின்று போர்த்தலைவரோடு கை பிணைந்து ஆடும் குரவை' என்று விளக்கம்தருகிறார்.[9] தேர்த் தட்டிலே நின்றாடுவதுதான் முன்தேர்க் குரவையென்றால், பின்தேர்க் குரவை எங்கு நிகழும்? நச்சினார்க்கினியரே தேரின் பின்னே நிகழ்வதுதான் பின்தேர்க் குரவையென்கிறார். அப்படியாயின் முன்தேர்க் குரவையென் பது தேரின் முன்னால் நிகழ்வதாகுமே தவிர தேரினுள் ஆடுவதாகாது. தேர்த்தட்டு ஓரிருவர் நின்று செயற்படுவதற்கு இடமளிக்குமே தவிர சிலர் இணைந்து ஆடுவதற்குப் பயன்படாது. குரவை என்பது தனியர் ஆடல் அல்ல. அது ஒரு குழு ஆடல். காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச் செய்யுள் பாட்டாக எழுவரேனும், எண்மரேனும், ஒன்பதின் மரேனும் கைபிணைந்தாடுவதே குரவை. குரவை பற்றிப் பேசும் சங் கப்பாடல்கள் அனைத்தும் குரவையைக் குழு ஆடலாகவே காட்டுகின் றன. நச்சினார்க்கினியரும் வென்ற மன்னன் போர்த்தலைவரோடு கைபிணைந்தாடியதாகவே கூறுகிறார். இந்நிலையில் இக்குழு ஆடல் எங்ஙனம் தேர்த்தட்டில் நிகழ்ந்திருக்க முடியும்? மிகப் பெரிய தேராக இருந்திருந்தால் ஒருவேளை எழுவரோ, எண்மரோ, அத்தேரின் தட்டில் ஆட முயற்சிக்கலாம். போர்க்களத்தில் மிகப் பெரிய தேர்கள் எப்படி இயங்க முடியும்? விரைந்து செலுத்தவல்ல தேர்களையே போர்க்களத் தில் விரும்புவர். அதுவும் மன்னன் தேர் காற்றினும் விரைந்து செல்வது போலவே வடிவமைக்கப்படுவது மரபு. மேலும் தேர்த்தட்டில் ஆடப் படும் குரவை தேருள் குரவையாகுமே தவிர முன்தேர்க் குரவையா

காதே. தேர்த்தட்டு தேரின் முன்பகுதி என்பதால் இது முன்தேர்க் குரவை ஆகலாமென்று வாதிட்டால், பின்தேர்க் குரவைக்குத் தேரின் எந்தப் பகுதியைத் தேடுவது? ஆக எப்படி நோக்கினும் தேர்க்குரவை தேர்த்தட்டில் நிகழ்ந்திருக்க முடியாது.

போர்த் தலைவர் என்ற சொல்லாட்சியும் பொருத்தமாகத் தோன்றவில்லை. மன்னனே போரின் தலைவன். அவன் கீழ்ப் படைத் தலைவர்கள் இருக்கலாமே தவிர போர்த் தலைவர்கள் இருக்கமுடியாது. பல சிற்றரசர்கள் உடன் வந்திருந்தாலும் கூட அவர்களும் படைத் தலைவர்களாகவே கருதப்படுவர். போர்க்களத்தில் ஒரு தலைவன்தான் இருக்க முடியும். போர்க்கள வரலாறுகளும் அப்படித்தான் சொல்கின் றன. பல மன்னர்கள் சேர்ந்து ஒருவன் மீது படை எடுத்தாலும், அவர் களுள் ஒருவரே அனைவர்க்கும் தலைமையேற்பது இன்றைய ஈரான் போரிலும் கண்ட காட்சிதான். எனவே போர்த்தலைவர் என்பதினும் படைத்தலைவர் என்றிருப்பின் பொருள் நலம் பொலிந்திருக்கும் எனில் அது பிழையாகாது.

நச்சினார்க்கினியர் முன்தேர்க் குரவைக்கு இரண்டு பாடல்களைக் காட்டுகளாய் வைக்கிறார். ஒன்று, பதிற்றுப்பத்தில் ஆறாம் பத்திலி ருந்து எடுக்கப்பட்டுள்ளது. காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பாடிய இப்பாடல் தொகுதியில் வென்றிச் சிறப்புப் பகுதி நச்சினார்க்கினியரால் எடுத்தாளப்பட்டுள்ளது.

''கோடியர் முழவின் முன்னர் ஆடல்
வல்லான் அல்லன் வாழ்கஅவன் கண்ணி
வலம்படு முரசம் துவைப்ப வாள்உயர்த்து
இலங்கும் பூணன் பொலங்கொடி உழிஞையன்
மடம்பெரு மையின் உடன்றுமேல் வந்த
வேந்து மெய்ம் மறந்த வாழ்ச்சி
வீந்துகு போர்க்களத்து ஆடும் கோவே''[11]

இந்தப் பாடலின் துறை பதிற்றுப்பத்தில் ஒள்வாள் அமலைத் துறை யாகக் குறிக்கப்பட்டுள்ளது. தும்பைத் திணையின் 'களிற்றொடு பட்ட வேந்தனை அட்ட வேந்தன் வாளோர் ஆடும் அமலை' என்ற துறைக் குரிய பாடலாகத்தான் இளம்பூரணரும் இப்பகுதியைக் காட்டுகிறார்.[12] ஒரே பாடலை நச்சினார்க்கினியரும் இளம்பூரணரும் இரு வேறு துறை களுக்காய் எடுத்தாண்டிருப்பது வியப்பைத் தருகிறது. பாடலில் வரும் 'வாள் உயர்த்து' என்ற தொடர் மிக முக்கியமானது. பகை மன்னர் வீழ்ந்த போர்க்களத்தில் வாள் உயர்த்தி ஆடிய மன்னனாக ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் பாராட்டப் பெறுகிறான். குரவையில் வாள்

உயர்த்தி ஆடுதல் இடம் பெறாது. குரவை என்பது செழுநிலை மண்டலக் கடகக் கைகோத்து அந்நிலைக் கொட்ப நின்றாடலாகும்.[13] சேரலாதன் வாளுயர்த்தி ஆடியதாகப் பாடல் சொல்கிறதே தவிர, குரவையாடியதாகப் பேசவில்லை. இதேபாடல் தொகுதியில் இம்மன்னன்,

'துணங்கை ஆடிய வலம்படு கோமானாகவும்'[14]

''முழாஇமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணையாக
சிலைப்புவல் ஏற்றின் தலைக்கை''[15] தந்தவனாகவும் குறிக்கப் பெறுவது நினைக்கத் தருந்தது. இவன் குரவை நிகழ்த்தியிருந்தால், நச்செள்ளையார் துணங்கையைக் குறித்தது போலவே குரவையையும் குறித்திருப்பார். சேரலாதனின் ஒள்வாள் அமலையை நச்சினார்க்கினியர் முன்தேர்க் குரவையாகக் கொண்டது ஏனென்று தெரியவில்லை.

முன்தேர்க் குரவைக்கு நச்சினார்க்கினியர் காட்டும் மற்றொரு பாடல் எந்த இலக்கியத்திலிருந்து எடுத்தாளப்பட்டுள்ளது என்பதே தெரியவில்லை.

''சூடிய பொன்முடியும் பூணும் ஒளிதுளங்க
ஆடிய கூத்தரின்வேந் தாடினான் - வீடிக்
குறையாடல் கண்டுவந்த கொற்றப்போர் வாய்த்த
இறையாட ஆடாதார் யார்?''[16]

இந்த வெண்பாவும் களத்தில் ஆடிய வேந்தனைக் காட்டுகிறதே தவிர தேர்க்குரவையைச் சுட்டவில்லை.

இளம்பூரணரும் நச்சரும் எடுத்துத் தந்துள்ள பாடல்கள் எதுவும் முன்தேர்க் குரவையை விளக்காத நிலையில், தொல்காப்பியர் அறிவுறுத்தும் முன்தேர்க் குரவையைப் பற்றிய படப்பிடிப்பைப் பெற முடியவில்லை. தேரூர்ந்து வந்த பகைவர்களை வென்ற அரசனின் தேர்முன் குரவை நிகழ்ந்தது இந்தக் குரவையில் அரசனும் பங்கு பெற்றான். வெற்றியைக் கொண்டாடி, நிகழ்ந்த இம்முன்தேர்க் குரவை வென்றி வகை ஆடலாகும்.

இது பற்றிக் குறிக்குமிடத்தில், ''முன்தேர்க் குரவை என்ற பெயரில் அமைந்திருந்தாலும், 'வென்ற கோமான் முன்தேர்க் குரவையும்' என்று ஒரு நபர் கூத்தாக விளக்கப்படுவதால், தழுவுதல் செய்தும் தலைக்கை தந்தும் ஆடிய குரவைக் கூத்திலிருந்து இது மாறுபட்ட ஒரு கூத்தே எனல் வேண்டும்'[17] என்றுரைக்கும் திரு. ஜாண் ஆசிர்வாதத்தின் முடிவு வியப்பளிக்கிறது. முன்தேர்க் குரவை என்பது குரவையின் வரையறைக்குள் வராதென்று இவர் கருதுவது பிழையாகும். நிகழும்

இடத்திற்கேற்பவும், நிகழ்த்துவோர் யாரென்பதைப்பொறுத்தும்குரவை பெயர் பெறலாமே தவிர, 'குரவை' என்ற சொல்லால் குறிக்கப்படும் ஆடல், குழு ஆடலாக மட்டுமே இயங்க முடியும். நச்சினார்க்கினியர் உரை, முன்தேர்க் குரவையைக் குழு ஆடலென்று உறுதிப் படுத்துவது இங்கு நினைக்கத்தகுந்தது. அரசன் தேர்முன் ஆடும் குரவையும் என்ற தனால் அரசன் மட்டும் ஆடினான் என்று பொருளல்ல. அப்படி ஆடியிருந்தால் அது குரவையென்று ஏற்றுக்கொள்ளப்பட்டிராது. வென்ற அரசனின் தேர்முன் நிகழ்ந்த இந்த வெற்றிக் குரவையில் அரசனும் கலந்து ஆடியிருத்தலே இயல்பாகும். அரசன் கலந்து கொண்டதால் சிறப்புப் பெற்ற இக்குரவையை விசேடிக்கவே 'வென்ற கோமான் முன்தேர்க் குரவையும்' என்று தொல்காப்பியர் குறிப்பிட்டிருக்க வேண்டும். குரவையில் தனியர் ஆடுவது என்பதே கிடையாது. அப்படி எந்தக் குரவையும் நிகழ்ந்ததாக சங்க இலக்கிய வரிகள் எதுவும் சொல்லவில்லை. இந்நிலையில் 'வென்ற கோமான் முன்தேர்க் குரவை' என்ற வரிகொண்டு குழு ஆடலான முன்தேர்க் குரவையைத் தனியர் ஆடலாகவும், மாறுபட்ட கூத்தாகவும் இவர்கொண்டது சரியல்லவென்றே தோன்றுகிறது.

முன்தேர்க் குரவையைப் பற்றிப் பேசும்போது ஜாண் ஆசிர்வாதம் தெரிவிக்கும் கருத்துகள் வியப்பைத் தருகின்றன. அவற்றை ஒவ்வொன்றாகப் பார்ப்போம்.

''துணங்கை, குரவை என்ற இரு கூத்துகளையும் சேர்த்துக் குறித்து வரும் இலக்கியக் குறிப்புகளில் பெரும்பாலும் துணங்கையே முன் குறிக்கப்படுவதால் துணங்கையே முன் பிறந்த கூத்தாதல் வேண்டும்,'' [18] என்று கூறும் திரு. ஆசிர்வாதம் இரண்டு கூத்துகளையும் குறித்து வரும் சங்க இலக்கியக் குறிப்புகளாகக் காட்டுவது இரண்டு தான். இதில் 'பெரும்பாலும்' என்பதற்கே இடமில்லை. இவ்விரண்டிலும் கூட துணங்கை குறிக்கப்படுகிறதே தவிர குரவை என்ற சொல் இல்லை. தழூஉ என்ற சொல்தான் உள்ளது.

''இலங்குவளை மடமங்கையர்
துணங்கையஞ்சீர்த் தழூஉம் மறப்ப''[19]

''விழவு நின்ற வியன் மறுகில்
துணங்கையந் தழூஉவின் மணங்கமழ் சேரி''[20]

இப்பாடல் வரிகளில் உள்ள 'தழூஉ' குரவையைக் குறிப்பதாக உரையாசிரியர்களால் சொல்லப்படுகிறது. ஆனால் இதே தழூஉ துணங்கைக்குரிய குறிப்பாகவும் கையாளப்பட்டுள்ளது.

''துணங்கைக்குத் தழூஉப் புணையாக''[21]

''விழவயர் துணங்கை தழூஉகஞ் செல்ல ''[22]

''மகளிர் தழீஇய துணங்கை யானும்''[23]

இங்குத் தழூஉ என்பதற்குக் கைகோத்துக் கொள்ளுதல், தழுவிக்கொள்ளுதல் என்று உரையாசிரியர்கள் பொருள் சொல்கிறார்கள். துணங்கைக் குத் தழூஉ என்னுமிடத்தில் மட்டும் தழுவுதல் பொருளைத் தரும் தழூஉ, துணங்கையந் தழூஉ, துணங்கையஞ் சீர்த் தழூஉ என்னுமிடங் களில் குரவையைக் குறிப்பதாகக் கொள்வது சரியாகுமா?

தழூஉ என்பது தழுவலைக் குறித்ததாகக் கொள்ளலாமே தவிர குர வையைத் தனித்துச் சுட்டியதாகக் கருத இயலவில்லை.

''கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்
சீர்மிகு நெடுவேல் பேணித் தழூஉப்பிணையூஉ
மன்று தொறு நின்ற குரவை''[24]

''குரவை தழீஇயா மரபுளி பாடித்
தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுது''[25]

என்னும் வரிகள் இவ்வுண்மையை வலியுறுத்தும். தழுவுதல் துணங்கைக் கும், குரவைக்கும் பொதுவான ஒரு செய்கையாக இருந்தமையால் இரண்டைக் குறிக்குமிடத்திலும் தழூஉ கொள்ளப்பட்டது. தழூஉ என்ற செய்கையைக் குரவையென்ற கூத்து வடிவமாகக் கொள்வது அத்தனைப் பொருத்தமுடையதாகத் தெரியவில்லை. அப்படியே கொள்வதானாலும் இரண்டு இடங்களில் முன்னதாகச் சொல்லப்படுவ தாலேயே, ஒரு கூத்து வடிவம், பழமை வாய்ந்ததெனச் சொல்வது பொருத்தமாயிராது. தமிழகத்தையாண்ட மூவேந்தர்களைக் குறிக்கு மிடங்களில் எல்லாம் சேர, சோழ, பாண்டியர் என்றுதான் சொல் கிறோம். இப்படிச் சொல்வதாலேயே சேரர்கள்தான் மூத்த பழங்குடியி னர், சோழரும் பாண்டியரும் அவர்களிலிருந்து கிளைத்தவர் என்றா பொருள் கொள்வது.

துணங்கை குரவையினும் பழமையான வடிவமாக இருந்திருந்தால் தொல்காப்பியத்தில் இடம் பெற்றிருக்கும். அதற்கு மாறாக வெறி யாட்டு, காந்தள், வள்ளி, குரவை என்று பல்வகைக் கூத்து வகை களை அறிமுகப்படுத்தும் தொல்காப்பியம் யாண்டும் துணங்கையைக் குறிக்கவில்லை. இதுவொன்றே துணங்கை தொல்காப்பியர்க்குப் பிற் பட்ட கூத்து வடிவமென்பதை நிறுவப் போதுமானதாகும்.

துணங்கை, மகளிர்த் துணங்கை, போர்த் துணங்கை, பேய்த் துணங்கை என்று மூன்று வகைகளாய்இருந்ததென்கிறார் ஆசிர்வாதம்.[26] இது சரியல்ல. குரவையைப் போல நிகழ்ந்த இடத்தாலும், காலத்தா லும், நிகழ்த்துபவராலும் துணங்கை எந்த அடையையும் பெறவில்லை. பதிற்றுப்பத்தில் கூட 'வென்றாடு துணங்கை' என்றுதான் குறிப்புள் ளதே தவிர 'வென்றித் துணங்கை' என்ற சொல்லாட்சியில்லை.

துணங்கை சங்க காலத்தில் நிலை பெற்றிருந்த ஒரு கூத்து வடிவம். இதை மகளிர் ஆடினர். மைந்தரும் பங்கேற்றனர். இது போர்க்களத்திலும் நிகழ்த்தப்பட்டது. போர்க்களத்தில் இக்கூத்தை வீரர்கள் ஆடினர். பேயும் ஆடியதாகப் புலவர்கள் கற்பனை செய்து மகிழ்ந்தனர்.

''பேய்த் துணங்கையினைப் பின்பற்றி அமைந்த ஒரு கூத்து முறையே போர்த் துணங்கையாதல் வேண்டும். துணங்கையிலிருந்து குரவை வளர்ச்சி பெற்ற காலத்தில் இவ்விரு கூத்துகளும் முறையே முன்தேர்க் குரவையென்றும், பின்தேர்க் குரவையென்றும் பெயர் பெற்று இயங்கத் தொடங்கின.[28]

''துணங்கைத் தன்மைகளைக் கொண்ட பேய்த் துணங்கையும் போர்த் துணங்கையும் கூட முன்தேர்க் குரவையென்றும் பின்தேர்க் குரவையென்றும் குரவையின் பெயராலேயே அழைக்கப்படலாயின''[29]. ''பின்தேர்க் குரவையான பேய்த் துணங்கையின் வழியில் அமைந்தது முன்தேர்க் குரவையான போர்க்குரவை'' (? போர்த்துணங்கை).[30]

இம்மூன்று கருத்துகளிலும் ஜாண் ஆசிர்வாதம் தமக்குத் தாமே முரணுகிறார். இரண்டு இடங்களில் பேய்த் துணங்கையே முன்தேர்க் குரவையாகப் பெயர் மாற்றம் பெற்றதென்பவர், மற்றோர் இடத்தில் போர்த் துணங்கையே(நூலில் போர்க் குரவையென்று பிழையாக அச்சிடப்பட்டுள்ளது) முன்தேர்க் குரவை என்கிறார். அதுபோலவே இரண்டு இடங்களில் போர்த் துணங்கை பின்தேர்க் குரவையானது என்பவர் பிறிதோரிடத்தில் போர்த் துணங்கையே முன்தேர்க் குரவை என்கிறார். இது போதாதென்று, பேய்த் துணங்கை, போர்த் துணங்கை இரண்டனுள் பேய்த் துணங்கையைப் பின்பற்றியே போர்த்துணங்கை அமைந்ததென்று கூறி, அதன்வழி பேய்த் துணங்கையைக் காலத்தால் முற்பட்ட கூத்து வடிவமாகக் காட்டுகிறார். இவரே மற்றோர் இடத்தில், 'பேய்த் துணங்கை பற்றிய செய்திகள் கற்பனையானவையாகவும், தம்பத் தகாதனவாயுமுள்ளன' என்று ஒப்புக் கொள்கிறார்.[30A]

போர்த் துணங்கையென்று இவர் குறிப்பிடும் போர்க்களத்தில் வீரர்களால் ஆடப்பட்ட துணங்கை ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், சேரன் செங்குட்டுவன், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை ஆகிய மூன்று சேர மன்னர்களோடு தொடர்பு படுத்திப் பதிற்றுப்பத்தில் பேசப்படுகிறது.[31] பேயாடும் துணங்கையோ திருமுருகாற்றுப்படையில் மட்டும் இடம் பெறுகிறது.[32] இந்த இரண்டு இலக்கியங்களில் எது பழமையானது என்று சொல்லவும் வேண்டுமோ? பேயாடிய துணங்கை புலவர்களின் கற்பனை. போர்க்களத்தில் வீரர்கள் ஆடிய துணங்கையையும், குரவையையும் கண்டு, கேட்டுக் களித்த புலவர்கள் பேயும்

அவற்றை நிகழ்த்திக் காட்டியதாக எழுதி மகிழ்ந்தனர். முற்றிலும் கற்பனையென்றும், நம்பத்தகாதது என்றும் திரு. ஆசிர்வாதமே குறிப்பிடும் பேயாடு துணங்கையை எப்படிப் போர்க்களத் துணங்கைக்கு முந்து வடிவமாகக் கொள்ள முடியும்? நடந்திருக்க முடியாத ஒரு காட்சியை எப்படி யார் பார்த்துப் போர்த் துணங்கையை வடிவாக்கம் செய்திருக்க முடியும்? ஊரில் இயல்பாக நடந்த துணங்கைக் கூத்தைப் போர்க்களத்தில் வெற்றிக் களிப்பில் ஆடவர் ஆடினர். புலவர்கள் கேட்போர் இன்பத்திற்காகப் பேயையும் ஆடவைத்து மகிழ்ந்தனர்.

துணங்கையின் வகைகளே தேர்க்குரவைகளாயின என்று ஆசிர்வாதம் சொல்வது பொருந்தாது. தேர்க்குரவைகள் இவர் குறிப்பிடும் துணங்கை வகைகளுக்குக் காலத்தால் முற்பட்டவை. அதனால்தான் தொல்காப்பியத்தில் இடம் பெற்றன. குரவைக்கும், துணங்கைக்கும் நிகழ் முறையில் சில ஒற்றுமைக் கூறுகள் இருந்திருக்கலாமே தவிர, அதில் இருந்துதான் இது வந்ததென்பதோ, இதில் இருந்துதான் அது வந்ததென்பதோ, தக்க சான்றுகள் தராத நிலையில், பொருத்தமாயிராது.

தொல்காப்பியர் குறிப்பிடும் வென்றிக்கூத்தான முன்தேர்க் குரவை சங்க காலத்தில் தொடரப்பட்டதா என்பதை அறியக்கூடவில்லை. போர்க்களத்தில் நடைபெற்ற வீரர் துணங்கை, பேயாடு துணங்கை, ஒள்வாள் அமலை போன்ற ஆடல்களைக் குறிப்பிட்டுப் பேசும் சங்க இலக்கியங்களுள் ஒன்றில் கூட தேர்க்குரவைகள் இடம் பெறாதது வியப்பையே தருகிறது. இரட்டைக் காப்பியங்களுள் ஒன்றான சிலப்பதிகாரத்தில்தான் சங்க இடைவெளிக்குப் பிறகு தேர்க்குரவைகள் மீண்டும் இடம் பெறுகின்றன.

கால்கோட் காதையில் சேரன்செங்குட்டுவனின் படைகள் பொருது வென்ற போர்க்களத்தை வண்ணனை செய்யுமிடத்தில் முன்தேர்க் குரவை சுட்டப்படுகிறது.[33] இந்த முன்தேர்க் குரவையின் போது வாளேர் உழவனாகிய செங்குட்டுவனின் போர்க்களத்தை வாழ்த்தி வளையணிந்த தன் பெரிய கைகளை அசையத் தூக்கி, முடியுடைக் கருந்தலை ஏந்திப் பேயொன்று பாடுகிறது. அதன் பாட்டில் மாயவனோடு தொடர்புடைய பாற்கடல் போர், இலங்கைப்போர், பாண்டவ கௌரவப்போர் ஆகியன இடம் பெறுகின்றன. இக்காட்சி முன்தேர்க் குரவைக்குரிய பாடல் பொருளைப் பற்றிய சிந்தனையைத் தருவதுடன், முன்தேர்க் குரவை, பாடலொடு கலந்த ஆடல் என்பதையும் தெளிவு செய்கிறது.

சிலம்பையடுத்து முன்தேர்க் குரவையை நமக்குக் காட்டும் நூல் புறப்பொருள் வெண்பா மாலை. இந்நூலில் தும்பை, வாகை என இரண்டு படலங்களிலும் முன்தேர்க் குரவை இடம் பெறுகிறது.

தும்பை மறவர்கள் தம் மன்னன் எழுந்தருளியிருக்கும் தேர்முன் ஆடியதை முன்தேர்க் குரவையென்று துறையின் கொளு வரையறுக்கிறது.[34] இது போர் நடந்து கொண்டிருக்கும் போதே நிகழ்ந்த குரவையாகத் தோன்றுகிறது.

வாகையின் முன்தேர்க் குரவை வென்ற மன்னனின் தேர்முன் நிகழ்கிறது. இங்கு ஆடுவன பேய்கள். பகை மன்னர் நடுங்கும்படி கள வேள்வி செய்து வெற்றிவாகை சூடிய மன்னனின் புகழைப் போர் முரசுகளின் வெற்றி முழக்கம் எதிரொலிக்கிறது. எமக்கு நன்மையைச் செய்த இம்மன்னன் நெடுங்காலம் வாழ்க என்று அவனைப் போற்றி மன்னனின் தேர்முன் புலால் நாறும் வாயும் புல்லிய தலையுமுடைய பேய்கள் ஆடுகின்றன.[35] இந்தக் காட்சியே இளம்பூரணரைப், புறநானூற்றின் பேயாடு பாடலை முன்தேர்க் குரவைக்குக் காட்டாகக் கொள்ளுமாறு செய்திருக்கலாம்.

தொல்காப்பியர் கால முன்தேர்க் குரவை போரில் வென்ற மன்னனின் தேர்முன் நிகழ்ந்தது. இதில் மன்னனும் பங்கேற்றான். சிலம்புக் காலத்திலும் வென்ற மன்னனின் தேர்முன்தான் குரவை நிகழ்ந்தது. இது எவ்விதம் நிகழ்ந்தது என்பதை அறிய முடியவில்லையாயினும், குரவையின் போது போர்கள் பற்றிய பாடல்களே பாடப்பட்டன என்பதை சிலம்பின் வரிகள் தெளிவாக்குகின்றன. தொல்காப்பியக் குரவையில் காணப்படாத பேய், சிலப்பதிகாரக் காலத்தில் பாடல்களைப் பாடி, வென்ற மன்னனை குரவையின் போது வாழ்த்தும் நிலையில் தலை காட்டுகிறது. புறப்பொருள் வெண்பா மாலையோ போரில் மலையும் மன்னனின் தேர்முன்பே குரவையை நிகழ்த்திக் காட்டுகிறது. தும்பை சார்ந்த இம்முன்தேர்க் குரவையை மறவர்கள் நிகழ்த்துகின்றனர். இதில் மன்னன் பங்கேற்றதாகப் பாடல் குறிக்கவில்லை. சிலப்பதிகாரக் காலம் வரை போர்க்கள வெற்றிக்குப் பின் நிகழ்ந்து வந்த முன்தேர்க் குரவை, புறப்பொருள் காலத்தில் முதல் முறையாகப் போர் நடக்கும் போதே நிகழ்வதாகக் காட்டப்படுகிறது. அது மட்டுமல்லாமல் வீரர்களோடு கலந்து மகிழ்ந்து கூத்தாடிய நிலையிலிருந்து மன்னன் பிரிக்கப்பட்டுத் தேரூர்பவனாகக் காட்டப்படுகிறான். வெற்றி பெற்ற நிலையில் மீண்டுமொரு முன்தேர்க் குரவை நிகழ்கிறது. இங்குப் பேய்கள் குரவையாடுகின்றன.

தொல்காப்பியர் காலத்தில் வீரர்களுடன் மன்னன் ஆடினான். சிலப்பதிகாரக் காலத்தில் வீரர்கள் ஆடப் பேய் பாடியது. மன்னன் ஆடினானா என்பது தெரியவில்லை. ஆடியிருக்கலாம் என்று நம்ப இடமுண்டு. பதிற்றுப்பத்தில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும், சேரன்

செங்குட்டுவனும் போர்க்கள ஆடல்கள் நிகழ்த்தியதாகக் குறிக்கப்படும் செய்தி இந்நம்பிக்கையின் தளமாய் அமைகிறது. புறப்பொருள் காலத்தில் தும்பையில் வீரர்கள் ஆட, வாகையில் பேய்கள் ஆடியதாகப் புலவர்கள் பாடினர். ஆனால் இரண்டிடத்திலும் மன்னன் ஆடலில் கலந்து கொள்ளவில்லை. தொல்காப்பியர் காலத்தில் வென்றாடு குரவையாக இருந்த இம்முன் தேர்க்குரவை புறப்பொருள் காலம் வரை அதே நிலையில் தொடர்ந்ததுடன், காலப்போக்கில் போர் நிகழ் காலத்துக் குரவையாகவும் வளர்ச்சி பெற்றதையும், வீரர்களோடு வீரனாக இருந்த தொல்காப்பிய மன்னன் வெண்பா மாலைக் காலத்தில் தலைவனாகித் தள்ளிப் போவதையும் காண முடிகின்றது.

பின்தேர்க் குரவை

பின்தேர்க் குரவையைக் குறிப்பிடும் தொல்காப்பிய நூற்பா 'ஒன்றிய மரபிற் பின்தேர்க் குரவையும்' என்று அந்தத் துறையை அறிமுகப் படுத்துகிறது. இளம்பூரணர் 'பொருந்திய மரபின் தேர்ப்பின் ஆடும் குரவையும்' என்று இந்நூற்பாவிற்குப் பொருள் விளக்கம் தருகிறார்.[36] முன்தேர்க் குரவைக்குச் சொல்லப்படாத 'ஒன்றிய மரபு' பின்தேர்க் குரவைக்குச் சொல்லப்பட்டிருந்தும், அதை விளக்கும் முயற்சியில் இளம்பூரணர் ஈடுபடவில்லை. இந்த நூற்பாவிற்கு எடுத்துக் காட்டாக அவர் தரும் பாடல் புறப்பொருள் வெண்பா மாலையின் வாகைப் பின்தேர்க் குரவையாக அமைந்துள்ளது. இதில் போர் மறவரும் விறலியரும் களிறும் பிடியும் போல வென்ற மன்னனின் தேரின் பின்னர் போர்க்களத்தே குழுமிக் கைகோத்துக் குரவையாடினர்.

நச்சினார்க்கினியர், 'தேரோரை வென்ற கோமாற்கே பொருந்திய இலக்கணத்தானே தேரின் பின்னே கூழுண்ட கொற்றவை கூளிச் சுற்றம் ஆடும் குரவை' என்று இந்நூற்பாவிற்கு விளக்கம் தருகிறார்.[37] இவ்விளக்கத்தால் பின்தேர்க் குரவையைச் சிறப்பித்து தொல்காப்பியர் போட்டு வைத்திருக்கும் மரபு வளையத்தைச் சரியாக அடையாளம் காட்டியவர் என்ற முறையில் நச்சரைப் பாராட்டலாம். இந்தத் துறைக்கு நச்சர் இரண்டு காட்டுகளைத் தருகிறார். ஒன்று புறநானூற்றுப் பாடல். இதே பாடலைத்தான் இளம்பூரணர்முன்தேர்க் குரவையை விளக்க எடுத்தாண்டிருந்தார். உணவளித்த மன்னனை வாழ்த்திப் பேய்மகள் ஆடும் இந்த ஆடல் குரவையுமல்ல; இது தேரின் பின் நடந்ததுமல்ல. இந்தப் பாடலை உரையாசிரியர்கள் எடுத்தாண்டிருப்பது பொருத்தமாகத் தெரியவில்லை. நூற்பா விளக்கத்திலேயே 'கொற்றவை கூளிச்சுற்றம் ஆடும் குரவை' என்று தெளிவாகப் பொருள் தரும் நச்சினார்க்கினியர், எடுத்துக் காட்டைத் தரும்போது தனியொரு பேய்மகளின் மகிழ்வாடலைப் படம் பிடித்துக் காட்டியிருப்பது விந்தையாக

உள்ளது. முன்தேர்க் குரவைக்குப் போய்மகளின் இந்த ஆடலை எடுத்துக் காட்டாக இளம்பூரணர் தந்திருப்பது அதனினும் விந்தையானது. ஏனெனில் முன்தேர்க் குரவை மன்னனும் சேர்ந்து நிகழ்த்துவது.

பின்தேர்க் குரவைக்கு நச்சர் தரும் மற்றொரு எடுத்துக் காட்டு புறத்திரட்டில் இருந்து எடுத்தாளப்பட்டுள்ளது.

''வென்று களங்கொண்ட வேந்தன்தேர் சென்றதற்பின்
கொன்ற பிணநிணக்கூழ் கொற்றவை - நின்றளிப்ப
உண்டாடும் பேய்கண் டுவந்தனவே போர்ப்பரிசில்
கொண்டா டினகுரவைக் கூத்து''.[38]

வெற்றி பெற்ற மன்னனின் தேர் சென்ற பின், வீழ்ந்துபட்ட பிணங்களின் நிணக்கூழைக் கொற்றவை அளிக்க, உண்டு மகிழ்ந்த பேய்கள் குரவையாடியதாக இப்பாடல் எடுத்துரைக்கிறது. இது பின்தேர்க் குரவையா அல்லது பேய்க் குரவையா என்பதை முடிவு செய்ய சிலம்பும் புறப்பொருள் வெண்பா மாலையும் பெரிதும் உதவுகின்றன. 'பின்தேர்க் குரவை பேயாடு பறந்லை' என்னும் சிலப்பதிகார வரி[39] முன்தேர்க் குரவையில் போர்க்களச் செய்திகளைப் பாடலாகத் தந்து களித்த பேய், பின் தேர்க் குரவையில் குரவையாடி மகிழ்ந்த காட்சியைப் படம் பிடிக்கிறது.

வெண்பா மாலையில், முன்தேர்க் குரவை போலவே பின்தேர்க் குரவையும் தும்பை, வாகை ஆகிய இரண்டு திணைகளிலும் பேசப்படுகிறது. தும்பைப் பின்தேர்க் குரவையில் மன்னனின் தேர்ப்பின் போர் மறவரும் யாழ்வல்ல விறலியரும் பாட்டிசைத்து ஆடிக் கொண்டு வருகின்றனர்.[40] வாகைப் பின்தேர்க் குரவையிலும் அதே நிலைதான்.[41] இந்த இரண்டில் வாகைப் பாடலைத்தான் இளம்பூரணர் பின்தேர்க் குரவைக்குக் காட்டாகக் கொண்டுள்ளார். இந்தப் பாடல்களாலும், இத்துறைகளுக்கான கொளுக்களாலும் வெண்பா மாலைக் காலத்தில் பின்தேர்க் குரவை, தும்பை, வாகை என எத்திணை சார்ந்ததாய் நிகழ்ந்த போதும், வீரர்களாலும் விறலியராலுமே நிகழ்த்தப்பட்டதென்பதை மிகத் தெளிவாக அறிய முடிகிறது. வெண்பா மாலை, தும்பைத்திணை சார்ந்த ஆடலாகப் பேய்க்குரவையைத் தனியே தருகிறது. கடல் போன்ற படையை உடைய தும்பை மன்னனது தேரின் முன்னும் பின்னும், அவன் பகைவர் நிணங்கொண்ட பெரிய வாயினையுடைய பேய்க்கூட்டம், மன்னனின் தறுகண்மையை வாழ்த்தி மகிழ்ந்து கூத்தாடியது

'ஒன்றிய மரபின் பின்தேர்க் குரவை' என்று சுருங்கச் சொல்லியதன் மூலம் தேரின் பின்னால் வாகைத் திணையில் குரவை நிகழ்ந்த

செய்தியை மட்டும் தருவதோடு தொல்காப்பியம் நின்று கொள்கிறது. இந்தக் குரவை எப்படி நிகழ்ந்தது, யாரால் நிகழ்த்தப்பட்டது என்ப தற்கு அதில் விளக்கம் இல்லை. இளம்பூரணர் வெண்பா மாலை எடுத்துக் காட்டைத் தருவதன் மூலம் இக்குரவை மறவராலும் விறலியராலும் நிகழ்த்தப்பட்டதென்பதை ஒப்புக் கொள்கிறார். நச்சரோ இக்குரவையைக் கொற்றவையின் கூளிச் சுற்றம் ஆடியதாகக் கூறுகிறார். அவர் தரும் இரண்டு எடுத்துக்காட்டுகளிலுமே பேய்களின் ஆடல்தான். முதற் காட்டில் தேர் இல்லை; ஆனால் பேய்மகள் அயர்கிறாள். இரண்டாவது காட்டில் தேர் சென்றபின் பேய்களின் குரவை நிகழ்கிறது. இளம்பூரணரின் பின்தேர்க் குரவைக்கும், நச்சரின் பின்தேர்க் குரவைக்கும், இரண்டு வேறுபாடுகள். ஒன்று ஆடுநர். மற்றொன்று தேர். இளம்பூரணரின் பாடலில் தேர் உண்டு. நச்சரின் காட்டுகளில் தேர் இல்லை. பின்தேர்க் குரவையென்பது தேரின் பின்னால் நடக்கும் குரவைதான் என்பதை இருவருமே ஒப்புக் கொண்ட பிறகும், நச்சரின் எடுத்துக்காட்டுகள் தேரற்ற குரவையையே காட்டுவது வியப்பாக உள்ளது.

சிலப்பதிகாரப் பின்தேர்க் குரவையில் பேயாடுகிறது. வீரர்களோ விறலிகளோ இல்லை. இதை நோக்கும்போது இளம்பூரணரின் எடுத்துக்காட்டு தொல்காப்பிய வரிகளுக்குப் பொருந்துமா என்ற சிந்தனை பிறக்கிறது. தொல்காப்பியத்திற்கு அடுத்த நிலையில் தேர்க்குரவைச் செய்திகள் கிடைக்கும் ஒரே இலக்கியம் சிலம்புதான். எனவே தொல்காப்பியர் கால மரபுத் தொடர்ச்சிகளை, வெண்பா மாலையில் காண்பதை விட, அதனினும் சில நூற்றாண்டுகள் காலத்தால் முற்பட்ட சிலம்பில் சற்றுக் கூடுதலாகவும் நெருக்கமுடையதாகவும் காணமுடியும். சிலம்பில் பின்தேர்க் குரவையைப் பேய்கள் நிகழ்த்தியுள்ளன. தொல்காப்பிய நூற்பாவோ, அதற்கு, முதலில் உரை எழுதியதாகக் கருதப்படும் இளம்பூரணரோ பின்தேர்க் குரவையை யார் நிகழ்த்தியதென்று கூறாத நிலையில், கூளிச் சுற்றத்தால் அது நடத்தப்பட்டதாக நச்சர் கூறுவது சிலப்பதிகார வரிகளின் அடிப்படையில்தான் என்று கருத வேண்டியுள்ளது. 'ஒன்றிய மரபில்' என்ற அடையொடு தொல்காப்பியம் இப்பின்தேர்க் குரவையைக் குறிப்பதும், இது பேய்களால் நிகழ்த்தப்பட்டதென்பதை மறைமுகமாகக் காட்டத்தானோ என்று தோன்றுகிறது. வெற்றி பெற்றவனின் தேர்முன் வென்றவர்கள் குரவை நிகழ்த்துவதும், அதில் வென்றவன் கலந்து கொள்வதும், அந்தத் தேரின் பின், வெற்றியால் (அதாவது போரால்) பயனடைந்தவர்கள் மகிழ்ந்தாடுவதும் இயல்பானதே.

தொல்காப்பியருக்கு முற்பட்ட காலத்திலேயே இலக்கியங்களில் பேய் பற்றிய சிந்தனைகள் இடம் பெற்றிருக்க வேண்டும். அதனால்

தான் புறத்திணை இயலில் பேய் வெளிப்படையாகவும் மறைமுகமாகவும் சுட்டப்படுகிறது. தொல்காப்பியரால் மரபென்று மறைமுகமாகச் சுட்டப் பட்ட பேயாடு பின்தேர்க் குரவை சிலம்பின் வரிகளால் வெளிச்சம் பெறு கிறது. போர்க்களத்தில் பேய்கள் தேரின் பின் ஆடியதாக சங்க இலக் கிய வரிகள் நமக்குக் குறிப்பிட்டுச் சொல்லவில்லையென்றாலும், பட்டு வீழ்ந்த உடல்களைச் சுவைத்து, அரற்றி, ஆடி மகிழ்ந்ததாகப் பேசு கின்றன.

''திறங்கிளர் உருவில் பேஎய்ப் பெண்டிர்
எடுத்தெறி யனந்தற் பறைச்சீர் தூங்க''[43]

''இனத்தடி விராய வரிக்குடர் அடைச்சி
அழுகுரல் பேய்மகள் அயர''[44]

''உருகெழு பேய்மகள் அயர''[45]

''கணங்கொள் கூளியொடு கதுப்பிடுத் தசைஇப்
பிணந்தின் யாக்கைப் பேய்மகள் துவன்றவும்''[46]

''அவையிருந்த பெரும்பொதியில்
கவையடிக் கடுநோக்கத்துப்
பேய்மகளிர் பெயர்புஆட''[47]

''செஞ்சுடர் கொண்ட குருதி மன்றத்து
பேஎய் ஆடும் வெல்போர்''[48]

பேய்கள் போர்க்களத்தில் மகிழ்ந்தாடிய துணங்கையும், குரவையும் கூட இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன.[49] இதனால் தொல்காப்பிய மரபு சங்க காலத்திலும் தொடர்ந்ததாகக் கருதலாம். சிலம்பு பின்தேர்க் குரவையைப் பேய்கள் நிகழ்த்தியதென வெளிப்படையாய் அடிக்கோடிட் டுச் சொல்லி அந்த மரபுத் தொடர்ச்சியை உறுதிப்படுத்துகிறது. இதே சிலம்பில் பின்தேர்க் குரவையினின்று சற்று விலகி பேய்க்குரவை என்று தனியே ஒரு போர்க்களப் பேயாடலும் இடம் பெறுகிறது.

''குழிகட் பேய்மகள் குரவையிற் தொடுத்து''[50]

இந்தச் சிந்தனை, சங்க இலக்கியங்களில் காணப்படும் பெயர் சுட் டாப் பேயாடல்களின் விளைவாகலாம். இதன் வளர்ச்சியை, வெண்பா மாலை தும்பைத் திணையில், பேய்க் குரவையென்று தனித்துறை யாக்கித் தருவதில் காணலாம். இங்கே தும்பை மன்னனது தேரின் முன் னும் பின்னும் பேய்கள் களித்தாடுகின்றன.

ஜாண் ஆசிர்வாதம் பின்தேர்க் குரவை போர்க் கடவுளான கொற்ற வையால் ஆடப்பட்டதென உரையாசிரியர்கள் கூறுவதாக எழுதி, நச்ச

ரின் பெயரை அடிக்குறிப்பில் தருகிறார்[51]. நச்சர் தம் உரையில், 'கூழுண்ட கொற்றவை கூளிச் சுற்றம் ஆடும் குரவை' என்று தெளிவாக எழுதி அதற்கேற்ற எடுத்துக்காட்டையும் தந்துள்ளார். இப்பாடலில் கொற்றவை நிணக்கூழ் தரக் கூளிச்சுற்றம் உண்டாடும் காட்சியைப் பார்க்கலாம். நிலைமை இப்படியிருக்க, ஆசிர்வாதம் பின்தேர்க் குரவையை நச்சரின் பெயரால் கொற்றவையின் ஆடலாக்கி விட்டார்.

இப்பின்தேர்க் குரவையை ஓரிடத்தில் போர்த் துணங்கையினின்று வளர்ச்சி பெற்றதென்றும், மற்றோர் இடத்தில் பேய்த் துணங்கையினின்று வளர்ச்சி பெற்றதென்றும் குறிப்பிடும் ஆசிர்வாதம், பிறிதோரிடத்தில், 'துணங்கையின் தன்மையை உட்கொண்டு குரவையோடு தொடர்பு கொண்டமைந்த குரவை' என்று வேறு கூறுகிறார்.[52] இக் குரவை, துணங்கைக்கும் குரவைக்கும் தொடர்புண்டாக்கியதென்றும் பேசுகிறார்.[53] முன்னரே கண்டபடி துணங்கை வேறு, குரவை வேறு என்பதுடன், குரவை துணங்கைக்கு முற்பட்ட கூத்து வடிவம் என்பதால் ஆசிர்வாதத்தின் கூற்றுகள் பொருந்தாமை காண்க.

அக வாழ்வில் பல்வேறு ஆடல் வடிவங்களைக் கண்டு களித்தாடிய தமிழன், புறவாழ்விலும் ஆடலையே உவந்து வாழ்ந்ததைத் தேர்க்குரவைகள் சுட்டுகின்றன. நடந்ததை முன்தேர்க் குரவையாகவும், கற்பனையில் கண்டதைப் பின்தேர்க் குரவையாகவும் புறப்பொருள் துறைகளாக்கி மரபுத் தொடர்ச்சிகளையும் அவற்றின் வளர்ச்சி நிலைகளையும் இலக்கிய வடிவில் நிலைப்படுத்தியுள்ள சிறப்பு போற்றற்குரியதாகும். பின்னாளைய இலக்கியங்களில் தேடல் தொடர்ந்தால், தொடர்ச்சிகளின் விழுதுகளை மேலும் பெற முடியும்.

அடிக்குறிப்புகள்

1 தொல்காப்பியம் - பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, கழக வெளியீடு, சென்னை, 1956, பக். 116.

2 மேற்படி, பக். 118.

3 புறநானூறு, பா. எண். 371.

4 புறநானூறு, மூலமும் உரையும், அவ்வை சு. துரைசாமி, கழக வெளியீடு, சென்னை, 1968, பக். 356.

5 புறநானூறு, பா. எண். 370.

6 மலைபடுகடாம், வரி 320–323.

7 நற்றிணை, பா. எண். 50

8 கலித்தொகை, பா. எண். 106, வரி 30-33.

9 தொல்காப்பியம் - பொருளதிகாரம், நச்சினார்க்கினியம், கழக, வெளியீடு, 1973, பக். 224.

10 சிலப்பதிகாரம், அரங்கேற்றுக் காதை, அடியார்க்கு நல்லார் உரை, தமிழ்ப் பல்கலைக் கழகப் பதிப்பு, 1985, பக். 80.

11 பதிற்றுப்பத்து, பா. எண். 56.

12 தொல்காப்பியம், இளம்பூரணம், பக். 107.

13 சிலப்பதிகாரம், பக். 27.

14 பதிற்றுப்பத்து, பா. எண். 57.

15 மேற்படி, பா. எண். 52.

16 தொல்காப்பியம், நச்சினார்க்கினியம், பக். 224.

17 ஜாண் ஆசிர்வாதம், தமிழர் கூத்துகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1985, பக். 57.

18 மேற்படி, பக். 62–63.

19 மதுரைக்காஞ்சி, வரி 159-160.

20 மேற்படி, 328-329.

21 பதிற்றுப்பத்து, பா. எண். 52, வரி 14.

22 நற்றிணை, பா. எண். 50.

23 குறுந்தொகை, பா. எண். 31.

24 மதுரைக்காஞ்சி, வரி. 613-615.

25 கலித்தொகை, பா. எண். 103, வரி 75–76.

26 ஜாண் ஆசிர்வாதம், தமிழர் கூத்துகள், பக். 76.

27 பதிற்றுப்பத்து, பா. எண். 77, வரி 3-4.

28 ஜாண் ஆசிர்வாதம், தமிழர் கூத்துகள், பக். 74.

29 மேற்படி, பக். 64.

30 மேற்படி, பக். 75.

30A மேற்படி, பக். 75.

31 பதிற்றுப்பத்து, பா. எண். 52, 45, 77.

32 திருமுருகாற்றுப்படை, வரி 47-56.

33 சிலப்பதிகாரம், பக். 541, வரி 234-240.

34 புறப்பொருள் வெண்பா மாலை, பொ. வே. சோமசுந்தரனார் உரை, கழக வெளியீடு, சென்னை, 1978, பக். 153.

35 மேற்படி, பக். 170.

36 தொல்காப்பியம், இளம்பூரணம், பக். 119.

37 தொல்காப்பியம், நச்சினார்க்கினியம், 225.

38 தொல்காப்பியம், நச்சினார்க்கினியம், பக். 225.
39 சிலப்பதிகாரம், பக். 541, வரி 241.
40 புறப்பொருள் வெண்பா மாலை, பக். 154.
41 மேற்படி, பக். 171.
42 மேற்படி, பக். 155.
43 புறநானூறு, பா. எண். 62, வரி 4-5.
44 மேற்படி, பா. எண். 370, வரி 24-25.
45 மேற்படி, பா. எண். 371, வரி 26.
46 பட்டினப்பாலை, வரி 259-260.
47 மதுரைக்காஞ்சி, வரி 161-163.
48 பதிற்றுப்பத்து, பா. எண். 35, வரி 8-9.
49 திருமுருகாற்றுப்படை, வரி 47-56; சிலப்பதிகாரம், பக். 544, வரி 31.
50 சிலப்பதிகாரம், பக். 544, வரி 31.
51 ஜான் ஆசிர்வாதம், தமிழர் கூத்துகள், பக். 57.
52 மேற்படி, பக். 75
53 மேற்படி, பக். 75.

---

## பாராட்டி வாழ்த்துகிறோம்

டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையத்தின் 1992-ஆம் ஆண்டிற்கான டாக்டர் மா. இராசமாணிக்கனார் நினைவு விருது தொல்லியல் அறிஞர் முனைவர் இரா. நாகசாமி அவர்கட்கு வழங்கப்பட்டது. பாரதிதாசன் பல்கலைக் கழகத் துணைவேந்தர் முனைவர் ச. முத்துக்குமரன் தலைமையேற்ற இவ்விழாவில் கலைமாமணி திரு. சிவகுமார் அவர்கள் விருது வழங்கி பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்கள். விருது பெற்ற முனைவர் இரா. நாகசாமி அவர்களை ஆவணத்தின் சார்பில் பாராட்டி வாழ்த்துகிறோம்.

## 25. சிவாசியின் இறுதி நாள்

முனைவர் ம. சா. அறிவுடை நம்பி

தஞ்சையின் கடைசி மராட்டிய மன்னர் சிவாசி (1832-1855) 29-10-1855 அன்று மரணமடைந்தார். அன்றிரவு 10மணிக்கு இராஜா கோரியில் அவர் உடல் எரியூட்டப்பட்டது. அது குறித்துத் தஞ்சை மாவட்ட ஆட்சியர் போர்பஸ் அவர்கள் சென்னை மாநில ஆட்சியாளர்க்கு கடிதம் மூலம் அறிவித்தார். அவர் எழுதிய கடிதம் 2-11-1855 அன்று சென்னைக்குக் கிடைத்துள்ளது.

அக்கடிதத்தில் பல ஆங்கிலேயர்கள் இறுதிச் சடங்கில் கலந்து கொண்டதாகக் கூறப்பட்டுள்ளது. சிவாசிக்கு நல்ல குணமோ, விவேக சாதுரியமோ இல்லை என எழுதப்பட்டுள்ளது. சிவாசியின் குடும்ப வாழ்க்கை குறித்துச் சில சுவையான செய்திகள் இதில் உள்ளன. 30 இலட்சம் சொத்து இருந்தும் அவர் அனுபவிக்க முடியாத நிலை கூறப்பட்டுள்ளது.

இவ் அரிய காகிதப் பிரதி தஞ்சை, மகர் நோன்புச் சாவடியில் உள்ள அமரர், கிறித்துவப் பெரும்புலவர் வேதநாயக சாத்திரியார் பரம்பரையினரிடம் உள்ளது.

தஞ்சாவூர் மகாராசாவின் பிராண விறியோகம்

அதிக கீர்த்திப் பிரதாபராகிய மகா ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ தஞ்சை நகரத்து இராசா அவர்கள் அக்டோபர் மாதம் 29 தேதி காலஞ் சென்று விட்ட சங்கதியை மிகவு மனஸ்தாபத்துடனே பகிரங்கஞ் செய்ய நேரிட்டிரிக்கின்றது. அந்தச் சங்கதியைக் குறித்துத் தஞ்சாவூர் கலக்கட்டராகிய மேஸ்த்தர் போர்பஸ் துரையவர்கள் எழுதிய வரலாறு இந்த மாதம் இரண்டாந் தேதி இராஜதானியிற் சேர்ந்தது.

அதாவது தஞ்சாவூர் இராஜாவாகிய ஸ்ரீமந் மகாராஜா சேதுபதி சிவாஜீ அவர்கள் இரண்டு நாள் வரையில் சற்றே வியாதியுய்யவராயிருந்து சடிதியிலே யாதொரு அவஸ்த்தையில்லாமல் இறந்துவிட்டார். நான் அவருடைய மரணத் தருவாயில் அவரைக் காணும்படியாகப் போயும் முந்திப் போயிற்று. அவருடைய குடும்பத்தில் அநேக ஜனங்கள் இருந்தும் பட்டத்திற்கு உரிமையுள்ள பாத்தியஸ்த்தர்கள் ஒருவருமில்லாமையால் தஞ்சாவூர்ச் சீமையும் துரைத்தனத்தாருக்கு ஆதீனமாகும் போல் காண்கிறது.

அன்றைத் தினம் ராத்திரிப் பத்து மணியளவில் இராஜாவுடைய பிரேதத்தை அவருடைய முன்னோர் வமிச பரம்பரையாய்த் தகனிக்கப் படுகிற பொதுவான மயானமாகிய வெம்பலாஞ்சோலைக்குக் கருநாடக

இராசரீகத்திற்குரிய சகல வரிசைகளுடனுமெடுத்துப் போய்த் தகனஞ் செய்தார்கள்.

அந்தச் சமயத்தில் தஞ்சாவூர்ச் சமஸ்த்தானத்திற்கு ஸ்தானாபதியும் கலக்கட்டர் உத்தியோகஸ்த்தருமாகிய துரை, பிரதிம ஜிஸ்ற்றிறாட் துரை, அங்குள்ள இராணுவப்பகுதி விசாரணைத் தலைவராகிய லெப் டினன்று டிறூறி துரை, இரண வைத்தியராகிய புருக்கிஸ் துரை, கனம் பொருந்திய பவர், ஜார்ஜ், ஜான், ரிச்சார்ட், ஹென்றி, போப் முதலான போதகர்கள், நீகல், டானியேல், ஜாவியஸ், ஹென்றி, எட்வர்ட், கோலோப் முதலான பற்பல துரைகளாகிய இவர்களெல்லாரும் காலஞ் சென்ற மகாராசாவின் பந்துக்களனைவரும் தஞ்சாவூர்ச் சமஸ்தானத்தி லும் அதன் சுற்றுப்புறங்களில் பத்து மயில் தூரத்திற்கு உள்ளிட்டுமிருக் கிற குடிகளில் ஏராளமான ஜனங்களும் பிரேதத்துடனே மயானத்திற்குத் துக்க சாகரத்தில் அமிழ்ந்தினவர்களாகப் போனார்கள்.

மரணமடைந்த மகாராசாவுக்குப் பிராயம் 47½. அவர் பட்டாபி ஷேகம் பெற்று இப்பொழுது 23½ வருஷமாயிற்று. அவர் எவர்களு மெச்சத்தக்க யாதொரு அபூர்வமான குணாதிசயங்களையாவது, விவேக சாதுரிய சமர்த்தையாவது உடையவரல்ல. ஆகிலும் அவரை யண்டி அநேகங் குடும்பங்கள் காலட்சேபம் பண்ணி வந்ததினால் அவர் கள் எல்லோருக்கும் அவருடைய மரணம் மிகவும் சேதமாகக் காணும். பிரேதத்தை இராஜா குடும்பத்திற்கு உரிமையான நானாவித சோடி னைகளுடன் எடுத்துக் கொண்டு போனபொழுது அதின் புறத்திற் போன ஏராளமான சனங்கள் ஆகாயத்தில் முழங்கி அதிரத்தக்கதாகப் பெருங் கூச்சலிட்டழுதார்கள்.

மறாட்டிய றாஜ வமிசத்தார் தஞ்சாவூர் இராச்சிய பாரத்தின் மஸ்நட் சிம்மாசனத்திற்கு வந்த பொழுது அந்தக் குடும்பத்திற் பட்டத் திற்கு வரும் பத்தாவது அரசனாகிய சிவாஜீயென்பவருடனே மறாட் டிய றாச்சிய பாறம் ஒழிந்து போமென்று முன்னொரு தீர்க்க தரிசனம் உரைக்கப்பட்டிருந்ததும் காரியத்தின் முடிவில் அந்தப்படிக்கு நிறை வேறினதும் மிகுந்த ஆச்சரியமாயிருக்கின்றது.

அவருக்குப் பட்டத்துக்குரிய மனைவிகள் 15 பேர். வைப்பாட்டிகள் 303 பேர். வைப்பாட்டிகளுக்கு ஆண்பிள்ளைகள் 10; பெண்பிள்ளைகள் 15 பேர். அவருக்குப் புத்திர பாக்கியமில்லாமற் போனபடியால் பிதிர்க் கடன் செய்யும் பொருட்டாக அவருடைய ஒரு மனைவி அவருடைய சகோதரி புத்திரனைத் துரைத்தனத்தாருடைய அனுமதிப்படிக்குத் தத்து புத்திரனாக எடுத்து வளர்த்தாள். பிரேத சேடமாகிய எலும்பை 31 தேதியில் அவர்களுடைய சமய முறைப்படி எடுத்து வடவாற்றிற் போடுவார்கள். சிலநாட் சென்றதின் மேல் அதைக் காசிக்குக் கொண்டு போய்க் கங்கையாற்றிற் போடுவார்கள்.

நகை, வீட்டுத் தளபாடங்கள், யானை, ஒட்டை, குதிரை, எருது, பசு, இரதம், சிவிகை பூஸ்த்தி முதலிய பிரத்தியேகமான ஸ்திதிகள் தவிர அவருடைய உரக்கமான ஸ்திதி 30 லட்சம் ரூபாய் அளவிற்கு வரும். இவ்வளவு மிகுந்த ஸ்திதியிருந்தும் அது சமஸ்தானத்தில் விசாரணைத் தலைவராகிய பார்ப்பார் வசத்திற் பராதீனப்பட்டிருந்த தினால் அவர் தன்னிஷ்டப்படி அதை எடுத்துச் செலவிட ஏதுவாயிருக்கவில்லை.

---

## அகநானூற்றில் பேடியாடல்

சிலப்பதிகாரக் கடலாடு காதை மாதவி ஆடிய பதினொரு வகை ஆடல்களுள் ஒன்றாகப் பேடியாடலைக் குறிக்கிறது. வாணாசுரனின் மகள் உழை (உஷை என்றும் புராணங்கள் அழைக்கின்றன), கனவில் காமன் மகன் அநிருத்தனைக் கண்டு காமுற்று, அவனை அடைய வேண்டித், தன் தோழி சித்திரலேகையை வேண்ட, மாயச் செயல் வல்லாளான தோழியும் அநிருத்தனை உழையிடம் கொணர்ந்து சேர்க்கக் கனவுக் காதல் களவுக் காதலானது. மகளின் காதல் அசுர மன்னனுக்குத் தெரியவர உழையும் அநிருத்தனும் சிறைப் பறவைகளாயினர். சோ நகரத்துச் சிறையில் கம்பிகளுக்குப்பின் காதல் வளர்த்த இவர்களை மீட்கத் திருமாலும், காமனும், அயிராணியும் வருகின்றனர். திருமால் குடக்கூத்தும், அயிராணி கடையமும் நிகழ்த்தக் காமன் பேடியாடல் ஆடியபடி சோ நகரில் நுழைகிறான்.

இந்தப் பேடியாடலைச் சிலம்பு குறிக்க, மணிமேகலை மலர்வனம் புக்க காதையில் விரிவாகப் பேசுகிறது. பேடியாடலைச் செய்தவரின் ஒப்பனைக் கோலத்தையும் மேகலை தருகிறது. சிலம்பும் நீர்ப்படைக் காதையில் இக்கோலம் பற்றிப் பேசுகிறது. மாதவி ஆடிய இம்மாளிகை ஆடலை, மேகலை வீதி ஆடலாகக் காட்டுகிறது இவ்ஆடல் காப்பிய காலத்துக்குரியதா அல்லது சங்கந் தொட்டு வந்ததா என்றறிய இலக்கிய வரிகளில் தேடிப்பார்க்கையில் அகநானூறு உதவிக்கு வந்தது.

''பேடிப் பெண்கொண்(டு) ஆடுகை கடுப்ப
நகுவரப் பணைத்த திரிமருப்(பு) எருமை'' (அகம். 206)

'பேடியாகிய பெண்ணின் உருவம் பூண்டு ஆடுகின்றவனின் பின் சென்று மேல் வளைந்த கையையொப்ப எருமையின் முறுக்குண்ட கொம்பு விளங்குகிறது' என்பது உரையாசிரியரின் விளக்கம். சங்க காலத்திலேயே பேடியாடல் ஆடவரால் நிகழ்த்தப்பட்ட தகவல் புதிய செய்தியாகும். இயல்பான இச்சங்க ஆடல், காப்பிய காலத்தில் கடவுள் வண்ணம் பெற்று காமன் ஆடலானது. இன்றளவும் ஊரகப் பகுதிகளில் இப்பேடியாடல் தொடர்ந்து நிகழ்ந்து வருவது குறிப்பிடத்தக்கது.

— அ. அருணா, இரா. கலைக்கோவன்.

## 26. திருவரங்கத்தில் நாயக்கர் கால ஓவியம்

கி. ஸ்ரீதரன்

திருவரங்கத்திலுள்ள திருவரங்கநாதர் கோயில் ஏழு திருச்சுற்றுக் களைக் கொண்டது. அவற்றுள் ஒரு திருச்சுற்று உத்தர வீதி என்று அழைக்கப்படுகிறது.

இவ்வீதியில் உத்தம நம்பி திருமாளிகை, புத்தங் கோட்டகம் சுவாமி திருமாளிகை, ஸ்ரீரங்க ஜீயர் மடம், அகோபில மடம், கோயில் கந்தாடை அண்ணன் சுவாமி திருமாளிகை, மணவாள மாமுனிகள் சன்னதி, வியாசராசர் மடம் ஆகியவை அமைந்துள்ளன. அவற்றில் வியாசராசர் மடம் உத்தரவீதியின் கிழக்குப் பக்கம் உள்ளது. இம்மடத் தில் குழலூதும் கண்ணன் (வேணுகோபாலன்) கோயில் உள்ளது. அக் கோயிலுக்கு முன்பாக நாலுகால் மண்டபத்தின் விதானத்தில் நாயக்கர் கால ஓவியங்கள் காணப்படுகின்றன.

வைணவ மதத்தில் சுயம்புத் தலங்களாக எட்டுத் தலங்கள் போற் றப்படுகின்றன. அவை 'சுவயம்வ்யக்த சேத்திரங்கள்' எனப்படும்.

அவையாவன:

1) ஸ்ரீமுஷ்ணம் 2) ஸ்ரீரங்கம், 3) திருப்பதி 4) சாலிகிராமம் 5) நைமிசாரண்யம் 6) தோதாத்தி 7) புஷ்கரம் 8) பத்ரி (நரநாரா யண ஆச்ரமம்).

மேற்காணும் தலங்களில் எழுந்தருளியிருக்கும் இறைவனின் திருக் கோலங்கள் இம் மண்டபத்தின் விதானத்தில் ஓவியங்களாகத் தீட்டப் பட்டுள்ளன. ஒவ்வொரு தலத்தின் பெயரும் அவ்வோவியத்தின் மேற் பகுதியில் தெலுங்கில் எழுதப்பட்டுள்ளது. 'ஸ்ரீ முஷ்ணம்' ஆதிவராக சந்நதி, ரங்கநாதசுவாமி, நரநாராயண ஆச்ரமம் என சில தலங்களின் பெயர்களைப் படிக்க முடிகிறது.

ஓவியத்தின் கீழ்ப்பகுதியில், மாதவப் பெரியார்களும், நாயக்க மன் னரும் மற்றும் அமைச்சரும் கண்ணனை வழிபடும் நிலையில் ஓவியங் கள் தீட்டப்பட்டுள்ளன. இவ்வோவியங்களுக்கு மேற்பக்கத்தில் திரு மாலின் 24 வடிவங்களும் வரிசையாகக் காட்டப்பட்டுள்ளன. இவ்வோ வியங்களின் மேற்பகுதியில் அநிருத்த, புருஷோத்தம, அகோத்ரஜ, நரசிம்ம, அச்சுத, ஜனார்த்தன, உபேந்திர, ஹரி, ஸ்ரீ கிருஷ்ண என அம்மூர்த்திகளின் பெயர்கள் எழுதப்பட்டுள்ளன. இம்மண்டபத்தின் விளிம்புகளில் மத்வர் வழியினரின் உருவங்களும் பெயர்களும் காணப் படுகின்றன.

இவ்வோவியங்கள் காணப்பெறும் வியாசராசர் மடம் ஸ்ரீ வியாசராசர் என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது. இவர் கி.பி. 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இம்மடத்தைச் சேர்ந்த மூலபிருந்தாவனம் திருமஞ்சன காவேரி என்னும் ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. இங்கு லட்சுமிநாத தீர்த்தர், ஸ்ரீ லட்சுமிபதி தீர்த்தர் ஆகியோர் அடக்கமாகி உள்ளனர். அவர்களது அடக்க இடங்கள் பொது மக்களால் இன்றும் வழிபடப்பட்டு வருகின்றன. மேற்காணும் இருவரும் கி. பி. 17 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள்.

ஸ்ரீரங்கம் திருவரங்கநாதர் கோயிலில் இதற்கு முன்பாகப் போசளர் கால ஓவியங்களும், நாயக்கர் கால ஓவியங்களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. தற்பொழுது வியாசராசர் மடத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள ஓவியங்கள் புதிய கண்டுபிடிப்புகள் ஆகும். இவ்வோவியங்கள் இன்றைக்கு 280 ஆண்டுகளுக்கு முற்பட்டவை ஆகும்.

---

## பாராட்டி வாழ்த்துகிறோம்

அண்மையில் குடந்தையில் நிகழ்ந்த தமிழ்த்தாத்தா உ. வே. சாமிநாதையர் ஐம்பதாண்டு நினைவு மற்றும் சிலம்பு பதிப்பின் நூறாண்டு நிறைவு விழாவில் குடந்தைக் கல்வெட்டறிஞர் திரு. என். சேதுராமன் அவர்களின் கல்வெட்டுப் பணிகளைப் பாராட்டி காங்கிரஸ் பேரியக்கத் தலைவர் திரு. ஜி. கே. மூப்பனார்அவர்கள் பொன்னாடை அணிவித்து நினைவுப் பரிசளித்து வாழ்த்தினார்கள். பாராட்டப் பெற்ற திரு. என். சேதுராமன் அவர்களை ஆவணத்தின் சார்பில் வாழ்த்தி மகிழ்கிறோம்.

# 27. தமிழ் இதழ்களில் எழுதுவோரின் சிந்தனைக்கு

ச. முத்துக்குமரன்

நாள், கிழமை, திங்கள் இதழ்களை மக்கள் எதற்காகப் படிக்கிறார்கள்?

பொது அறிவைப் பெருக்கிக் கொள்ளவும், மொழி அறிவைப் பெருக்கிக்கொள்ளவும், நாட்டு நடப்பை அறிந்து கொள்ளவும், புதிய புதிய கருத்துக்களை அறிந்து கொள்ளவும், நல்ல புனைகதைகளைப் படித்து வாழ்வியல் அறிவுபெறவும், நகைச்சுவை போன்ற பல சுவைகளை அனுபவித்து, மகிழவும், இன்னும் இவை போன்ற பல காரணங்களுக்காகவும் இதழ்களை மக்கள் படிக்கிறார்கள். மக்கள் இவ்வாறான பயன்பெற வேண்டி, இதழ் வெளியிடுபவர்களே நல்ல வெளியீட்டாளர்கள். வீணே பொழுதைக் கழிப்பதற்கும், ஊர் வம்பை அறிந்து கொள்ளவும் படிப்பவர்கள் உண்டு. அவர்கள் நிலத்திற்குப் பாரமாக வாழ்பவர்கள். அவர்களுக்கும் விலங்குகளுக்கும் அதிக வேற்றுமையில்லை. அவர்களுக்கென்றும் நாள், கிழமை, திங்கள், இதழ்கள் வெளியிடப்படுகின்றன. அவற்றைப் பற்றியும் அவர்களைப் பற்றியும் நாம் கவலைப்பட வேண்டியதில்லை. மக்களாகப் பிறந்தும் மக்களாக வாழாதவர்களைக் கண்டு இரக்கப்படலாம் சிலர் அவர்களின் குறைகளைத் தமக்குச் சாதகமாக பயன்படுத்திக்கொண்டு வாழ்கின்றனர்; அவர்கள் இழிந்தோராவர். அவர்களைக் கண்டு இரங்கி அவர்களுக்கு இறைவன் நல்வழி காட்டவேண்டும் என்று எண்ணுவதே நாம் செய்யத்தக்கதாகும்.

முன்னர் குறிப்பிட்ட ஆறு குறிக்கோள்கள் கொண்ட இதழ்கள் எவை, அவற்றை எவ்வாறு இனம்காண்பது, நல்ல இதழ்கள் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைப் பற்றிச் சிந்திப்போம்.

'' செய்வன திருந்தச் செய் '' என்றனர் நம் முன்னோர். எந்த மொழியில் எழுதினாலும் அந்த மொழியின் இலக்கண விதிப்படி தவறின்றி எழுதவேண்டும். கொச்சையாக எழுதியவற்றைப் படிப்போரின் மொழி அறிவு பாழாகும். மற்ற மொழிச் சொற்களைத் தேவையின்றிக் கலந்து எழுதியதைப் படிப்போரின் பொது அறிவும் மொழி அறிவும் தாழ்ந்து போகும்.

நம் மொழியில் தக்க சொல் இருக்கும் போது அதைப் பயன் படுத்தாது வேற்று மொழிச் சொல்லைப் பயன்படுத்தினால் நாம் நம்

மொழிச் சொல்லை இழக்கிறோம். மொழிக்கு ஒரு புதிய சொல் வந்தாலும் பழைய சொல் ஒன்றை இழந்து விடுவதால் மொழிக்கு நன்மையில்லை. படிப்பவர்க்கும் நன்மையில்லை. மேலும் நம் மொழி, கலப்படத்தால் தன் இயல்பை இழக்கிறது. நாமும் எதையும் திருந்தச் செய்யும் பழக்கத்தை இழக்கிறோம்.

ஒரு மொழி அம்மொழி பேசும் மக்களின் கலையையும் பண்பாட்டையும் காட்டும் கண்ணாடி எனலாம். நாம் நம் தமிழ் மொழிச் சொற்களை இழந்து அவற்றிற்குப் பதிலாக வேற்று மொழிச் சொற்களை நம் மொழி அமைப்புக்கு ஏற்ப மாற்றாமல் பயன்படுத்துவதால் நம் கலைகளையும் பண்பாட்டையும் இழக்கும் சூழ்நிலை உருவாகும். மொத்தத்தில் நம் மொழியில் சொற்கள் இருக்கும்போது அவற்றைப் பயன்படுத்தாது பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்தும்போது நாம் நம் மொழியையும் இழந்து நம்மையும் இழக்கிறோம்.

தமிழ் நாட்டில் தமிழில் வெளி வரும் ஒரு பெயர் பெற்ற கிழமை இதழை ஒரு மாதிரிக்காக எடுத்துக்கொண்டு ஆராய்ந்தோம். அவ்விதழில் மூன்று மாதங்களில் (சனவரி 1991 முதல் மார்ச்சு 1991 முடிய வெளிவந்த இதழ்களில்) மூன்று முறையோ அல்லது அதற்கு மேலோ பயன்படுத்தப்பட்ட ஆங்கிலச் சொற்களைப் பட்டியலிட்டோம். அச்சொற்பட்டியல் இக்கட்டுரைக்கு இணைப்பாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவற்றில் சில சொற்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவை எத்தனை முறை பயன்படுத்தப்பட்டன என்பதும் அவற்றிற்குச் சரியான தமிழ்ச் சொற்களும் பக்கத்திலேயே கொடுக்கப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| அட்வான்ஸ் | 7 | முன் பணம் |
| ஆர்ட்டிஸ்ட், ஆர்டிஸ்டு | 9 | கலைஞர் |
| ஆபீஸ் | 51 | அலுவலகம் |
| இங்கிலீஸ் | 16 | ஆங்கிலம் |
| இன்டர்வியு | 15 | நேர்முகத்தேர்வு |
| இன்ஸ்பெக்டர் | 9 | ஆய்வாளர், காவல் அதிகாரி |
| இன்ஸல்ட் | 9 | நிந்தை, அவமரியாதை |
| ஈகோ | 4 | அகங்காரம், தன் முனைப்பு |
| எடிட்டர் | 6 | பதிப்பாசிரியர் |
| எம்டி | 6 | மேலாண் இயக்குனர் |
| ஓகே | 10 | சரி, ஆம் |
| ஓட்டல், ஹோட்டல் | 38 | உணவு விடுதி, உணவகம். |

இத்தமிழ்ச் சொற்கள் யாவும் ஓர் எளிய பள்ளி மாணவனுக்கும் தெரிந்தவையே. நமது நாள் இதழ்களில் இவை அடிக்கடி பயன்படுத்தப் படுபவையே. இருந்தாலும் கனியிருக்க காய் கவருமாறு போல நல்ல

தமிழ்ச் சொல்லை விடுத்து வேற்று மொழிச் சொல்லை சிலர் பயன் படுத்துவது ஏன்? அதுதான் நாகரிகம் என்று நினைப்பவர் சிலர். தன் வேற்றுமொழி அறிவை விளம்பரப்படுத்த விழைபவர் சிலர். அந்த சொல்தான் பொருத்தம் என்று விவாதிப்போர் சிலர். இன்னும் சிலர் ஒருபடி மேலே போய் இவ்வாறு எழுதுவதன் வாயிலாகத்தான் தமிழை வளர்க்க முடியும் என்றும் பேசி வருகின்றனர். உண்மையான காரணம் என்ன என்பது சிந்திப்பவர்களுக்குத் தெரியும். கற்றவனுக்கும் மற்றவ னுக்கும் உள்ள வேற்றுமை, கற்றவன் மொழியில் தூய்மை இருக்கும். மற்றவன் மொழி கொச்சையாக இருக்கும். ஒருவர் எழுதியதில் பயன்படுத்திய வேற்று மொழிச் சொற்களைப் பட்டியலிட்டு அவற் றிற்கு இணையான தமிழ்ச் சொற்கள் உள்ளனவா என்று பார்த்தல் வேண்டும். அவர் பயன்படுத்திய சொற்கள் பொருத்தமானவையா, அல்லது வேண்டாதனவா, என்று காணல் வேண்டும். அப்போதுதான் அவர் தமிழை வளர்க்கிறாரா, அல்லது சிதைக்கிறாரா என்பது விளங் கும். நாமும் அவரை யார் என்று இனம் காணமுடியும்.

மொழிக் கலப்பால் வரும் தீங்குகளை நாம் விளக்கும்போது சிலர் ''ஆங்கிலத்தைப் பாருங்கள்; ஆங்கிலம் மற்ற மொழிச் சொற்களின் கலப்பை ஏற்றதால் அல்லவா வளர்ந்தது. நாமும் அவ்வாறு மற்ற மொழிச் சொற்களின் கலப்பை ஏற்றால்தான் தமிழ் வளரும்'' என்று எதிர் வழக்காடுவர். இவ்வாறு அவர்கள் ஏன் ஒரு பெரும் பொய் வழக் காடுகிறார்கள் என்பது விளங்கவில்லை. ஆங்கிலத்தில் மற்ற மொழிச் சொற்கள் ஆளப் பெறுகின்றன என்பது உண்மை. ஆனால் அவர்கள் தங்கள் மொழிச் சொற்களுக்கு மாற்றாக வேற்று மொழிச் சொற்களைப் பயன்படுத்துவது இல்லை. ஆங்கிலேயர் யாரும் "Turn Left" என் பதை "Turn Edappakkam" என்று எழுதுவது இல்லை. ஏன் தமிழில் ''லெப்ட்லே கட் பண்ணிப் போ'' என்று எழுதுபவர் கூட ஆங்கிலத்தில் எழுதும்போது அப்படி எழுதுவது இல்லை. இவர் எழுதிய ''லெப்ட்லே கட் பண்ணிப்போ'' என்பதை ஆங்கில எழுத்துக்களில் ஒலி பெயர்த்து எழுதினால், அதாவது "Leftle cut pannippo" என்று எழுதினால் அது ஆங்கிலம் ஆகாதா என்று கேட்டால் இவர் பதில் என்னவாக இருக்கும். மேலும்ஆங்கிலத்தில் சேர்த்துக்கொண்ட மற்றமொழிச் சொற்கள் யாவும் ஆங்கிலப் படுத்தப்பட்டே சேர்த்துக் கொள்ளப்படுகின்றன. கிரேக்க, இலத்தீன் சொற்கள் மட்டும் அல்ல, தமிழ்ச் சொற்கள்கூட ஆங்கிலப் படுத்தப்பட்டிருப்பதை நாம் பார்க்கலாம். கட்டுமரம் என்ற சொல் (Catamaran) என்றுதானே எடுத்தாளப்படுகிறது. கடைசியாக, ஆங்கி லப்படுத்தாது அல்லது அவர்கள் நாட்டில் பயன்படுத்தாத ஒரு வேற்று மொழிச் சொல்லை நாம் ஆங்கிலத்தில் பயன்படுத்தினால் அதை சாய்ந்த எழுத்துக்களில் எழுதவேண்டும் என்று விதி இருப்பதால் அவ்வாறுதானே நாம் ஆங்கிலத்தில் எழுதுகிறோம். ஆகவே இன்று

தமிழில் ஆங்கிலச் சொற்களைக் கலந்து எழுதுவதைப் போல, இன்றும் சரி என்றும் சரி, ஆங்கிலத்தில், ஆங்கில நாட்டில் செய்யவில்லை என்பதை நம்மவர்கள் உணரவேண்டும்.

இக்கட்டுரையுடன் இணைத்துள்ள பட்டியலைத் தயாரிக்கும் போது, காபி, கிலோமீட்டர், சாக்லேட், சிகரெட், லிட்டர் போன்ற பொதுவழக்கில் உள்ள ஆங்கிலச் சொற்கள் சேர்க்கப்படவில்லை. மற்ற சொற்கள் யாவும் இப்பட்டியலில் சேர்க்கப்பட்டன. சிலர் இப்பட்டியலில் உள்ள சில ஆங்கிலச் சொற்கள் அவற்றிற்குரிய சரியான தமிழ்ச் சொற்களைவிட நன்றாக விளங்குவதாகச் சொல்லக்கூடும். மேலும் சில ஆங்கிலச் சொற்களுக்கு எதிராகக் கொடுக்கப்பட்டுள்ள தமிழ்ச் சொற்கள் பொருளை விவரிப்பனவாக உள்ளன என்றும் குறைகூறலாம். எடுத்துக்காட்டாகக் கீழ்வரும் சொற்களைச் சொல்லலாம்.

| | |
|---|---|
| ஆட்டோ, ஆட்டோ ரிக்ஷா | — பொறியூர்தி, தானியங்கி (வண்டி) |
| ஐஸ்கிரீம் | — குளிர் பாற்குழம்பு, குளிர் பாலேடு |
| கிரிக்கெட் | — மரப்பந்தாட்டம் |
| சோபா | — சாய்விருக்கை |
| டப்பிங் | — வேற்றுமொழிப் பதிவு |
| டிசைன் | — வரையுரு, தினுசு, உருமாதிரி. |

வெளிநாட்டிலிருந்து நமக்குக் கிடைத்த பொருட்களுக்கு வேற்றுமொழிப் பெயர்கள் இருப்பது நியாயமே. போன நூற்றாண்டிலே மேலை நாடுகளில் இருந்து வந்த எலக்ட்ரிசிடி (Electricity) மின்சாரமாகவும், டிரெயின் (Train) புகைவண்டியாகவும் தமிழில் மொழிபெயர்க்கப்படவில்லையா? அங்ஙனமே மற்ற சொற்களையும் மொழிபெயர்க்க முடியும் என்பதில் ஐயமில்லை. நாம் நம்முடைய சோம்பலினால் அவசியமின்றிப் பல பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்துகிறோம்.

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியும் தன்னினும் முந்து

(திருக்குறள் 603)

மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு
அடிமை புகுத்தி விடும்

(திருக்குறள் 608)

என்றார் வள்ளுவர். அஃதாவது அழிக்கும் இயல்புடைய சோம்பலைத் தன்னிடம் கொண்ட அறிவில்லாதவன் பிறந்த குடி அவனுக்கு முன் அழிந்துவிடும். நல்ல குடியில் பிறந்தவனிடம் சோம்பல் வந்து பொருந்தினால், அஃது அவனை அவனுடைய பகைவர்க்கு அடிமை ஆகுமாறு

செய்துவிடும் (மு. வரதராசனார் – திருக்குறள் தெளிவுரை). நாமும் சோம்பலுக்கு இடம் கொடுத்தால் அது நம் மொழியையும், அதன் விளைவாகப் பண்பாட்டையும், கலைகளையும் அழித்துவிடும்.

தமிழுக்கும், தமிழருக்கும் நன்மை செய்ய விழைவோரும் நல்ல குறிக்கோளுடன் இதழ்கள் நடத்துவோரும் இக்கட்டுரையின் முடிவில் இணைக்கப்பட்டுள்ள சொற் பட்டியலைக் காண வேண்டுகிறேன். மேலும் வேண்டிய அளவுக்கு இப்பட்டியலை விரிவாக்கிக்கொள்ளவும் வேண்டுகிறேன்.

நாமும், நம் வழித் தோன்றல்களும் நல்ல தமிழராக வாழவும், நம் பண்பாடும் கலைகளும் வளரவும், தக்க முயற்சியை மேற்கொள்வது நம் கடமையாகும், தமிழ் எழுதுவோர் சிந்திக்க வேண்டுகிறேன். நமக்கு இக்கடமையைப் பற்றிச் சிந்திக்கவும், இக்கடமையை நிறைவேற்ற முயற்சி எடுக்கவும் இறைவன் அருளை வேண்டுகிறேன்

இக்கட்டுரையின் இணைப்பாகக் கொடுக்கப்பட்டிருக்கும் பட்டியலைத் தயாரிக்க பாரதிதாசன் பல்கலைக் கழக எழுத்தர் செல்வி. புவனேசுவரி செய்த உதவிக்கும், இக்கட்டுரையை எழுத பாரதிதாசன் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் மா. இராமலிங்கம் அவர்கள் செய்த உதவிக்கும் என் நன்றி உரித்தாகுக.

## பட்டியல்

| | | |
|---|---|---|
| அட்ஜஸ்ட் | 6 | இணங்கு, இடத்துக்கேற்ப பொருத்திக் கொள் |
| அண்ட் | 8 | மற்றும் |
| அட்ரஸ் | 3 | முகவரி |
| அகடமி, அகாடமி | 4 | கல்விக்கழகம் |
| அப்ளிகேஷன் | 9 | வேண்டுகோள், கோரிக்கை, விண்ணப்பம் |
| அசிஸ்டண்ட், அஸிஸ்டெண்ட் | 5 | உதவியாளர் |
| அரெஸ்ட், அரஸ்ட் | 3 | கைது |
| அபார்ட்மெண்ட் | 4 | (வரிசையில் அமைந்த) தனியறை |
| அவார்டு, அவார்ட் | 10 | பரிசு, விருது |
| அட்வைஸ் | 4 | நல்லுரை, அறிவுரை, ஆலோசனை |
| அட்வான்ஸ் | 7 | முன்னேற்றம், முன்பணம் |
| அயர்ன் | 6 | இரும்பு, பெட்டி |

| | | |
|---|---|---|
| அபார்ஷன் | 3 | கருச்சிதைவு |
| ஆட்டோ, ஆட்டோரிக்ஷா | 21 | பொறியூர்தி, தானியங்கி (வண்டி) |
| ஆர்டர் | 5 | ஆணை |
| ஆபீஸ், ஆஃபீஸ் | 51 | அலுவலகம் |
| ஆபரேஷன், ஆபரேசன் | 5 | அறுவை மருத்துவம் |
| ஆர்டிஸ்ட், ஆர்டிஸ்டு | 9 | கலைஞர் |
| ஆல் இண்டியா | 3 | அகில இந்திய, அனைத்திந்திய |
| ஆக்ஷன் | 5 | செயல் |
| ஆட்டோகிராப், ஆடோகிராப் | 6 | கையெழுத்து, கையொப்பம் |
| ஆடியன்ஸ் | 4 | பார்வையாளர், கேட்போர், அவையோர் |
| இம்ப்ருவ் | 3 | செம்மைப்படுத்து, மேம்படுத்து |
| இன்டர்வ்யூ, இன்ட்டர்வியூ, இன்டர்வ்யு | 15 | நேர்முகத்தேர்வு |
| இன்டஸ்ட்ரியல் எஸ்டேட் | 3 | தொழிற் பண்ணை |
| இன்ஸ்பெக்டர் | 9 | ஆய்வாளர், காவல் அதிகாரி |
| இன்ஸல்ட் | 9 | நிந்தை, அவமரியாதை, வசைமொழி, இகழுரை |
| இனிஷியல் | 4 | சுருக்கக் கையெழுத்து, முதற் பெயரின் முதல் எழுத்து |
| இங்கிலீஷ், இங்லீஷ் | 16 | ஆங்கிலம் |
| இன்ட்டரஸ்ட், இன்ட்ரஸ்ட் | 5 | அக்கறை, ஊக்கம், ஆர்வம், சிரத்தை |
| இமிகிரேஷன் | 4 | குடியேற்றம் |
| இன்ஸ்ட்டிட்யூட் | 4 | நிலையம், கழகம், ஏற்படுத்து, நிறுவு |
| இன்ஸ்பயர் | 4 | ஊக்கமளி, உணர்ச்சியூட்டு |
| இன்ஸ்யூரன்ஸ் | 5 | காப்பீடு, உறுதிசெய், உறுதிப்படுத்திக்கொள் |
| இன்ஞ்சினியரிங் | 4 | பொறியியல் |
| இன்ஞ்சினியர், எஞ்சினியர் | 7 | பொறியியல் வல்லுநர் |
| இமேஜ் | 5 | உருவம், படிவம், படிமம், மனச்சித்திரம் |
| இமோஷன் | 5 | தீவிர உணர்ச்சி, மனக்கிளர்ச்சி |
| ஈகோ | 4 | தன்முனைப்பு, அகங்காரம் |
| எக்ஸ்பிரஸ் | 5 | விரைவு வண்டி, விரைவூர்தி |
| எக்ஸர்ஸைஸ் | 4 | உடற்பயிற்சி |
| எடிட்டர் | 6 | பதிப்பாசிரியர் |

| | | |
|---|---|---|
| எலெக்ட்ரானிக், எலக்ட்ரானிக்ஸ் | 4 | மின்னணுவியல் |
| எஸ். எஸ். எல். சி. | 4 | பள்ளி இறுதித் தேர்வுச் சான்றிதழ் |
| எம். டி. | 6 | மேலாண் இயக்குநர் |
| எக்ஸ்பர்ட் | 3 | வல்லுநர், திறனி, தனித்திறனாளர் |
| ஐடியா | 8 | கருத்து, எண்ணம் |
| ஐ ம் ஸாரி | 3 | நான் வருந்துகிறேன், என்னை மன்னியுங்கள் |
| ஐஸ்க்ரீம் | 10 | குளிர்–பாற்குழம்பு, குளிர்–பாலேடு |
| ஒரிஜினல் | 3 | அசல், மூலம் |
| ஓ. கே. | 10 | எல்லாம் சரி, ஆம் |
| ஓ. சி | 3 | இலவசம் |
| ஓட்டல், ஹோட்டல் | 38 | உணவு விடுதி, உணவகம் |
| ஃப்ரி | 4 | தடையின்றி, தாராளமாக |
| ஃபெயில், பெயில் | 6 | தோல்வி |
| ஃபாதர் | 4 | தந்தை, அருட்தந்தை |
| ஃபீல்டு, பீல்டு | 7 | துறை |
| ஃப்ளாட், பிளாட், பிளாட்ஸ், ப்ளாட் | 15 | [redacted] |
| ஃபேமிலி, ஃபாமிலி | 3 | குடும்பம் |
| ஃபார் | 3 | பதிலாக |
| ஃபரொபசர், புரபஸர் | 4 | பேராசிரியர் |
| ஃபைல் | 3 | கோப்பு |
| ஃப்ளோர் | 6 | மாடி |
| ஃப்ளைட், பிளேன் | 5 | விமானம், வானூர்தி |
| ஃப்ரண்ட்ஸ், ப்ரண்ட், பிரண்ட்ஸ், ப்ரெண்ட், ப்ரெண்டு | 11 | நண்பர்கள், நண்பன், தோழன் |
| ஃபாரின் | 3 | வெளிநாடு |
| ஃபுல் | 3 | முழுதும் |
| க்யூ, கியூ | 7 | வரிசை |
| கங்கிராசுலேஷன்ஸ், கங்ராங்சுலேஷன்ஸ், கங்கிராட்ஸ் | 3 | வாழ்த்துக்கள் |
| கவுண்ட்டர் | 4 | கணக்கன், பணம் செலுத்துமிடம், விலை முகப்பு, வழங்கு முகப்பு |
| கமர்ஷியல் | 3 | வர்த்தக, வணிக, வாணிக |
| கவர் | 6 | உறை, தன்னகப்படுத்து, தன்வசப்படுத்து |

| | | |
|---|---|---|
| கம்பீட் | 3 | போட்டியிடு |
| கலர் | 28 | வண்ணம் |
| கமான் | 3 | வா |
| கவர்மெண்ட் | 8 | அரசாங்கம், அரசு |
| கட் (பண்ணு) | 3 | நிறுத்து |
| கவர்னர் | 12 | ஆளுநர் |
| கம்ப்யூட்டர் | 19 | கணிப்பி, கணினி |
| கம்பெனி | 17 | கூட்டுக்குழு, நிறுவனம், துணை, கூட்டாளி |
| கம்பிளெயிண்ட் | 4 | புகார்கூறு, முறையிடு |
| கம்யூனிசம், கம்யூனிஸம், கம்யூனிஸ் | 5 | பொதுவுடைமைக் கொள்கை |
| கம்யூனிஸ்ட் | 15 | பொதுவுடைமையர், பொதுவுடைமையாளர் |
| கரெக்ட் | 10 | சரியான |
| காமெராமேன், கேமிராமேன் | 3 | ஒளிப்படம் எடுப்பவர், ஒளிப்பதிவாளர் |
| காலண்டர் | 9 | நாட்காட்டி |
| காம்பவுண்டு | 3 | வளாகம், மதிலகம் |
| கார் | 61 | விசைவண்டி, பொறியூர்தி, உந்துவண்டி |
| கார்ட், கார்டு | 12 | அட்டை |
| காமெரா, காமிரா, கேமிரா | 42 | ஒளிப்படக் கருவி |
| காரெக்டர்ஸ், கேரக்டர் | 8 | கதை மாந்தர், நடத்தை |
| காலேஜ் | 19 | கல்லூரி |
| காபரே (டான்ஸ்) | 3 | மதுக்கடை (நடனம்) |
| காஸ், கியாஸ், கேஸ் | 4 | (சமையல் எரி) வாயு |
| காலனி | 3 | குடியிருப்பு, குடியமைப்பிடம் |
| கார்டன் | 3 | தோட்டம், பூங்கா |
| காசட், காஸெட், கேசட், கேஸட் | 8 | பதிவு நாடா |
| கார்ட்டூன் | 3 | கேலிப்படம், வரைபடம், கருத்துப்படம் |
| கால்ஷீட் | 7 | பணியழைப்பு |
| காயில் | 3 | கம்பிச்சுருள் |
| கிளாசிகல், கிளாசிக் | 4 | தரமான, சிறந்த, உயர்தர, புகழ்பெற்ற, செவ்வியல் |
| கிளாஸ் | 4 | வகுப்பு, பிரிவு |
| கிட்னி | 3 | சிறுநீரகம் |
| கிரிக்கெட் | 13 | மரப்பந்தாட்டம் |
| கிராண்ட் மாஸ்டர் | 4 | விற்பன்னர் |

| | | |
|---|---|---|
| கிளப் | 26 | குழுமனை, கூடுமனை, மகிழ்மன்றம் |
| கிளார்க் | 3 | எழுத்தர் |
| கிளாமர் | 3 | வசியத்திறம், கவர்ச்சி, கவர் ஆளுமை, கவர் திறம் |
| கிஸ் | 3 | முத்தம் |
| குட் | 3 | நல்ல, நன்று |
| குரூப் | 4 | குழு, கூட்டம் |
| கூலிங் கிளாஸ் | 6 | குளுமைக் கண்ணாடி |
| கெமிக்கல் | 7 | வேதியல் சார்ந்த |
| கேஸ் | 6 | வழக்கு |
| கேபிள் | 4 | தந்தி, பாதாள வடம், கம்பி வடம் |
| கோர்ட் | 4 | நீதி மன்றம், வழக்கு மன்றம் |
| கோட் | 3 | மேலங்கி |
| சப்ஜெக்ட் | 7 | பாடம், நுவல்-பொருள், நவில் பொருள் |
| சஸ்பென்ஸ் | 5 | ஆவல் நிலை, எதிர்பார்ப்பு நிலை |
| சர்டிபிகேட் | 5 | சான்றிதழ் |
| சான்ஸ் | 11 | வாய்ப்பு |
| சார், ஸார் | 134 | ஐயா |
| சினிஃபீல்டு. சினிமா இன்டஸ்ட்ரி | 3 | திரைத்துறை, திரைப்படத்தொழில் |
| சினிமா | 110 | திரைப்படம் |
| சீட், ஸீட் | 19 | இடம், இருக்கை |
| சீரியஸ் | 8 | ஆபத்தான, கருத்தூன்றிய, விளையாட்டுத்தனமற்ற, கருத்தாழமுடைய |
| சீன் | 4 | காட்சி |
| சூப்பர் ஸ்டார் | 3 | சிறந்த நடிகர், முதல்தர நடிகர், கவர்ச்சி நடிகர் |
| சூட்கேஸ் | 7 | சிறு பெட்டி, கைப்பெட்டி |
| சூப்பிரண்ட், சூப்பிரடென்டண்ட் சூபரின்டெண்டு | 3 | மேற்பார்வையாளர் |
| சூப்பர் | 6 | உயர்ந்த, சிறப்பான, சிறந்த, மேலான, மிகுந்த செலவில் உருவாக்கப்பட்ட |
| செக்ரட்டரி, செகரட்டரி | 8 | செயலாளர் |
| செகண்டு, செகண்ட் | 5 | விநாடி, நொடி, கணப்போது, கணம், இமைப்போது |
| செக் | 12 | காசோலை |
| செயின் | 3 | சங்கிலி, அணிக்கோவை |
| செலக்ட் | 7 | தெரிந்தெடு |

| | | |
|---|---|---|
| செலக்ஷன் | 4 | தேர்ந்தெடுத்தல் |
| செக்ஸ் | 11 | பாலினம், சிற்றின்பத்துறை |
| செட் | 7 | அமைப்பு |
| செகண்டரி | 6 | இரண்டாம் நிலையிலான |
| செஸ் | 6 | சதுரங்கம் |
| சைக்கிள் ஸ்டாண்ட் | 3 | மிதிவண்டி நிலையம் |
| சைக்கிள் | 28 | மிதிவண்டி |
| சைஸ் | 5 | அளவு, பருமன், மட்டு |
| சோபா | 3 | சாய்விருக்கை, அகல் தவிசு |
| ட்ரெயின் | 3 | தொடர் வண்டி, புகைவண்டி |
| ட்ரான்ஸ்ஃபர், ட்ரான்ஸ்பர் | 3 | இடமாற்றம் |
| ட்ரை, டிரை | 4 | முயன்று பார், முயற்சி செய், முயலு |
| ட்ரஸ்ட், ட்ரஸ்டு | 4 | நம்பிக்கை, அறநிலை, கூட்டு நிறுவனம், பொறுப்பாண்மை |
| டக்கர் | 8 | சிறப்பான |
| டப்பிங் | 3 | வேற்றுமொழிப்பதிவு |
| டக் | 3 | சுழிநிலை |
| டஜன் | 3 | பன்னிரண்டு |
| டயம், டைம் | 6 | நேரம், காலம் |
| டவுன் | 5 | நகரம், பட்டணம் |
| ட்ரீட் | 3 | நடத்து, இன்ப விருந்து, விருந்துபச்சாரம் |
| ட்ரஸ், டிரெஸ், டிரஸ் | 10 | உடை |
| டாக்டர் | 93 | மருத்துவர் |
| டாடி | 3 | தந்தை |
| டான்ஸ் | 33 | நாட்டியம், நடனம், ஆடல் |
| டாப் | 8 | மிகச்சிறப்பான, முதன்மை நிலை |
| டாய்லெட் | 3 | கழிப்பறை |
| டிக்கட், டிக்கெட் | 8 | (அனுமதிச்) சீட்டு, பயணச் சீட்டு |
| டி. இ. ஓ. | 8 | மாவட்டக் கல்வி அதிகாரி |
| டி.வி., டெலிவிஷன், டிவி | 47 | தொலைக்காட்சி |
| டிபன் | 5 | சிற்றுண்டி |
| டிஸ்மிஸ் | 12 | நீக்கு, வெளியேற்று |
| டியர் | 6 | அன்புள்ள |
| டிராமா | 5 | நாடகம் |
| டிராயர் | 3 | காற்சட்டை |
| டிப்ஸ் | 4 | இனாம், கையூட்டு, சிறு அன்பளிப்பு |
| டிரைவர் | 14 | ஓட்டுநர் |
| டியூட்டி | 3 | கடமை, வேலை |

| | | |
|---|---|---|
| டிராப்ட், ட்ராப்ட் | 4 | வரைவோலை |
| டிஸைன், டிசைன் | 3 | வரையுரு, தினுசு, உருமாதிரி |
| டிராலி | 7 | தள்ளு வண்டி |
| டீச்சர் | 30 | ஆசிரியர், ஆசிரியை |
| டீ | 10 | தேநீர் |
| டூப் | 4 | மாதிரி, ஒத்த உருவமுடையவர், மாற்று நடிகர், போலிமை மாதிரி |
| டூயட் | 4 | உறழ்பாடல், மாற்றுப் பாட்டு |
| டென்த் | 3 | பத்தாவது |
| டெக்னிக், டெக்னிகல் | 4 | உத்தி, பாணி, நுணுக்கம், நுணுக்கம் சார்ந்த, தொழில் நுட்பம் சார்ந்த |
| டெலிபோன், போன், ஃபோன் | 49 | தொலைபேசி |
| டென்ஷன் | 4 | மன இறுக்கம், கெடுபிடி நிலை |
| டேஸ்ட் | 4 | சுவையுணர்வு, விருப்ப நாட்டம், நாவுணர்வு |
| டேப், டேப்ரிக்கார்டர் | 6 | நாடா, (ஒலிப்பதிவு) நாடாக்கருவி |
| டேலண்ட், டேலண்ட்ஸ் | 4 | புத்தி நுட்பம், திறமை, செயல்திறம், திறலாண்மை |
| டைட்டில் | 6 | தலைப்பு |
| டைரக்ட் | 13 | இயக்கு |
| டைரக்டர் | 70 | இயக்குனர் |
| டைரி | 17 | நாட்குறிப்பேடு |
| டைப், டைப்ரைட்டிங் | 12 | வகை, தட்டெழுத்து |
| டைப்பிஸ்ட் | 3 | தட்டச்சர் |
| டைரக்ஷன் | 13 | திசை, இயக்கம் |
| த்ரில், திரில்லிங் | 5 | சிலிர்ப்பு, உணர்வார்வம், மயிர்க்கூச்செறி நிலை |
| த்ரிநாட்செவன் | 3 | மூன்று சுழி ஏழு (307) |
| தாங்க் யூ | 5 | உங்களுக்கு நன்றி |
| தாங்க்ஸ், தேங்க்ஸ் | 12 | நன்றி |
| தியேட்டர் | 26 | அரங்கம் |
| நம்பர் | 4 | எண் |
| நர்ஸ் | 9 | செவிலி |
| நயன்த் ரீல் | 3 | ஒன்பதாவது படச்சுருள் |
| நியூஸ் | 7 | செய்தி |
| நைட் | 4 | இரவு |
| நைஸ் | 3 | நேர்த்தி, இனியது, இனிதான |
| நோ | 4 | இல்லை, கிடையாது, வேண்டாம் |

| | | |
|---|---|---|
| ப்ரூப், ப்ரூப்ரீடர், புருப்ரீடர் | 4 | அச்சுப்படி, அச்சுப்பிழைத் திருத்துவோர் |
| ப்ராப்ளம் | 4 | பிரச்சனை |
| ப்ளீஸ் | 22 | தயவு செய்து, தயை செய் |
| ப்ளஸ் பாயிண்ட், பிளஸ் பாயிண்ட் | 5 | கூடுதலான சிறப்புக் குறிப்பு, மிகை நலக்கூறு |
| பட்ஜெட் | 17 | நிதிநிலை அறிக்கை |
| பலூன் | 5 | ஊதற்பை, காற்றுக்கூண்டு |
| பர்டிகுலர்ஸ் | 3 | விவரம், விவரக்கணக்கு, நுணுக்கத் தகவல் |
| பனியன் | 3 | உள்ளாடை (ஆண்) |
| பப்ளிகேஷன்ஸ், பப்ளிகேஷன் | 12 | வெளியீடு |
| பர்த், பர்த்டே | 3 | பிறப்பு, பிறந்த நாள், நாள் மங்கலம் |
| பஸ் | 38 | பேருந்து |
| ப்யூரிட்டன், ப்யூரிடன் | 3 | கடுந்தூய்மையாளர், கடுந்தூயர், கண்டிப்பாளர் |
| பப்ளிஷ் | 3 | வெளியிடு |
| பர்ஸ் | 3 | பணப்பை |
| பாடி | 3 | உடல் |
| பாக்கெட் | 5 | சட்டைப்பை |
| பாங்க், பேங்க் | 5 | வங்கி |
| பாட்டில் | 26 | புட்டி, குப்பி |
| பாண்ட், பேண்ட், பான்ட் | 10 | முழுக் காற்சட்டை |
| பாத்ரூம் | 12 | குளியல் அறை |
| பார்ட்டி | 5 | விருந்து, கட்சி, தரப்பினர், குழுவினர் |
| பாஸ் | 10 | வெற்றி, தேர்ச்சி |
| பாஸ்போர்ட் | 5 | அடையாளச் சீட்டு, அனுமதிச் சீட்டு, கடவுச் சீட்டு |
| பிக்னிக் | 3 | உண்டாட்டு, மனைப்புற உண்டாட்டு |
| பிரின்ஸிபால் | 3 | (கல்லூரி) முதல்வர் |
| பிரேயர் | 3 | வழிபாடு |
| பிரேக் | 2 | இடைமறி, தடங்கல் செய், உடை, இடை நிறுத்தம் |
| பிட் | 3 | சிறு தாள், துண்டு |
| பிசினஸ், பிஸினஸ், பிசினெஸ் | 12 | வாணிகம் |
| பிளான் | 5 | திட்டம், ஏற்பாடு |
| பிலிம் | 6 | படச்சுருள் |

| | | |
|---|---|---|
| புக் | 3 | புத்தகம், ஏடு, சுவடி, பதிவு செய் |
| புரோக்ராம், புரோகிராம் | 12 | நிகழ்ச்சி நிரல், செயல்முறைத் திட்டம் |
| புரபஸர், புரபஸர் ப்ளஸ் | 3 | பேராசிரியர், பெரும்புலவர் |
| பூட்ஸ் | 3 | காலணி |
| பெட் | 3 | படுக்கை, பந்தயம் |
| பெட்டர் | 3 | சிறந்த, மேம்பட்ட |
| பெட்ரோல் | 16 | கல்லெண்ணெய், தெளிந்த நில எண்ணெய் |
| பெயிண்டிங், பெயிண்டிங்ஸ் | 6 | வண்ணம் தீட்டு, வண்ணப்படம் |
| பேனர் | 3 | துகிற்கொடி, விளம்பரப் பட்டிகை |
| பேனா | 8 | எழுதுகோல், மைக்கோல் |
| பேப்பர் | 15 | தாள், செய்தி இதழ், ஆய்வுக் கட்டுரை |
| பேபி | 7 | குழந்தை, குழவி |
| பைலட் | 3 | விமானி |
| போர்ட்டர் | 3 | சுமையாள், சுமை தூக்கி, கூலியாள் |
| போட்டோ, போட்டோகிராஃபர் | 32 | ஒளிப்படம், ஒளிப்படக் கலைஞர் |
| போலீஸ் | 38 | காவல்துறை |
| போட்டோகிராபி | 5 | ஒளிப்படக் கலை |
| போனஸ் | 4 | மிகை ஊதியம், கொடை ஊதியம், பங்குத்தொகை |
| போஸ்டர் | 3 | சுவரொட்டி |
| போஸ் | 4 | தோரணை, நிற்கும் நிலை |
| பிலிம்ஸ் | 1 | புகைப்படச்சுருள் |
| மம்மி | 11 | தாய் |
| மட்டன் | 4 | ஆட்டிறைச்சி |
| மாடலிங், மாடல் | 5 | உருப்படிவமாய்த் தோன்றுதல், (முன்னோடி உரு), மாதிரி |
| மானேஜர், மேனேஜர் | 11 | மேலாளர் |
| மார்க் | 11 | மதிப்பெண், குறியீடு |
| மிஸஸ் | 6 | திருமதி |
| மிஸ் | 8 | செல்வி, குமாரி |
| மிஸ்டர் | 15 | திரு |
| மிமிக்ரி | 5 | ஒப்புப் போலியான நடிப்பு, ஒப்புப்போலி |
| மியூசிக் | 23 | இசை |
| மீட்டிங் | 3 | கூட்டம், சந்திப்பு |
| முஸ்லிம் | 3 | முகமதியர், இசுலாமியர் |
| மூவ்மெண்ட் | 4 | இயக்கம் |
| மூட் அவுட் | 3 | உற்சாகமிழந்த நிலை |

| | | |
|---|---|---|
| மெடிக்கல் | 4 | மருத்துவ |
| மெட்ராஸ் | 13 | சென்னை |
| (மெடிக்கல்) காலேஜ் | 3 | (மருத்துவக்) கல்லூரி |
| மெஷின் | 4 | இயந்திரம் |
| மேக்கப் | 15 | ஒப்பனை |
| மேக்ஸ், மேத்ஸ், மாத்ஸ் | 5 | கணிதம் |
| மேட்டர் | 9 | செய்தி |
| யூனிவர்ஸிடி | 3 | பல்கலைக்கழகம் |
| யூஸ் | 5 | உபயோகம், பயன் |
| ரயில் | 5 | புகைவண்டி, தண்டவாளம், இருப்புப் பாதை |
| ராக்கெட் | 3 | ஏவுகணை |
| ராங்க் | 6 | தர வரிசை, படிநிலை |
| ராஸ்கல் | 3 | போக்கிரி, கயவன் |
| ரிப்போர்ட் | 9 | அறிக்கை, தெரிவி |
| ரிஜிஸ்ட்ரார், ரிஜிஸ்டர் | 5 | பதிவாளர், பதிவேடு |
| ரியலிஸம் | 3 | மெய்ம்மை, உண்மை நிலை, நடப்பியல், இயல்பு நவிற்சி |
| ரிலீஸ் | 14 | வெளியிடு |
| ரிக்கார்டிங், ரெகார்டிங் | 16 | பதிவு, ஒலிப்பதிவு |
| ரிசர்வ், ரிசர்வேஷன் | 4 | இடம் ஒதுக்கு, முன்பதிவு |
| ரிடையர் | 8 | (பணி) ஓய்வு பெறு, விலகுதல் |
| ரிடர்ன் | 3 | திரும்பி வா (அ) போ, விவரம் கொடு, திருப்பிக் கொடு |
| ரிவர்ஸ் | 3 | எதிரிடை, மறிதலை, பின்புறம் |
| ரீல் | 4 | படச்சுருள் |
| ரூம் | 9 | அறை |
| ரெடி | 8 | அணிய நிலை |
| ரெஸ்டாரெண்ட், ரெஸ்டாரண்ட் | 3 | உணவகம் |
| ரேட் | 3 | விலை, மதிப்பு |
| ரேடியோ | 5 | வானொலி |
| ரோபாட் | 3 | இயந்திர மனிதன் |
| ரோடு | 21 | சாலை |
| லவ், லவ் ஸ்டோரி | 10 | அன்பு, காதல், காதல்கதை |
| லஞ்ச் | 3 | மதிய உணவு, சிற்றுண்டி |
| லாரி | 13 | சரக்குந்து, திறந்த வண்டி |
| லாண்டரி | 6 | சலவை நிலையம் |
| லிப்ட் | 3 | தூக்கு, உயர்த்து, தூக்கி |
| லீவ், லீவு | 7 | விடுமுறை |

| | | |
|---|---|---|
| லெட்டர் | 10 | கடிதம், மடல், முடங்கல் |
| லே அவுட் | 3 | திட்ட அமைப்பு |
| லேட்டஸ்ட் | 6 | இப்போதைய, அண்மையிலான, இன்றைய |
| லேடிஸ் | 5 | பெண்கள், மகளிர் |
| லேட் | 23 | தாமதம், காலம் கடந்த நிலை, காலத்தாழ்வு |
| லேஸ் | 4 | நாடா, சரிகை, ஒப்பனைப் பின்னல் |
| லைஃப் | 5 | வாழ்க்கை |
| லைட்ஸ் ஆன் | 13 | வெளிச்சம் காட்டு, விளக்கேற்றல், ஒளிவட்டம் |
| லைசென்ஸ் | 6 | அனுமதி, உரிமம் |
| லோன் | 5 | கடன் |
| வாய்ஸ் | 6 | குரல் |
| வாட்ச் | 8 | கடிகாரம், மணிப்பொறி, உற்றுநோக்கு, உன்னிப்பாய்க் கவனி |
| வார்டன் | 56 | காப்பாளர், பாதுகாவலர் (சிறைச் சாலை; மாணவர் விடுதி), மேலாளர் |
| வாட்ச்மேன் | 3 | காவற்காரன், காவலாளி |
| வீடியோ | 25 | ஒளி (நாடா), ஒளிப் (பெட்டி) |
| வெரிகுட் | 5 | மிகவும் நல்லது, மிக்க நன்று |
| வேன் | 8 | சரக்கு வண்டி, சுண்டு வண்டி, சரக்கு ஊர்தி, சுண்டு ஊர்தி |
| வேஸ்ட் | 5 | கழிவு, தேவையில்லாத |
| ஜட்ஜ் | 3 | நடுவர் |
| ஜர்னலிஸம் | 5 | இதழியல் |
| ஜாக்பாட் | 3 | அதிட்ட பந்தயம், எதிர்பாரா இலாபப் பந்தயம் |
| ஜீன்ஸ் | 3 | முரட்டு முறுக்கிழை துணி, முறுக்கிழைக் காற்சட்டை |
| ஜெயில் | 11 | சிறைச்சாலை |
| ஜோக் | 11 | சிரிப்புச் செய்தி, வேடிக்கைப் பேச்சு, விகடம், கேலித் துணுக்கு |
| ஷர்ட் | 3 | மேற்சட்டை |
| ஷாக் | 3 | அதிர்ச்சி |
| ஷாட் | 7 | (திரைப்பட) வீச்சு |
| ஷூட்டிங் | 33 | படப்பிடிப்பு |
| ஷோ | 3 | காட்சி |
| ஷூட் | 4 | குறிபார்த்து சுடு, படமெடு |
| ஸ்ட்ரைக் | 8 | வேலைநிறுத்தம் |

| | | |
|---|---|---|
| ஸ்டில்ஸ், ஸ்டில் | 4 | அசைவிலா (ஒளிப் படம்) |
| ஸ்டுடியோ | 29 | படப்பிடிப்பு நிலையம் |
| ஸ்டார் | 5 | நட்சத்திரம், நட்சத்திர நிலை, நடிகர் |
| ஸ்வீட் | 4 | இனிப்பு |
| ஸ்கூட்டர் | 18 | இரு சக்கர மோட்டார் வண்டி, பாயும் (மோட்டார்) வண்டி |
| ஸ்கூல் | 11 | பள்ளிக்கூடம் |
| ஸ்டாப் | 4 | நிறுத்து, நிறுத்தம் |
| ஸ்பெஷல் | 4 | சிறப்பான |
| ஸ்டேஜ் | 19 | மேடை, நிலை |
| ஸ்பீட் | 3 | வேகம் |
| ஸ்டாண்ட், ஸ்டாண்டு | 4 | நிற்கும் நிலை, ஆதாரம், தாங்கி |
| ஸாரி | 6 | வருந்துகிற, இரங்குகிற |
| ஹெட்மாஸ்டர் | 3 | தலைமையாசிரியர் |
| ஹேண்ட் பேக் | 4 | கைப்பை |
| ஹைஸ்கூல் | 3 | உயர்நிலைப்பள்ளி |
| 70 எம். எம். | 1 | 70 மி. மீ. |
| ஹலோ | 10 | இது ஒரு விளிச்சொல். (எ. கு) ''உங்களைத்தானே'', ''ஏய், என்ன'' ''வணக்கம்.'' |
| ஹால் | 3 | கூடம், பெரிய அறை |
| ஹாபி | 3 | பொழுதுபோக்கு |
| ஹீரோயின், ஹீரோயின்ஸ் | 9 | கதாநாயகி, கதாநாயகியர், தலைவி, தலைவியர் |
| ஹீரோ | 22 | கதாநாயகன், கதைத்தலைவன் |
| ஹெல்ப் | 3 | உதவி |

---

## எண்ணங்களை எழுதுங்கள்

ஆவணம் இரண்டாம் இதழைப் படிக்கும் அன்பர்கள் இந்த இதழின் அமைப்பு, இதில் இடம் பெற்றிருக்கும் செய்திகள், கட்டுரைகள் ஆகியவற்றைப் பற்றித் தத்தம் கருத்துக்களை எழுதுமாறு வேண்டுகிறோம். புதியனவாகவும், பயனுள்ளவை யாகவும் எவ்வெப் பகுதிகளைச் சேர்க்கலாம் என்பதற்கும் வழி காட்டுங்கள். இவ்விதழில் வெளியாகியுள்ள ஆய்வுக் கருத்துக் களுக்கு மாறுபட்ட கருத்துக்கள் இருந்தாலும் தெரிவித்தருள்க. ஆவணம் உரியவற்றை வெளியிட்டு மகிழும். — ஆர்

# 28. சோழமாதேவி திருக்கைலாயமுடையார் திருக்கோயில் அமைப்பும் அளவுமுறையும்

வே. இராமன்

அண்மையில் தமிழ்நாடுஅரசு தொல்பொருள் ஆய்வுத் துறையினர் வரலாற்றுச் செய்திகளைத் தாங்கி நிற்கும் சிறப்பு மிக்க சிவன் கோயில் ஒன்றினைக் கண்டுபிடித்து வெளிப்படுத்தியுள்ளனர்.[1] இக்கோயிலின் அமைப்புமுறை, எந்தச் சிற்ப நூலைப்பின்பற்றி, எந்த அளவுகோலைப் பயன்படுத்தி அமைக்கப்பட்டுள்ளது என்பதை ஆராய்வதே கட்டுரையின் நோக்கம்.

## சிற்ப நூல்கள்

சங்க காலத்தில் முறையோடு வகுத்துத் தொகுக்கப்பட்ட சிற்ப நூல்கள் இருந்தமையை சங்க இலக்கியங்கள் மூலம் அறிகிறோம். சிலப்பதிகாரம் மயன் முறையைப் பற்றி சிறப்பித்துக் குறிப்பிடுகிறது. ''நூலோர் சிறப்பின் முகில்தோய் மாடம், மயன் பண்டிழைத்த மரபினது தான் . . . .'' என்னும் இலக்கிய வரிகள் அக்காலத்தில் சிற்ப நூல்களும், சிற்பிகளும் இருந்தனர் என்பதைத் தெரிவிக்கின்றன. ''இப்பெருந் திருநகர் படைப்பான் மயன் முதல் தெய்வத் தச்சரும் . . . . .'' என்று கம்பன் கூறுவதிலிருந்து எல்லோராலும் பாராட்டப்படுபவன் மயன் என்னும் பெருந்தச்சன் ஆவான் என அறிகிறோம். இவனால் இயற்றப்பட்ட சிறப்பான நூலே ''மயமதம்'' எனும் சிற்ப நூலாகும்.

## விரல்

8 நெல் (யவை) கொண்டது 1 விரல் அல்லது 1 அங்குலம் என கணக்கீடு செய்யப்பட்டுள்ளது. இதனை அடியார்க்குநல்லார் உரை, கந்தபுராணம், மயமதம் போன்ற நூல்களும் தெளிவாக்குகின்றன.[2] இங்ஙனம் கணிக்கப் பெற்ற அங்குலமானது, அதாவது 1 விரல், $1\frac{3}{8}$'' ஆங்கில அளவிற்குச் சமமானதாகும். இதனைப் பொறியாளர்களும் கணித்துள்ளனர்.[3]

## முழக்கோல்கள்

'' . . . . நூல்நெறி மரபின் அரங்கம் அளக்கும் கோல் அளவு இருபத்துநால் விரலாக . . . . . .''[4] என இளங்கோவடிகள் குறிப்பிடுவதிலிருந்து 24 விரல் கொண்ட முழக்கோல் இருந்தமையை அறிய முடிகின்றது. ஒரு முழத்திற்கு 24 விரல் என்பதே அடிப்படை அளவாகும்; என்றாலும் வேறு சில முழக்கோல் அளவுகளும் சிற்ப நூல்களில்

கூறப்பட்டு வெவ்வேறு பெயர்களில் வழங்கி வந்துள்ளன. 24 விரல் தொடங்கி 31 விரல் வரை கொண்ட 8 விதமான முழக்கோல்கள் இருந்தன என்பதனை அறிகிறோம்.[5]

அங்குலத்திலிருந்து தோன்றிய பிற அளவைகள்

ஆறு அங்குலம் கொண்ட நீள அளவு 'தாளம்' என்றும், இரண்டு தாளம் கொண்டது 'விதஸ்தி' என்றும், இரண்டு விதஸ்தி கொண்டது ஒரு 'கிஷ்கு' என்றும் கணக்கிடப்படுகின்றது. ஒரு கிஷ்கு என்பது 24 விரல் கொண்ட முழு அளவாகும்.

இதனைத் தெளிவாக ஆங்கில அளவின்படி கூறுவோமானால்,
6 விரல் கொண்டது : 1 தாளம். (6 விரல் = $6 \times 1\frac{3}{8}'' = 0'.8\frac{1}{4}''$)

2 தாளம் அல்லது 12 விரல்
கொண்டது: 1 விதஸ்தி. (12 விரல் = $12 \times 1\frac{3}{8}'' = 1'\ 4\frac{1}{2}''$)

2 விதஸ்தி அல்லது 24 விரல்
கொண்டது : 1 கிஷ்கு முழம்
(24 விரல் = $24 \times 1\frac{3}{8}'' = 2'\ 9''$ ஆகும்)

இக்கணக்குப்படி 24 விரல்களைக் கொண்ட ஒரு முழம் என்பது $2\frac{3}{4}$ அடி என அறியலாம்.

24 விரல்களைக் கொண்ட கிஷ்கு முழத்தைத் 'தஞ்சை முழம்' என்றும், 'தச்சு முழம்' என்றும், 'சிற்பமுழம்' என்றும் கூறுவர். திருவண்ணாமலைத் திருக்கோயிலை அமைப்பதற்குப் பயன்படுத்திய அளவுகோல் இம்முழக்கோலேயாகையால் இதனை 'அண்ணாமலை முழம்' என்றும் கூறுவர். இந்த அளவு இன்றளவும் ஸ்தபதிகளால் அவரவர்தம் பகுதிகளில் பயன்படுத்தப்பட்டு வருகிறது.[6]

கிஷ்கு முழத்தின் உட்பிரிவுகள்

24 விரல் கொண்ட கிஷ்கு முழம் உத்தம முழம் என்றும்,
$23\frac{1}{2}$ விரல் கொண்ட கிஷ்கு முழம் மத்திம முழம் என்றும்,
$23\frac{1}{4}$ விரல் கொண்ட கிஷ்கு முழம் அதம முழம் என்றும்,
மூன்று வகை அளவுகோல்களை ஸ்தபதிகள் வகுத்துள்ளனர்.[7]

அதம கிஷ்கு முழம்

அதம கிஷ்கு முழத்தைப் பழனி, மதுரை கோயில்களைக் கட்டிய ஸ்தபதிகள் பயன்படுத்தியுள்ளனர். எனவே இம்முழத்தை 'மதுரை முழம்' என்றும் அழைப்பர்.[8]

## கைலாயமுடையார் கோயில் அளவுகோல்

தமிழகத்துக் கோயில்களிலேயே மிகவும் உயர்ந்ததும் உன்னத மான அமைப்பும் கொண்டது தஞ்சையிலுள்ள பெரிய கோயிலாகும். வானளாவிய இத்திருக்கோயிலை எழுப்பிய மாமன்னன் இராசராச சோழன், இக்கட்டட அமைப்பை அளந்தறிந்து செய்ய எடுத்துக் கொண்ட அளவுகோல் ''கிஷ்கு'' முழமே என்பர்.[9] சோழமாதேவி கைலாயமுடையார் கோயிலின் அதிட்டான உயரம், பாதவுயரம், பாத அகலம், உண்ணாழி அளவு, ஆவுடையார் அளவு மற்றும் முகமண்டப அளவு முறைகளை கவனமாக ஆராய்ந்து பார்த்ததில் கிஷ்கு முழத்தின் உட்பிரிவான மதுரை முழம் என அழைக்கப்படும் அதம கிஷ்கு முழத் தையே பேரரசன் இராசராசனால் எழுப்பப்பட்ட இத்திருக்கோயிலை நிர்மாணிக்கப் பயன்படுத்தியுள்ளனர் என்று அறிய முடிகிறது. மயமதம் கூறும் அமைப்புப்படியும், அளவின்படியும் அதம கிஷ்கு முழக் கோல் எங்ஙனம் இக்கோயில் அமைப்பில் இடம் பெற்றுள்ளது என் பதனை மேலும் காண்போம்.

## அதிட்டானம்

ஜகதி, குமுதம், கம்பு, கண்டம், கம்பு, பட்டிகை, கம்பு என்ற அங்கங்களைக் கொண்டதாக அதிட்டானம் அமைய வேண்டும் எனக் கூறும் மயமதம் ஒவ்வோர் அங்கத்தின் உயர அளவையும் வரையறுத் துக் கூறுகின்றது.[10]

கட்டட அமைப்பில் அதிட்டான உயரமானது $1\frac{1}{4}$ முழம் அல்லது $101\frac{1}{2}$ செ.மீ. உள்ளது. இதனை இந்நூல் அளவுமுறையோடு கணக்கீடு செய்து ஒப்பிடும்போது,

| அங்கம் | சிற்ப நூல் அளவு | கட்டட அங்க அளவு |
|---|---|---|
| ஜகதி | 8 பாகம் | 33 செ. மீ. |
| குமுதம் | 7 பாகம் | $31\frac{1}{2}$ ,, |
| கண்டம் வரி | 5 பாகம் | $19\frac{1}{2}$ ,, |
| பட்டிகை வரி | 4 பாகம் | $17\frac{1}{2}$ ,, |
| | 24 பாகம் | $101\frac{1}{2}$ செ.மீ |

இதனை ஒப்பு நோக்கும் போது சிற்பநூலில் கூறப்படும்அளவிற்கிணங்க கட்டட அமைப்பில் உள்ள அதிட்டான வரி அங்கங்களின் உயர அளவு இருப்பதால் மயமத நூலைப் பின்பற்றியும், அதம கிஷ்கு முழ அளவு முறையினைக்கொண்டும் இத்தாங்குதளம் அமைக்கப்பட்டுள்ளது என அறிய முடிந்தது. மேலும், கோமுகமானது அதிட்டானக் கண்டம்




சோழமாதேவி திருக்கைலாயமுடையார்
திருக்கோயில் அமைப்பு முறை வரைபடம்

வரி மட்டத்தில் இடம் பெற்றிருப்பது இந்நூல் கூறும் மரபுப்படியே என்பதும் குறிப்பிட வேண்டியதொன்றாகும்.[11]

பாத உயரம்

பாத உயரமானது அதிட்டான உயரத்தைப்போல் இருமடங்கு உயரம் 2½ முழம், அதாவது 203செ.மீ. கைக்கொள்ளப்பட்டிருப்பதும்[12] அவ்வுயரத்தை 10 பாகம் செய்து 1 பாகம் பாத அகலமெனக் கொண்டிருப்பதும் மயமத நூல் கூறும் மரபுப்படியே உள்ளது. [13]

உண்ணாழி

கருவறையின் கால்புறவாய் நீளத்தில் 9 ல் 5 பாகம் உண்ணாழியும், 4 பாகம் பக்கச்சுவர் அளவு கொண்டிருப்பதும் இந்நூல் மரபுக்கு உட்பட்டதாய் உள்ளது.[14]

முக மண்டபம்

முக மண்டப நீளமானது கருவறையின் நீள அளவிற்கு முக்கால் பங்கு கொள்ளலாம் என்பது மயமதநூல் கூறும் விதியாகும்.[15] இங்கு

முகமண்டப நீளமானது 4.11மீ. கொண்டதாய் அமையப் பெற்றுள்ளதும் நோக்கத் தக்கதாய் உள்ளது.

அருள்மிகு பரமேசுவரர்

கருவறையில் எழுந்தருளியிருக்கும் லிங்கத் திருமேனியின் ஆவுடையார் சதுர அமைப்புடையதாகும். ஜகதி, குமுதம், கம்பு, கண்டம், கம்பு, பட்டிகை, கிருதவாரி எனும் உறுப்புக்களைப் பெற்று அழகுற அமைந்துள்ளது. இதனை 'பத்ரபீடம்' என்பர். ஆவுடையாரின் நீளம் × அகலம், 0.76 × 0.76 செ.மீ. என்ற அளவில் உள்ளது. இந்த அளவு கருவறையின் அகலத்தில் கால் பங்காக இருப்பதும் மயமத நூல் கூறும் விதிக்கு உட்பட்டதேயாகும்.[16]

முடிவு

கைலாயமுடையார் கோயில் சிறியதாயினும் கலைச் சிறப்பு மிக்க கோயில் எனக் கண்டோம். எல்லாவித அளவு முறைகளும் ஆயாதி எனும் கணக்கால் செம்மையாகச் சோதிக்கப்படுவதால் அளவு முறைகளில் சிறிது கூட்டியும், குறைத்தும் எடுத்தாளப்படுவது சிற்பியின் திறமையாகும். இருந்த போதிலும் இத்திருக்கோயில் மயமத சிற்பநூல் மரபுப்படியும், கிஷ்கு எனும் அளவு கோலைப் பின்பற்றியும் அமைக்கப்பட்டுள்ளது என்பது துணிபு.

அடிக்குறிப்புகள்

1 கி. ஸ்ரீதரன், கல்வெட்டு, த.தொ.ஆ.துறை வெளியீடு, இதழ் 29.
2 சிலம்பு - அடியார்க்கு நல்லார் உரை மயமதம் — பக்கம் 20

| | | | |
|---|---|---|---|
| 8 அணு | : 1 தேர்த்துகள் | 8 அணு | :1தேர்த்துகள் |
| 8 தேர்த்துகள் | : 1 இம்மி | 8 தேர்த்துகள் | : 1 பேன் |
| 8 இம்மி | : 1எள் | 8 பேன் | : 1 யூகை |
| 8 எள் | : 1 நெல் | 8 யூகை | : 1யவை |
| 8 நெல் | : 1 பெருவிரல் | 8 யவை | : 1 விரல் |

3 கொடுமுடி சண்முகனார், தமிழியல், டிசம்பர்'81.
4 சிலம்பு — அரங்கேற்று காதை.
5 வை. கணபதி ஸ்தபதி, சிற்பச் செந்நூல்,

முழக்கோல் வாய்பாடு.

| | | | | |
|---|---|---|---|---|
| 24 | விரல் | கொண்ட | முழம் | : கிஷ்கு |
| 25 | ,, | ,, | ,, | : பிராஜாபத்தியம் |
| 26 | ,, | ,, | ,, | : தனுர் முஷ்டி |
| 27 | ,, | ,, | ,, | : தனுர்கிரகம் |
| 28 | ,, | ,, | ,, | : பிராச்யம் |
| 29 | ,, | ,, | ,, | : வைதேகம் |
| 30 | ,, | ,, | ,, | : வைபுல்யம் |
| 31 | ,, | ,, | ,, | : பிரகீர்ணம் |

6 வே. இராமன், தஞ்சைப் பெரிய கோயில் - அளவு கோல், தமிழ்ப் பொழில், கரந்தைத் தமிழ்ச்சங்கம் வெளியீடு.
7 வை. கணபதி ஸ்தபதி, சிற்பச் செந்நூல், பக்கம். 3.
8 மதுரை முழம் $23\frac{1}{4}$ விரல் $= 23\frac{1}{4} \times 1\frac{3}{8} = 7\frac{3}{3}\frac{1}{2}$ அல்லது 2' 8'' அல்லது 0.81 செ.மீ.
9 வை. கணபதி ஸ்தபதி, சிற்பச் செந்நூல், பக்கம். 3,
10 மயமதம், தஞ்சை சரசுவதிமகால் வெளியீடு, முதல்பாகம், பக்கம்172.
11 மேற்படி, பக்கம் 318.
12 மேற்படி, ,, 186.
13 மேற்படி, ,, 186.
14 மேற்படி, ,, 330.
15 மேற்படி, ,, 414.
16 மேற்படி, இரண்டாம் பாகம் பக்கம். 261.

## தேர் நூலும் புரவி நூலும்

சங்க காலத்தில் பல கலைகளுக்கும் பயில்விக்கும் நூல்கள் இருந்தன. அகநானூறு இத்தகு இரண்டு அரிய கலை நூல்களைக் காட்சிக்கு வைக்கிறது. ஒன்று தேர் செய்யப் பயிற்றுவித்த தச்சநூல். 'நூல் இயல் நெடுந்தேர்' என்னும் வரியால் இந்த உண்மை வெளிச்சத்திற்கு வருகிறது. இத்தகு தேரின் பயணத்தையும் அகநானூறு படம் பிடிக்கிறது. வரிசையாகப் பறக்கும் அன்னங்களைப் போல விரையும், புல்லிய பிடரி மயிர் கொண்ட புரவிகளை மென்மையுறப் பூட்டி, அக் கடிவாள வாரினைப் பற்றிப் பல ஆரங்களையுடைய உருளை, நிலத்தே பதிந்து வழிகடக்க, காற்றைப்போல் செலுத்தப்பட்ட இத்தேர் கண் பார்வையைத் தவிர்க்குமளவு கடுவிரைவு கொண்டதாம் (அகம் 234).

அகப் பாடல்களால் தெரியவரும் மற்றொரு நூல் புரவி நூலாகும். இரண்டு பாடல்கள் இந்நூல் பற்றிக் குறிக்கின்றன.

''நூல்நெறி நுணங்கிய கால்நவில் புரவி'' — (அகம் 314)
''நூலமை பிறப்பின் வாமான் திண்தேர்'' — (அகம் 400)

இவ்விரு பாடல்களுள் ஒன்று புரவி நூல் கூறும் இலக்கணப்படி அமைந்த குதிரைகளின் தோற்றப் பொலிவையும், உண்ணும் பழக்கத்தையும் விரிவாகப் பேசுகிறது. இரண்டு பாடல்களுமே இத்தகு புரவிகள் பூட்டிய தேர்களின் காற்றைப் போன்ற பயணத்தைப் படக்காட்சியாய்க் காட்டுகின்றன.

— அர. அகிலா, இரா. கலைக்கோவன்.

# 29. தலைக்கோல்*

மு. நளினி, இரா. கலைக்கோவன்

மனிதன் எப்போது தோன்றினானோ அப்போதே கலைகளும் தோன்றின. உணர்வுகளை வெளிப்படுத்த முதல் மனிதன் மேற்கொண்ட முயற்சிகளே மெய்ப்பாட்டு நிலைகளையும் ஓசைகளையும் உருவாக்கின. இவையே காலத்தின் கரங்களில் வளர்ந்து, கற்பனைச் சுழல்களில் மலர்ந்து பல்வேறு கலைகளாக வடிவெடுத்தன. நாகரிகத்தின் அரவணைப்பில் செழித்துச் சிறந்த இத்தகு நுண்கலைகளுள் ஒன்றுதான் ஆடல். இயற்கையின் பரவலான ஆட்சியில் அசைவில்லாதது எது? காற்றடித்தால், அடிக்கும் காற்றின் அலைப்புக்கேற்ப அசைந்தாடும் மரங்களில் ஆடல் இல்லையா? நல்ல கவிதையில் ஒன்றிப் போகும் உள்ளம் களி கொண்டு ஆடுவதில்லையா! முகிலைக் கண்டால் மயில் தோகை விரிக்கிறதே! ஆர்கலியின் அலைக்கரங்கள் எழுந்தாடும் நேரத்தில் அழகு கொஞ்சும் எழிற் காட்சிகள் எத்தனை! எத்தனை! வானில் மின்னும் மின்னல் கூட வளைந்து நெளிந்துதானே மின்னிப் போகிறது. அசைவில்லாத பொருட்களைக் கூட அசைவதாகக் கற்பனை செய்யும்போது எத்தனை உணர்வு வெளிப்பாடுகள் உற்பத்தியாகின்றன. அசைவு தரும் மகிழ்வும், மெய்சிலிர்ப்பும் எல்லையற்றனவாகும். உடலின் பல பகுதிகளையும் இயக்கி, அசைவுகளைத் தோற்றுவித்து அழகுகளை வெளிப்படுத்தி அதன்வழி உணர்வுகளை வடித்துக் காட்டும் உயரிய கலை ஆடற்கலை.

இந்த ஆடற்கலைக்குத் தமிழகம் தந்த சிறப்பைச் சங்க இலக்கியங்களில் பரக்கக் காணலாம். ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றான சிலப்பதிகாரம், அரங்கேற்றுக் காதையில், ஆடற்கலை இலக்கணங்களையும் நுணுக்கங்களையும் அழகாய்த் தெரிவிக்கிறது. மாதவியைக் கோவலனுடன் கூட்டுவித்த இந்த ஆடற்கலைக்குத் தெய்வமாக இந்திரனின் மகன் சயந்தனை அக்காலத்து மக்கள் வழிபட்டனர். முருகனைக் குறிக்க வேல் பயன்பட்டாற் போலச் சயந்தனைக் குறிக்க ஒரு கோல் அடையாளமாய்ப் போற்றப்பட்டது. இதைத்தான் தலைக்கோல் என்று இலக்கியங்கள் அறிவிக்கின்றன.

சயந்தனுக்கும் தலைக்கோலுக்கும் என்ன தொடர்பு என்பதை அடியார்க்கு நல்லார் ஒரு மேற்கோள் பாட்டால் விளக்குகிறார்.[1] பொதிய மலை முனிவராகிய அகத்தியர் ஒருமுறை இந்திரன் அவைக்கு வருகை தந்தார். அவரை மகிழ்விக்கும் பொருட்டு இந்திரன் ஆடலுக்

---

* தொல்லியல் ஆய்வுத் தொகுதியில் வெளிவந்த சிறு கட்டுரையின் கால வளர்ச்சி.

கும் பாடலுக்கும் ஏற்பாடு செய்தான். இந்திரன் பேரவையில் இனிய இசையுடன் உருப்பசியின் ஆடல் நிகழ்ந்து கொண்டிருந்தது. அது போழ்து இந்திரனின் மகன் சயந்தன் கரந்துவரல் எழினியுடன் (மறைக் கப்பட்டிருந்து பின் இறக்கிவிடப்படும் திரை) அவையில் புகுந்து பாட, ஆடலில் தோய்ந்திருந்த உருப்பசி அவனிடம் தோய்ந்தாள். பார்வைகள் காதலைப் பரிமாறிக் கொள்ள, கண்ணிமைகள் பார்த்த காட்சிகளைப் பாதுகாக்கும் நோக்குடன் பக்குவமாய் மூட, உருப்பசியின் ஆடல் நெகிழ்ந்தது. அதையொட்டி ஏனைய இசைக்கருவிகள் எல்லாம் நெகிழ்ந்தன. ஆடலின் மயக்கத்தில் தன்னை மறந்திருந்த அவைக்கு இந்நிகழ்ச்சியை உணர்த்த விரும்பிய நாரதன், தன் யாழில் பகை நரம்பு படப் பாடினான். இவற்றையெல்லாம் உணர்ந்த பொதியில் முனிவர் பொல்லாச் சினம் கொண்டார். நாரதன் வீணை மங்கலமிழந்து மண்ணில் மணையாகட்டுமென்றும், உருப்பசி புவியிலே பிறக்கவென் றும், சயந்தன் விந்திய மலைப்பகுதியில் மூங்கிலாய்த் தோன்றுகவென் றும் சபித்து எழுந்தார். சாபத்தால் துணுக்குற்ற மூவரும் அகத்தியர் அடிபணிந்து சாபநீக்க வழிகேட்டு அலறினர். புவியில் பிறக்கும் உருப் பசி ஆடல் நிகழ்த்தும் போது சயந்தனே கழையாகி, அரங்கேறி அமை யின் சாபம் நீக்கமாகும் என்றார் அகத்தியர்.

இந்தப் பாடலை யொட்டியே மக்கள் சயந்தனை ஆடல் தெய்வ மாய்க் கொண்டனர். அவனைக் குறிக்க மூங்கில் கழியைப் பயன்படுத் தினர். அதையே தலைக்கோல் என்று கொண்டாடினர்.[2] போரில் தோற்ற மாற்றரசர்களின் வெண் கொற்றக் குடையின் காம்பு, பகை வேந்தரது கோட்டைப் புறத்தே வெட்டிய மூங்கில், பெருமைக்குரிய மலைப் புறத்தே வளர்ந்திருக்கும் மூங்கில் இவற்றைக் கொண்டே தலைக்கோல் செய்யப்பட்டதாகச் சிலம்பின் உரை பேசுகிறது. இவற் றுள் முன்னைய இரண்டால் செய்யப்பட்ட தலைக்கோல் வேத்தியலுக் கும் பின்னையதால் செய்யப்பட்ட தலைக்கோல் பொதுவியலுக்கும் பயன்படுத்தப்பட்டன.[3]

இந்தத் தலைக்கோல் எப்படிச் செய்யப்பட்டது என்பதைப் பரத சேனாபதியமும் சிலப்பதிகாரமும் கொண்டு உணரலாம்.

> ''புண்ணியமால் வெற்பில் பொருந்து கழைகொண்டு
> கண்ணிடைக் கண்சாண் கனஞ்சாரும்-எண்ணிய
> நீளமெழு சாண்கொண்டு நீராட்டி நன்மைபுனை
> நாளில் தலைக்கோலை நாட்டு''[4]

என்று பரதசேனாபதியம் தலைக்கோலின் பெருமைகளைப் பேச, தலைக்கோல் அமைதியென்றே பல வரிகளால் இளங்கோ அதன் சிறப் புகளை வரிசைப்படுத்துகிறார்.

''காவல் வெண்குடை மன்னவன் கோயில்
இந்திர சிறுவன் சயந்தன் ஆகென
வந்தனை செய்து வழிபடு தலைக்கோல்''[5]

என்று தொடங்கும் அரங்கேற்றுக் காதை வரிகள் தலைக்கோல் அமைதியைத் தெளிவாய்ச் சொல்கின்றன.

போரில் தோல்வியைத் தழுவிய பகையரசர்களின் வெண்கொற்றக் குடையின் காம்பை எடுத்து அதன் கணுக்கள்தோறும் கழுவிய நவமணிகளால் இழைத்து சாம்பூநதம் என்னும் பொன் தகட்டால் கணுக்களுக்கு இடையேயுள்ள இடங்களைக் கட்டி, அதைத் தேவேந்திரன் மகன் சயந்தனாக நினைத்து மன்னன் அரண்மனையிலே வைத்து வழிபட்டு வருவர்.[6] இப்படிச் செய்யப்பட்டு வழிபடப்படும் தலைக்கோலுக்கு அரண்மனையிலும் ஆடல் அரங்கிலும் சிறப்பான இடமுண்டு.

காவிரிப்பூம்பட்டினத்து இந்திர விழா சோழர்களின் கலையார்வத்திற்கும் இறைப்பற்றுக்கும் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். அவ்விழா நடைபெறும் இருபத்தெட்டு நாட்களிலும் ஆடலும் பாடலும் இல்லாத இடமே பூம்புகாரில் இல்லையெனலாம். இந்தப் பெருமைக்குரிய இந்திரவிழாவின் தொடக்கத்தில் மேளதாளத்துடன் தலைக்கோலுக்கு வழிபாடு நடக்கும். அரண்மனையில் வழிபட்டுக் காப்பமைத்து இருத்திய தலைக்கோலை ஆடலாசிரியர் முதலானோர் புண்ணிய நதிகளின் நன்னீரைக் குடங்களில் கொணர்ந்து நீராட்டி மாலைகள் சூட்டுவர் பின் முரசுகள் முழங்க, பல்லியம் இயம்ப அரசரும், அமைச்சர், படைத்தலைவர், தூதுவர், புரோகிதர், சாரணர் என்னும் ஐம்பெருங்குழுவினரும் உடன்வர அதைப் பட்டத்து யானையிடம் கொடுத்து வலம்வரச் செய்து தேரின் மேல்நிற்கும் பாடுவோன் கையில் தரச் செய்வர். தலைக்கோலை யானையிடமிருந்து பெற்றவர் அதைத் தேரில் அழகுபட வைத்து நகரை வலம் வருவார். இத்திருவலம் முடிந்ததும் ஆடலரங்கில் அதற்கென்று அமைக்கப்பட்ட இடத்தில் தலைக்கோலை உரிய மரியாதைகளுடன் வைப்பார். அதன் பிறகே ஆடல் பாடல்கள் தொடங்கும்.[7]

சிலப்பதிகாரத்தைப் போலவே செயிற்றியமும்,

''பிணியும் கோளும் நீங்கிய நாளால்
அணியும் கவினும் ஆசற வியற்றித்
தீதுதீர் மரபில் தீர்த்த நீரால்
மாசது தீர மண்ணுநீர் ஆட்டித்
தொடலையும் மாலையும் மடலையும் சூட்டிப்
பிண்டம் உண்ணும் பெருங்களிற்றுத் தடக்கைமிசைக்
கொண்டு சென்றுநீஇக் கொடியெடுத் தார்த்து

முரசு முருடு முன்முன் முழங்க
அரசு முதலான ஐம்பெருங் குழுவும்
தேர்வலம் செய்து கவிகைக் கொடுப்ப
ஊர்வலம் செய்து புகுந்த பின்றைத்
தலைக்கோல் கோடல் தக்க(து) என்ப''

என்னும் வரிகளின் தொடரால் தலைக்கோலின் சிறப்புகளைப் பறை சாற்றி மகிழ்கிறது.[8]

நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்து ஆடி மகிழ்வித்த பொன் னியல் பூங்கொடி மாதவிக்கு இலைப் பூங்கோதையையும் தலைக்கோல் பட்டத்தையும் தந்து மன்னன் சிறப்பு செய்ததாகக் கூறும் சிலம்பின் வரிகளால்[9] காப்பிய காலத்திலேயே சிறந்த ஆடலரசிக்குத் தலைக் கோல் பட்டம் வழங்கப்பட்ட வகைமை புலப்படுகிறது. இவ்வளவு தெளி வாக இலக்கியச் சான்று இருந்த போதும், இசையில் சிறந்தவர்களுக்கே தலைக்கோலிப் பட்டம் தரப்பட்டதாகத் தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி தவறான தகவல் தருகிறது.[9A]

இந்தத் தலைக்கோல் மரபு சிலப்பதிகாரக் காலத்தில் திடீரெனத் தோன்றியிருக்க முடியாது. சங்க காலத்திலேயே இதற்கான முன் வடி வுகள் இருந்திருக்க வேண்டும். அகநானூற்றில் ஒரு பாடல் இந்தச் சிந் தனைக்கு அரணாக நிற்கிறது. பெரிய மூங்கில்களையுடைய பகைவரது எயிற்புறத்துக் காட்டில் ஆராய்ந்து அறுத்த நுண்ணிய கணுக்களை யுடைய சிறிய கோலினைக் கொண்டவராய் விறலியர் காட்சியளிக்கும்,

''இருங்கழை இறும்பின் ஆய்ந்துகொண் டறுத்த
நுணங்குகண் சிறுகோல் வணங்கிறை மகளிரொ(டு)[10]

என்ற பாடல் வரிகள் தலைக்கோலின் தோற்றத்தைக் குறிப்பதாகலாம். பகைவரது கோட்டைப் புறத்துக் காட்டில் உள்ள பெரிய மூங்கில்களை ஆராய்ந்து, அறுத்து எடுக்கப்பட்ட நுண் கணுக்கோல் என்னும் விளக்கம் இவ்விறலியர் கொண்ட கோல்களை சிலம்பின் வரையறைப்படி வேத்தி யலுக்குரிய இரண்டாம் நிலைத் தலைக்கோலாகக் காட்டும். அரங்கம் அமையப் பெறாத சங்க காலத்தில் இக்கோலை விறலியர் கையில் கொண்டு ஆடினரா அல்லது ஆடுகளத்தில் பொருத்தி ஆடலைத் தொடங்கினரா என்பதற்கு நம்மிடையே சான்றுகளில்லை.

அக நானூற்றில் தலையெடுத்து சிலப்பதிகாரத்தில் நடை வளர்த்த இந்தத் தலைக்கோல் பழக்கம் சோழர்கள் காலத்தில் சிறந்தோங்கியது. ஆடற்கலையில் தேர்ந்து விளங்கிய அழகு மகளிர்க்குத் தலைக்கோலி, தலைக்கோல் அரிவை என்னும் பட்டங்கள் வழங்கப்பட்டன. ஆடல் ஆசிரியர்கள் தலைக்கோல் ஆசான் என்றழைக்கப்பட்டனர்.

தமிழகத்துத் திருக்கோயில்களில் காணப்படும் சோழப் பேரரசர் களின் கலை சார்ந்த கல்வெட்டுகளில் பல, ஆடற்கலையைப் பற்றியும் அதைப் போற்றி வளர்த்த அக்காலத்து ஆடலரசியர் பற்றியும் அரிய செய்திகளை அள்ளித் தருகின்றன. நக்கன் என்ற சிறப்புப் பெயருடன் ஆடல் மகளிர் குறிக்கப்பட்டனர். ஒவ்வொரு கோயிலும் அதன் தகுதிக் கும் வருவாய்க்குமேற்ப ஆடல் மகளிரைக் கொண்டிருந்தது. கோயில் விழாக்களிலும், முக்கிய வழிபாடுகளின் போதும், ஆடல் மகளிரின் ஆடல் நிகழ்ச்சிகள் இறைத் திருமுன் நடத்தப் பெற்றன. இவ்வாடல் அரசிகளுள் தேர்ந்த சிலரைத் 'தலைக்கோலி' பட்டம் தந்து அரசரும், ஊரவையாரும், கோயிலாரும் பெருமைப்படுத்தினர். முதலாம் இராச ராசனின் பஞ்சநதீசுவரர்கோயில் கல்வெட்டொன்று நக்கன் வெண்ணா வல் என்ற தில்லையழகத் தலைக்கோலியை அறிமுகப்படுத்துகிறது.[11]

ஏறத்தாழ இதே காலகட்டத்தைச் சேர்ந்த கல்வெட்டொன்று அண்மையில் திருவாசி மாற்றுரை வரதீசுவரர்கோயிலில்கண்டுபிடிக்கப் பட்டது. நக்கன் அழகியான நக்கன் சோழத் தலைக்கோலி, நக்கன் மோடியான மும்முடி சோழத் தலைக்கோலி, நக்கன் கொற்றமான வீதிவிடங்கத் தலைக்கோலி, நக்கன் குராவியான திருவரங்கத் தலைக் கோலி என்னும் தலைக்கோலியர் இக்கல்வெட்டால் அறிமுகமாகின் றனர். இன்னொரு தலைக்கோலி திருவையாற்றைச் சேர்ந்தவராக, ஆனால் கல்வெட்டுச் சிதைவால் பெயரிழந்தவராக வெளிச்சத்திற்கு வருகிறார்.[12] திருவிடைமருதூரில் இருந்த இளங்கிலிசானை தலைக் கோலியை ஆதித்த கரிகாலனின் கல்வெட்டால் அறிகிறோம்.[12A] இதே கோயிலில் உள்ள சிதைந்த கல்வெட்டொன்று தலைக்கோலிப் பட்டம் பெற்ற ஆடலரசி ஒருவரைத் தலைக்கோலியார் என்று மிகுந்த மரியா தையுடன் அழைக்கிறது.[12B]

திருவையாற்றில் உள்ள வடகைலாசம், முதலாம் இராசராசனின் மனைவி உலகமாதேவியால் கட்டப்பட்டது.[13] இக்கோயிலில் உள்ள முதலாம் இராசாதிராசனின் கல்வெட்டொன்றால் தலைக்கோலியர் சமுதாயத்தில் பெற்றிருந்த செல்வாக்கு புலனாகிறது. வடகைலாசத் துக்கு இராசாதிராசன் காலத்தில் வேங்கியரசரான விஷ்ணுவர்த்தன தேவர் நகைகளையும் பொன்னையும் அள்ளிக் கொடுத்தார். அந்தக் கொடைகளையெல்லாம் கண்காணித்து நிர்வகிக்க ஒரு குழு நிறுவப் பட்டது. அக்குழுவில் பதியிலாள் நக்கன் அரங்கமான சயங் கொண்ட சோழத் தலைக்கோலியும், நக்கன் பூமியான பரமாக்க விடங்கத் தலைக் கோலியும், நக்கன் சோழ விச்சாதிரியான உலகமாதேவி தலைக்கோலி யும், நக்கன் பவழக்குன்றான மதுராந்தகத் தலைக்கோலியும்இடம்பெற் றிருந்தனர். இந்நால்வரும் அன்றைய சமுதாயத்தில் எத்தனைப் பெரு மைக்குரியவர்களாயும், சிறப்புக்குரியவர்களாயும் கருதப்பட்டிருந்தார்

கள் என்பது இப்பெரும் பொறுப்புக்கு இவர்கள் நியமிக்கப்பட்டதி லிருந்தே தெரிகிறது. மேலும் நான்கு தலைக்கோலிகள் இக்கோயிலில் இருந்தனர் என்றால், இங்கிருந்த ஆடல் மகளிரின் ஆடல் திறனையும், அபிநயச் சிறப்பையும், எண்ணிக்கையையும் நம்மால் எண்ணிப் பார்க்க முடிகிறது.

இதே வளாகத்திலுள்ள பஞ்சநதீசுவரர் கோயில் கல்வெட் டொன்று இக்கோயிலில் ஐயாறன் கலியுகச் சுந்தரத் தலைக்கோலி என்று ஓர் ஆடல்மகள் இருந்ததையும், அவ்வம்மை ஆடல் பாடல்களில் வல்லவரான முப்பது மங்கையருக்குத் தலைவியாக இருந்து ஆடல் நிகழ்ச்சிகளை நடத்தியதையும் எடுத்துரைக்கிறது.[15] இதே கோயிலில் உள்ள இராசேந்திர சோழனின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு நக்கன் அல்லியான ராஜசூளாமணித் தலைக்கோலியைக் குறிக்கிறது.[16]

நக்கன் பிள்ளையாள்வி என்பவர் நானாதேசி தலைக்கோலி என் றும், நக்கன் உலகுடையாள் என்பவர் தேவகள் சுந்தரத் தலைக்கோலி என்றும், நக்கன் உடைய நாச்சியார் என்பவர் சிவஞான சம்பந்தத் தலைக்கோலி என்றும், நக்கன் நல்லாள் என்பவர் மூவாயிரத் தலைக் கோலி என்றும், பட்டம் வழங்கப் பெற்றுச் சிறப்புச் செய்யப்பட்டதைச் சில கல்வெட்டுகள் கூறுகின்றன.[17] சோழத் தலைக்கோலி, ஐந்நூற்றுத் தலைக்கோலி என்றும் சிலர் அறிமுகமாகின்றனர்.[18]

பட்டமளிப்பதுடன் நின்று விடாமல் இவ்வாடல் மகளிருக்கு மன்ன ரும் ஊராரும் அளித்த சிறப்புகளும், மரியாதைகளும் கல்வெட்டுகள்வழி நம்மை வியக்க வைக்கின்றன. உத்தரமேரூர் சுந்தரவரதப்பெருமாள் கோயிலிலுள்ள மூன்றாம் குலோத்துங்கனின் முப்பத்தெட்டாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டும்[19] மூன்றாம் இராசராசனின் மூன்றாமாண்டுக் கல்வெட்டும்[20] ஆயிரத்து இருநூற்றுவன் மாணிக்கம் என்னும் ஆடல் மங்கை இக்கோயிலுக்குச் செய்த திருப்பணிகளைப் போற்றி இந்நங் கைக்கும், இவரது வழியினருக்கும் நாள்தோறும் இறைவனுக்கிடும் படையலில் ஒரு குறுணி சோறு வழங்கவும், தேரோட்டத்தின் போது சில சலுகைகள் காட்டவும் கோயிலார் அனுமதியுடன் ஊரவை எடுத்த முடிவைத் தெரிவிக்கின்றன. இதேபோல் மூன்றாம் இராசராசன் காலத் தில் ஸ்ரீவைஷ்ணவ மாணிக்கம் என்னும் ஆடலரசிக்கும் அவரதுசேவை களைப் பாராட்டிச் சிறப்புகள் பல செய்யப்பட்டதை இன்னொரு கல் வெட்டால் அறிகின்றோம்.

திருவொற்றியூர் ஆதிபுரீசுவரர் திருக்கோயிலில் உள்ள மூன்றாம் இராசராசனின் பத்தொன்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு மிகச் சுவையான தகவலொன்றைத் தருகிறது.[21] இக்கோயிலில் ஆவணித் திருநாள் திருவிழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அத்திருவிழாவின்

எட்டாம்நாள் இரவின் போது சோழப் பேரரசன் மூன்றாம் இராசராசன் கோயிலில் உள்ள இராசராசன் திருமண்டபத்தில் அமர்ந்து உறவாக்கின் தலைக்கோலி என்னும் ஆடல்மகள் பாடிய அகமார்க்கம் என்னும் பாடல் வகையைக் கேட்டு மகிழ்ந்தான். அப்பெருமாட்டியின் ஆடல், பாடல்களால் மனம் நிறைந்த மன்னன், மணலி என்னும் பகுதியில் அறுபது வேலி நிலத்தை அவளுக்குக் கொடையாகத் தந்ததுடன், அந் நிலப்பகுதியமைந்த சிற்றூருக்கு 'உறவாக்கின நல்லூர்' என்று அவள் பெயரையே சூட்டி மகிழ்ந்தான். இச்செய்தி, தலைக்கோலியருக்குச் சோழர் அளித்த பெருமைகளைத் தெளிவாய்ப் புலப்படுத்துகிறது.

சிவகங்கைக் காளையார் கோயில் பகுதியிலுள்ள காளீசுவரர் கோயிலில் காணப்படும் கோமாறன் திரிபுவனச் சக்கரவர்த்தி குலசேகர தேவனின் நாற்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு நக்கன் செய்யாளான காலிங்கராயத் தலைக்கோலியை அடையாளம் காட்டுவதுடன், அப் பெருமாட்டிக்கு இறையிலியாக நிலக்கொடை தரப்பட்டதையும் கூறு கிறது. இதே கல்வெட்டால் நக்கன் நாச்சியாரான தனியாணையிட்ட பெருமாள் தலைக்கோலியும் நமக்கு அறிமுகமாகிறார்.[23]

ஆடிப் பெருமை சேர்த்த அழகு மங்கையருக்கு ஆசானாய் இருந்த நட்டுவப் பெருமக்களும், அவரவர் தகுதிக்கும், திறமைக்கும் ஏற்பப் பட்டங்கள் பெற்றனர். திருக்கடவூர் திருக்கோயிலில், கலாவினோத நிருத்தப் பேரரையன் என்னும் பட்டத்தையுடைய பாரசிவன் பொன் னன் தலைக்கோல் ஆசானாக இருந்தார். ஆடற்கலையில் அவருடைய சேவைகளைப் பாராட்டி அவருக்கு நட்டுவ நிலையாக நிலம் கொடை யளிக்கப்பட்டது.[24] இப்படிச் சோழர்களால் போற்றிக் கொண்டாடப் பட்ட ஆடற்கலையின் அடையாளக் கோல் கி. பி. பத்தாம் நூற்றாண் டில் பெருமையின் சிகரத்தில் ஏற்றி வைக்கப்பட்டது. கல்லில் எழுத்து களாய் வடித்தும், ஆடல் மகளிருக்கு சிறப்புப் பட்டமாய்த் தந்தும் தலைக்கோலைப் பெருமைப்படுத்திய சோழவேந்தர்கள், ஆடல் அரசனான ஆடவல்லானின் கையிலும் அந்தக் கோலைத் தந்து அழி யாப் புகழைத் தேடிக் கொண்டார்கள்.

> "தத்துவம் ஆடச் சதாசிவம் தானாடச்
> சித்தமும் ஆடச் சிவசக்தி தானாட
> வைத்த சராசரம் ஆட மறையாட
> அத்தனும் ஆடினான் ஆனந்தக் கூத்தன்றே"[25]

என்ற திருமூலரின் திருக்கூத்துத் தரிசனம் இறைவன் ஆடும் ஆனந்தக் கூத்தின் அடிப்படைத் தத்துவங்களை. அதில் மறைந்துள்ள ஆயிரமா யிரம் அழகுகளைத் தெளிவாய் எடுத்து வைக்கிறது. உலகையே மயக் கும் ஒல்காப் பேரெழில் கொண்ட இந்த ஆனந்தத் தாண்டவத்தையே

ஆடவல்லான் படிமங்களாய்த் தமிழகத்துச் சைவத் திருக்கோயில்களின் அம்பலங்களில் வார்த்து வைத்திருக்கிறார்கள். காண்பவர் நெஞ்சைக் கனிய வைக்கும் கொள்ளைப் பேரழகுடன், அம்மை அருகிலிருந்து பார்க்க, உள்ளத்தை இளக்கும் புன்னகைப் பூத்து, இறைவன் ஆடும் அந்த அபிநயக் கூத்தில் தம்மையிழக்காதார் யாரிருக்க முடியும்! எங்கும் காணக்கிடக்கும் ஆனந்தக் கூத்து வடிவமே இப்படியென்றால், அதிசயிக்கத்தக்க கோலத்தில், நாட்டிய நூலும், ஆகமங்களும் விளக்க முடியாத புதுக்கவிதையாய், ஆடவல்லான் படிமங்களுக்கெல்லாம் பேரரசாய் விளங்கும் திருநல்லூர் மணவழகர் கோயில் ஆடவல்லானின் அற்புதத் தோற்றத்தை எப்படிப் போற்றுவது!

கி.பி. ஒன்பது அல்லது பத்தாம் நூற்றாண்டில் வார்க்கப்பட்டதாகக் கலையறிஞர்களால் கருதப்படும் இத்தெய்வத் திருமேனி ஈடற்ற எழிலும், இணையற்ற சிறப்பும் உடையது. ஆகமங்களின் தாண்டவ வரையறைகளிலும், பரதரின் கரணக் கோவைகளிலும் சிக்காமல், சிக்க வைக்க முயன்ற கலையறிஞர்களிடமும் சிறைப்பட்டு விடாமல் சிந்தனைச் சுடராய்ப் புத்தம் புதியதோர் ஆடல் தோற்றத்தில் பளிச்சிடுகிறார் பெருமான். ஆடல், இலக்கணக் கோடுகளுக்குள் முடிந்து விடுவதல்ல. அது கற்பனை நலமும் நுண்ணோக்குத் திறனும் கொண்ட கலைஞர்களிடம் நாளும் பொழுதும் புதிதாய்த் தோன்றிப் புதிதாய் வளரும் அற்புதக் கலை என்பதை உணர்த்துவதற்காகத்தானோ என்னவோ இப்படியொரு புதுக் கவிதையாய் இவரை வடித்திருக்கிறார் வார்ப்பறிஞர். அமர்ந்த நிலையில் உள்ள முயலகனின் தலைமீது வலக்காலை ஊன்றி இடக்காலைத் தூக்கிய திருவடியாய்ப் புரிந்து கொள்ள முடியாதவோர் ஆடல் அமைப்பில் வீசி, சின்னச் சிரிப்பும் சிருங்காரப் பார்வையுமாய் நிற்கும் இப் பெருமானின் திருக்கைகள் எட்டு. இவற்றுள் வலப் பின் கைகளில் மேலிருந்து கீழே துடியும், ஏடும், தலைக்கோலும் காணப்படுகின்றன. வல முன்கை, காக்கும் முத்திரையிலும் இட முன்கை வீசிய கையாய் வேழ முத்திரையிலும் அமைந்துள்ளன. இடப் பின்கைகளில் மேலிருந்து கீழே தீயகலும், மணியும், முத்தலைப் பாம்பும் உள்ளன. இந்த ஆடவல்லானை அதிசயப் பொருளாக்கி, வார்ப்புக் கலையின் வடிவழகுச் சாதனையாய்த் தூக்கி நிறுத்துவன இதன் புதுமையான ஆடல் தோற்றமும், இதன் வலக்கையொன்றிலுள்ள தலைக்கோலும்தான்.

எத்தனையோ கலையறிஞர்கள் இந்தக் கலை வடிவத்தைக் கட்டுரையாக்கியிருந்தும், இத்தலைக்கோலை அடையாளம் காணத் தவறி, இதைச் சூலமென்றும், பிரம்பென்றும் அம்பென்றும், பாசமென்றும் தவறாகக் குறித்திருக்கிறார்கள்.[26] இன்னும் சில அறிஞர்கள் இந்தக் குழப்பம் நமக்கெதற்கு என்பது போல், கைக்கருவிகளைப் பற்றிய

குறிப்புக்களே இன்றிக் கட்டுரைகளை முடித்திருக்கிறார்கள்.[27] தமிழகத்துத் திருக்கோயில்களில் எங்கும் காண முடியாத அதிசயமாய் விளங்கும் இத்தலைக்கோலின் வடிவம் இச்செப்புத் திருமேனியில் அற்புதமாய் அமைந்திருந்தும் இப்பிழை நேர்ந்துள்ளது. இறைவனின் கைகளில் காட்டப்பெறும் கருவிகளில் ஒன்றாய்த் தலைக்கோலைச் சிற்பச் செந்நூல் அடையாளம் காட்டுகிறது.[28] "பெரும் புகழ் கொண்டானும், பேரரசனும், போரில் புறமுதுகிட்டானுமாகிய பகையரசனுடைய வெண்கொற்றக் குடையைக் கவர்ந்து, கொணர்ந்து அதை ஏற்ற அளவில் நறுக்கி, கணுக்களின் நடுவாகிய இடங்களைப் பொன் தகட்டால் போர்த்தி, கணுக்கள் தோறும் நவமணி வடங்கள் சுற்றி அலங்கரித்து உருவாக்கப்படுவது தலைக்கோல்" என்னும் சிற்பச் செந்நூலின் வரிகளைப் படித்துவிட்டு நல்லூர் ஆடவல்லானின் வலத் திருக்கையில் இருக்கும் இத்தலைக்கோலைப் பார்க்கும் போது கற்பனைக்கு வரிவடிவம் கிடைக்கிறது. இவ்வார்ப்பின் மூலம் சோழர்கள் ஆடற்கலைக்கு அளித்த மதிப்பையும், தலைக்கோலுக்குத் தந்த தகுதியையும், அத்தனைக்கும் முதலான ஆடவல்லானின் திருக்கையில் ஆடற்கலைத் தெய்வமான சயந்தனும் அடக்கம் என்பதை அழகுபட விளக்கிவிட்ட நுணுக்கத்தையும் நம்மால் தெளிவாய்ப் புரிந்து கொள்ள முடிகிறது.

சிலப்பதிகாரத்தில் சித்தரிக்கப்படும் தலைக்கோல் ஏறத்தாழப் பதினான்கு நூற்றாண்டுகள் தமிழர்தம் கலைவாழ்வில் மங்காப் புகழுடன் வாழ்ந்து ஒளிர்ந்ததை நினைத்துப் பார்க்கும் போது, அவர்தம் கலையார்வமும், தலைக்கோலுக்கு அவர்கள் தந்த தனியிடமும் தன்னிகரற்ற சிறப்பும் நம்மை வியப்பிலாழ்த்துகின்றன. கல்வெட்டுகள் மறைந்தாலும், பனையோலை இலக்கியங்கள் அழிந்தாலும், தலைக்கோல் மறைந்து விடக்கூடாது என்ற ஆர்வத்தில் சோழநாட்டு வார்ப்புக் கலை வித்தகன் ஒருவன் எத்தனைக் கூர்த்த மதியும் சிந்தனைத் தெளிவும் கொண்டு அந்தத் தலைக்கோலை ஆடல் முன்னோனாம் ஆடவல்லானின் கைகளிலேயே தந்து அழியாப் புகழைத் தேடிக் கொண்டான் என்பதை எண்ணும்போது, மகிழ்வும் பெருமையும் நெஞ்சில் ஒன்றாய் நிறைகின்றன.

அடிக்குறிப்புகள்

1 சிலப்பதிகாரம், ந மு. வேங்கடசாமி நாட்டார் உரை, கழகப் பதிப்பு, சென்னை, 1959, பக். 139-140.
2 மேற்படி, பக். 48, வரி 118-120.
3 மேற்படி, பக். 84.
4 சிலப்பதிகாரம், டாக்டர். வே. சாமிநாதையர் உரை, தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, 1985, பக். 116.
5 மேற்படி, பக். 72, வரி 118-120.
6 சிலப்பதிகாரம், ந.மு. வேங்கடசாமி நாட்டார் உரை, பக். 83.
7 மேற்படி, பக். 83-84.
8 சிலப்பதிகாரம், டாக்டர். வே. சாமிநாதையர் உரை, பக். 117.
9 மேற்படி, பக். 76, வரி 158-161.
9A S. I. I. XXIII, P. 159.

10 அகநானூறு, ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரை, கழக வெளியீடு, சென்னை, 1943, பக். 205, பாடல் எண். 97, வரி 9-10.

11 S. I. I. VIII, 678.
12 ஆவணம், அக்டோபர், 1991, பக். 30-32.
12A S. I. I. XXIII, No. 249.
12B S. I. I. XXIII, No. 223.
13 S. I. I. V, 521.
14 Ibid, 520.

15 மயிலை சீனி. வேங்கடசாமி, தமிழர் வளர்த்த அழகுக் கலைகள், பாரி நிலையம், சென்னை, 1969, பக். 134. இச்செய்தியுள்ள கல்வெட்டை மைய அரசு வெளியிட்டுள்ள திருவையாறு தொடர்பான கல்வெட்டுத் தொகுதிகளிலோ, அறிக்கையிலோ காணமுடியவில்லை.

16 சு. இராசகோபால், திருவையாறு, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு, சென்னை, 1976, பக். 110, 119-120.

17 ARE 240, 242, 1932-33; S. I. I. VIII, 170.
18 ARE 383, 1921; 225, 1912.
19 ARE 172, 1923.
20 ARE 180, 1923.
21 ARE 183, 1923.
22 ARE 211, 1912.
23 S. I. I. VIII, 169.

24 ARE 255, 1925; கல்வெட்டறிக்கையில் தலைக்கோல் ஆசான் என்ற சொல் இல்லை. ஆனால் மயிலை சீனி வேங்கடசாமி தம் நூலில் இச்சொல்லைப் பெய்துள்ளார். தமிழர் வளர்த்த அழகுக் கலைகள், பக். 138.

25 திருமந்திரம் இரண்டாம் பகுதி, திருக்கூத்துத் தரிசனப்பகுதி, கழக வெளியீடு, 1980, பாடல் எண். 2743, பக், 1135.

26 தண்டபாணி தேசிகர், ஆடல்வல்லான், திருவாவடுதுறை ஆதீன வெளியீடு, 1967, பக். 130, 235.
மே சு. இராமசுவாமி, தமிழ் நாட்டுச் செப்புத் திருமேனிகள், தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத் துறை வெளியீடு, 1976, பக். 31.

27 C. Sivaramamurti, Nataraja in Art, Thought and Literature, National Museum, New Delhi, 1974, P. 202-203.
T. A. Gopinatha Rao, Elements of Hindu Iconography, Vol. II-Part I, Motilal Banarsidass, Madras, 1985, P.267-268

28 வை. கணபதி ஸ்தபதி, சிற்பச் செந்நூல், தொழில் நுட்பக் கல்வி, இயக்கக வெளியீடு, 1978, பக். 135.

# 30. திருமுருகன்பூண்டி கல்வெட்டும் ஆளுடை நம்பியும்

சூ. சுவாமிநாதன்

திருமுருகன்பூண்டி கோவை மாவட்டத்திலுள்ள அவினாசியிலிருந்து திருப்பூர் செல்லும் சாலையிலுள்ளது அது கொங்கேழ் சிவாலயத் தலங்களுள் ஒன்றாகக் கருதப்படுகிறது.[1] இக்கோயிலின் பழமையைச் சாற்றும் வண்ணம் பல கல்வெட்டுக்கள் உள்ளன.[2]

இத்தலம் சைவசமயக் குரவரான சுந்தரமூர்த்தி நாயனாரால் பாடப் பெற்றது.[3] அவரது தல யாத்திரையில் திருமுருகன்பூண்டி தல வழிபாடு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதனை அவர் பாடியருளிய திருமுருகன்பூண்டி பதிகத்தால் அறியலாம். அண்மையில்கருவறையின் தெற்கு, மேற்கு வடக்குச் சுவர்களின் கீழ்ப்பகுதியில் தொடர்ச்சியாக வரையப்பட்ட கல்வெட்டொன்று கண்டுபிடிக்கப்பட்டு படியெடுக்கப் பட்டது.[4] அது சுந்தரமூர்த்தி நாயனாருக்கு திருமுருகன்பூண்டியில் ஏற்பட்ட நிகழ்ச்சியைக் குறிப்பாகத் தெரிவிக்கின்றது. அவர் பாடிய தேவாரப் பதிகப் பாடல்களில் சுட்டப்பட்ட நிகழ்ச்சியை இக்கல்வெட்டு உறுதி செய்கின்றது. முதலில் கல்வெட்டைப் பார்ப்போம்.

1) ஸ்வஸ்திஸ்ரீ கோதேரிமெல்கொண்டார் ஆளுடையார் திருமுருகன் பூண்டி உடையார் கோயிலில் தேவகந்மிகளுக்கு நம்மோலை குடுத்தபடியாவது தடக்கி கடவுளுக்கு மேற்கும் ஏ . . . பட்ட பாறைக்கு வடக்கும் ஆளுடை நம்பியை திருமுருகன்பூண்டி ஆளுடையார் அடிச்சுப் பறிச்சுக் கொண்ட பெரிய பாதை . . . கு கிழக்கும் கேணிக்கு தெக்கம் இன்னா

2) ன் கெல்லைக்குட்பட்ட தறை ஆளுடைய திருமுருகன் [பூண்]டியாண்டார்க்கு குடுத்தோம் இத்தால் வந்த இறை புரவு சிற்றாயம் எலவை உகவை மந்றுபாடு தெண்டக்குற்றம் சுமை சு[ங்க]ம் சாரிகை தேந்படு . . . . . டு மீந்படுசுனை பொற்படு குட்டம் மற்றும் எற்பயற்பட்டனவும் இந்நாயநாற்கு உதகம் பண்ணிக் குடுத்தோம் உ[த்தம]சோழ தேவநேந் யிது செம்பிலும் சிலையிலும் வெட்டி

3) த யிப்படிக்கு செம்பியந் உத்திரமந்திரி எழுத்து.

கல்வெட்டு கூறும் செய்தி

இக்கல்வெட்டு திருமுருகன்பூண்டி கோயிலில் பணிபுரியும் அலுவலர்க்கு அரசன் அனுப்பிய ஆணையைப் பற்றியதாகும். அரசன் ஒரு நிலத்தை கோயிலுக்குத் தந்துள்ளான். இந்நிலம் தடக்கி கடவு என்ற

நிலத்துக்கு மேற்காகவும் பாறைக்கு வடக்காகவும் ஆளுடை நம்பியை திருமுருகன்பூண்டி நாயனார் வழிப்பறி செய்த பெரிய பாதைக்குக் கிழக்காகவும், கேணிக்குத் தெற்காகவும் அமைந்துள்ளது. இந்நிலத்தினால் வரும் இறை, புரவு, சிற்றாயம், எலவை, உகவை, மந்றுபாடு, தண்டக் குற்றம், சுமை சுங்கம், சாரிகை போன்ற வரிகளும் விலக்கப்பட்டு இறையிலி நிலமாக கொடுக்கப்பட்டுள்ளது. மேலும் இந்நிலத்திலுள்ள தேன்கூடு, மீன் வாழும் சுனை, பொன் கிடைக்கும் குட்டை மற்றும் இந்நிலத்திலிருந்து கிடைக்கும் அனைத்து ஆதாயங்களும் கோயிலுக்கே கொடுக்கப்பட்டுள்ளன. இதற்கு அரசு அலுவலர்களான உத்தமசோழ தேவனும், செம்பியந் உத்திரமந்திரியும் கையொப்பம் இட்டுள்ளனர்.

இக்கல்வெட்டு 'கோநேரிமேல்கொண்டாந்' என்று தொடங்குகிறது. இவ்வாறு தொடங்கும் கல்வெட்டுக்கள் அரசன் மற்றவர்க்கு அனுப்பும் ஆணையைத் தெரிவிக்கும் கல்வெட்டுக்களாக உள்ளன.[5] இதுவும் அரசனொருவன் திருமுருகன்பூண்டி உடையார் கோயிலில் பணிபுரியும் அலுவலர்க்குத் தான் அளித்துள்ள கொடையைத் தெரிவிக்கும் ஆணையாக அமைந்துள்ளது.

இவ்விதம் அரசன் தனதாணையை கோனேரிமேல்கொண்டான் என்ற பெயரில் வழங்கும் முறை கொங்கு நாட்டில் பன்னிரண்டாம் நூற்றாண்டிலிருந்துதான் ஏற்பட்டது.[6] இக்கோயிலின் மண்டபத்தின் தெற்குச் சுவரில் கொங்கு நாட்டு மன்னர் வீரராசேந்திர சோழனின் (கி.பி. 1206-1255) நாற்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று பொறிக்கப்பட்டுள்ளது.[7] இவ்விரண்டு கல்வெட்டுக்களின் எழுத்தமைதியும் ஒன்றாகவே உள்ளது. இரண்டாவது கல்வெட்டில் கூறப்பட்டிருக்கும் அரசகொடைக்குக் கையொப்பமிட்டவன் செம்பியந் உத்திரமந்திரி. இவ்வதிகாரியே நாம் இங்கு ஆராயும் கல்வெட்டிலும் கையொப்பமிட்டுள்ளான். கல்வெட்டின் எழுத்தமைதியும் பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தது. எனவே இக்கல்வெட்டு கி.பி. 1206-1255 வரை கொங்கு நாட்டை ஆண்ட வீரராசேந்திர சோழனுடையது என்று கூறலாம்.[8]

## கல்வெட்டின் சொல்லாட்சி

இக்கல்வெட்டில் சில சொல் விகற்பங்கள் உள்ளன. கொடையாக அளிக்கப்பட்ட நிலத்தின் எல்லைகளைக் குறிப்பிடும் போது கிழக்கும், தெற்கும் என்பவை முறையே கிழக்கம், தெக்கம் என்று எழுதப்பட்டுள்ளன. இரண்டாம் வரியில் இதனால் என்பதற்குப் பதிலாக இத்தால் என்று கூறப்பட்டுள்ளது. அதே வரியில் எப்பேர்ப்பட்டனவும் என்று எழுதுவதற்கு மாறாக ஏற்பயற்பட்டனவும் என்று எழுதப்பட்டுள்ளது.

நிலம் என்பதற்குப் பதிலாக 'தறை' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவை மக்களால் அன்றாட வாழ்வில் பயன்படுத்தப்பட்ட சொற்கள் என்று ஊகிக்கலாம்.

கல்வெட்டும் சுந்தரமூர்த்தி நாயனாரும்

ஒரு சமயம் சுந்தரமூர்த்தி நாயனார், சேரமான் பெருமாள் நாயனார் உவந்தளித்த பெரும் நிதிக்குவையை எடுத்துக் கொண்டு சேர நாட்டைக் கடந்து கொங்குநாட்டுத் திருத்தலமாகிய திருமுருகன்பூண்டி வழியாக வந்து கொண்டிருந்தார். அப்போது நம்பியூரார்க்குத் தாம் கொடுக்கும் பொன்னைத் தவிர பிறர்பாற் பொன் கொள்ளக் கூடாதென்று அறிவுறுத்தக் கருதிப் போலும் இறைவன் நிதியைக் கவர்தற் பொருட்டு பூதங்களை ஏவ அவை வேடர் வடிவாய்ச் சென்று நிதிக் குவியலைச் சுமந்து செல்லும் சுமையாட்களை வழி மறித்து அம்பினாலும் வேற்படைகளாலும் துன்புறுத்தி அவர்களிடமிருந்த பொருட்களையெல்லாம் கவர்ந்து கொள்கின்றன. பொருட்களைப் பறி கொடுத்த பணியாட்கள் நம்பியாரூரரிடம் சென்று அஞ்சி நிலையை எடுத்துரைத்தனர். இந்நிலையில் ஆளுடை நம்பியார் திருமுருகன் பூண்டியிலுள்ள திருக்கோயிலுட் சென்று திருப்பதிகம் பாடி இறைவனை இறைஞ்சுகின்றார்.[9]

"கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர் விரவலாமை சொல்லித்
திடுகு மொட்டெனக் குத்திக் கூறை கொண்டு ஆறலைக்குமிடம்
முடுகு நாறிய வடுகர் வாழ் முருகன் பூண்டி மாநகர் வாய்
இடுகு நுண்ணிடை மங்கை தன்னொடும் எத்துக்கிங்கிருந்தீர்
எம்பிரானிரே.

வில்லைக்காட்டி வெருட்டி வேடுவர் விரவலாமை சொல்லிக்
கல்லினால் எறிந்திட்டும் மோதியுங் கூறை கொள்ளுமிடம்
முல்லை தாது மணங்கமழ் முருகன்பூண்டி மாநகர் வாய்
எல்லை காப்பதொன்றில்லையாகில் நீர் எத்துக்கிங்கிருந்தீர்
எம்பிரானிரே."

என்று பத்துப் பாடல்களில் இறுதி தோறும் 'முருகன்பூண்டி மாநகர் வாய் . . . . . . எத்துக்கிருந்தீர் எம்பிரானிரே' என்று வினவுகிறார்.

இறைவனருளால், உடனே, முன் வழிமறித்துப் பொருள்களைக் கவர்ந்த வேடுவர்கள் அனைவரும் தாம் பறித்துக் கொண்டு சென்ற பொருள்களையெல்லாம் அத்திருக்கோயிலின் வாயிலிலேகொண்டுவந்து குவிக்கின்றனர். அவ்வரும் பொருள்களைக் கண்ணுற்ற நம்பியாரூரர் இறைவன் திருவருளை வியந்து அப்பொருள்களை முன்போற் பொதி

செய்து முன்னே எடுத்துச் செல்லும்படி கூறி அத்திருத்தலத்தினின்றும் புறப்பட்டு கொங்கு நாட்டைக் கடந்து திருவாரூர் செல்கின்றார்.

இந்நிகழ்ச்சி நாயனார் பாடிய பதிகத்தால் தெரிய வருகின்றது. இங்கு ஆராயப்படும் கல்வெட்டு, அளிக்கப்பட்ட நிலத்தின் எல்லைகளைக் குறிப்பிடும்போது 'ஆளுடை நம்பியை திருமுருகன்பூண்டி ஆளுடையார் அடிச்சுப் பறிச்சுக் கொண்ட பெரிய பாதை' என்று அந்நிகழ்ச்சியை உறுதி செய்கின்றது. இக்கோயிலின் பின்புறம், பைரவர் திருமுன் அருகே வேட்டுவப் பறி நடந்தஇடம் என்று ஒரு குழிஉள்ளது. அது பன்னெடுங் காலமாக அவ்விடத்திலுள்ளதாகப் பலரும் கூறுகின்றனர். அதுவே அவ்விடமானால் இக்கல்வெட்டில் அரசனால் கொடையளிக்கப்பட்ட நிலம், கோயிலுக்கு சற்றே பின்புறத்தில் இருந்திருக்க வேண்டும். தற்போது உள்ள தீர்த்தக் கிணறே, இக்கல்வெட்டில் சுட்டப்பட்ட கேணியாக இருந்திருக்க வேண்டும்.

## அடிக்குறிப்புகள்

1 கொங்கு மண்டல சதகங்கள், பக். 10-16.

2 SII, V, Nos. 247-55; ARE 1915, Nos. 87-134.

3 ந. சுப்பு ரெட்டியார், தம்பிரான் தோழர் (1985), ப. 173.

4 இது 1991-ல் படியெடுக்கப்பட்டது. விரைவில் கல்வெட்டு ஆண்டறிக்கையில் சேர்க்கப்படும்.

5 R. Nagaswami, Tiruttani and Velanjeri Copper Plates (1979), p. 29.

6 க. அ. புவனேசுவரி, அன்னூர் வரலாறு (1987), பக். 58.

7 SII. V, No. 247.

8 க. அ. புவனேசுவரி, மேற்படி, ப. 57.

9 தேவாரம் (ஸ்ரீவைகுண்டம், 1958), 7ஆம் திருமுறை, தலமுறை ப. 205.

# 31. கருந்திட்டைக்குடி மகாதேவர்

இரா. லலிதாம்பாள், அர. இராசேந்திர தேவன், மு. வீராசாமி, மு. ம. கோபாலன்,

அர. அகிலா, மு. நளினி, இரா.கலைக்கோவன்.

இன்றைய தஞ்சையின் ஒரு பகுதியாய் விளங்கும் கருந்திட்டைக் குடிக்குக் கரந்தை என்ற செல்லப்பெயரும் உண்டு. இங்குதான் வசிஷ்டேசுவரர் கோயில் என்று மக்களாலும், கருந்திட்டைக்குடி மகாதேவர் கோயில் என்று கல்வெட்டுகளாலும் அழைக்கப்படும் சோழர் காலத்துக் கோயிலொன்று பார்வைக்குப் படாமல் மறைந்துள்ளது.

இத்திருக்கோயிலின் மூன்று வாயில்களுள் ஒன்று கிழக்குத் திசையில் குளத்தை நோக்கி அமைந்துள்ளது. மற்றொன்று கரந்தை மக்கள் வந்து போக வாய்ப்பாகத் தெற்கு நோக்கிய கோபுர வாயிலாய் உள்ளது. பிற்காலத்தில் ஏற்பட்ட மற்றொரு வாயில் மேற்கு நோக்கி அமைந்துள்ளது. நுழைவாயில்களை ஒட்டியுள்ள மகாமண்டபம் பிற்காலத்துத் திருப்பணியாகும். இதன் தரையில் ஒருவர் விழுந்து வணங்குவது போன்ற சிற்பமும் அதையொட்டி ஒரு கல்வெட்டும் உள்ளன. கி.பி. 1842-ல் மாரியப்பா வாண்டையார் மகனார் குப்பமுத்து என்பார் கோரிக்கை யாசகம் செய்து மக்கள் உதவியால் பெரிய திருச்சுற்றை எழுப்பியதாக இக்கல்வெட்டு தகவல் தருகிறது.[1] இங்குள்ள உத்தரமொன்றில் காணப்படும் சிதைந்த கல்வெட்டொன்று அம்மன் திருமுன்னுக்கு எதிரிலுள்ள கோபுரச் சுவர், படி முதலானவற்றை ஆறுமுகக் கொத்தனாரின் மனைவியார் எடுத்ததாகக் கூறுகிறது.[2]

நாயக்கருடைய வண்டிக்கூடு கூரையமைப்புடன் காட்சிதரும் இம் மகா மண்டபத்தின் வடபுறம், தெற்குப் பார்த்த அம்மன் திருமுன் அமைந்துள்ளது. உள் மண்டபமும் கருவறையுமாய் அமைந்திருக்கும் இத் திருமுன்னில் பெரியநாயகி என்ற திருப்பெயருடன் நாற்கர நாயகியாய் அம்மன் எழுந்தருளியுள்ளார்.

உள் மண்டப வாயிலைப் பக்கத்திற்கொருவராக வாயிற்காப்போர் காக்கின்றனர். நான்கு தூண்களுடன் கூடிய இம்மண்டபத்தில் இக் கோயிலின் செப்புத் திருமேனிகள் வைக்கப்பட்டுள்ளன. தூண்கள் சற்று வித்தியாசமான அமைப்புடன் பலகையில்லாமல் வெட்டுப் போதிகையுடன் காணப்படுகின்றன. முதலிரு தூண்களின் மேல் செல்லும் உத்தரத்திலிருந்து கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டால் ஏற்றடிகள் என்பார் இந்த உத்தரத்தை அளித்த செய்தி கிடைத்தது.[3] உள் மண்டபத்தை அடுத்து மிகச் சிறிய இடை நாழிகையும் அதைத் தொடர்ந்து கருவறையும் உள்ளன. கருவறை வாயிலைக் காக்க

வாயிற்காப்போர் இல்லை. கருவறையில் இறைவன் கருணாசாமி என்ற பெயரில் கல்வெட்டுப் பெயர் மறந்த நிலையில், குடமுழுக்குக் கண்ட மகிழ்வோடு எழுந்தருளியிருந்தார்.

மையக்கோயிலைச் சுற்றி அமைந்துள்ள திருச்சுற்று மாளிகை பிற் காலத்து அமைப்பாகும். மகாமண்டபத்தையும், திருச்சுற்று மாளிகை யையும் நீக்கிவிட்டால் எஞ்சி நிற்கும் கருவறையும், உள்மண்டபமும் சோழர்களின் சிற்பக் களஞ்சியங்களாய் விளங்குகின்றன.

உள்மண்டபம், கருவறை இவற்றின் புறச்சுவர்களுக்குத் தேவ கோட்டங்களும், கோட்டப் பஞ்சரங்களும் அழகூட்டுகின்றன. ஒவ் வொரு புறச்சுவரிலும் மையத்தில் ஒரு தேவகோட்டமும், அதன் இரு புறங்களிலும் பக்கத்திற்கொரு கோட்டப் பஞ்சரமுமாக அமைந்துள்ளன. புறச்சுவரின் தாங்குதள வடிப்பு தேவகோட்டங்களுக்குக் கீழே ஓரமைப் பிலும், கோட்டப் பஞ்சரங்களுக்குக் கீழே வேறோர் அமைப்பிலுமாய்க் காட்டப்பட்டுள்ளன. பல வரிகளால் அடுக்கப்பட்டுள்ள இத் தாங்குதளம் கட்டடக்கலை பயிலும் மாணவர்கட்குப் புதையலாய் உதவும். தேவ கோட்டங்களின் மேலுள்ள மகரதோரண அமைப்பு சிற்பச் செறிவின்றிக் காட்டப்பட்டுள்ளது.

கோட்டப் பஞ்சரங்களுக்கும், தேவகோட்டங்களுக்கும் இடையில் அமைந்துள்ள சுவர்ப் பகுதிகளிலும், தேவகோட்டங்களிலும் சிற்பங்கள் காணப்படுகின்றன. இவற்றுள் சில பிற்காலத்தில் செதுக்கி இணைக்கப் பட்டவை. உள் மண்டபத்தின் தென்புறக் கோட்டத்தில் உள்ள ஆனந்தத் தாண்டவக் கோலம் அரியதொரு திருவுருவாகும். விரிசடைக் கற்றைகள் இருபுறமும் பறக்கத், தலையின் வலப்புறம் நெற்றிப் பட்டையை முடித்த முடிச்சு அழகுத் தொங்கலாய் அசைந்தாட, சடைப் புரிகள் நுனிகளில் சுருளமைப்புடன் குழல்களாய் அலைந்தாட, பூக்கள் பொலிந்த சென்னியும், புன்னகை மலர்ந்த திருமுகமுமாய் இறைவன் ஆடும் அழகை என்னென்பது!

தலை முகப்பில் மண்டையோடு. அதற்குமேல் அடுக்கிய வரிசை களில் கொக்கிறகு; இடப்புறம் ஊமத்தம்பூ, நெருஞ்சிப்பூ; நெற்றிக் கண்ணராய் வலச்செவி குண்டலமின்றி நீள் செவியாய் இருக்க இடச் செவியில் பனையோலைக் குண்டலம் பூண்டு, வல முன்கையை காக்கும் குறிப்பில் காட்டி, இட முன்கையை வேழமுத்திரையில் வலப்புறமாய் வீசி யிருக்கும் இந்த ஆடல் அழகரின் பின்னிரு கைகளில் துடியும், தீயும். மேற் கைகளில் ருத்திராக்கக் கங்கணம்; முன் கைகளில் பட்டை வளைகள். கழுத்தில் ருத்திராக்க மாலைகள். இடுப்பில் புலித்தோல் ஆடை. புள்ளிகள் பொலிந்த இச்சிற்றாடையை இடுப்புடன் பொருத்த, அளவான முடிச்சும் அழகான தொங்கலும் கொண்ட இடுப்புச்

சுற்றாடை. அதன் மடிப்புத் தொங்கல்கள் உடலின் இடப்புறம் நெகிழ்ந்த நிலையில். வலப்பாதம் பார்சுவமாய் முயலகன் மீதமைய, இடக்கால் தூக்கி உயர்த்திய நிலையில் ஆனந்தத் தாண்டவத்திற்கே உரிய அழகுக் கோலத்தில் இடப்புறமாய் வீசப்பட்டுள்ளது. முழங் காலுக்குக் கீழே சிதைக்கப்பட்டுள்ளபோதும் சிற்பத்தின் எழிலும் பெருமையும் குன்றவில்லை. ஆட்ட சுழற்சியில் உடல் இலேசாய் வலப் புறம் திரும்பியிருக்க, அருள்சிந்தும் முகமோ நேர்நோக்கி உள்ளது. இலேசாய்ப் பூத்து நிற்கும் அந்த இளநகையும், அதன் விளைவாய் மெல்லக் கனிந்திருக்கும் இதழ்களும், அந்த நகைக்கேற்ப அருளோடு மின்னிடும் கண்களும் . . . அடேயப்பா! உளிகள் பாறைகளில் மோதும் போது இப்படிக் கூடவா உயிர்ப்புகள் உதயமாகும்!

இந்த ஆனந்தத் தாண்டவரின் இருபுறத்தும் அதே சிற்ப அமை வுக்குள் உடன் கூட்ட வடிவங்கள் பல உள்ளன. இறைவனின் வலப் புறம் ஆறு வடிவங்கள். மேலே முழவு வாசிக்கும் நந்தி. அமர்ந்த அதன் கால் கீழ், இலைத் தாளங்களுடன் பூத கணமொன்று. பருத்த உடலும் புடைத்த விழிகளுமாய் உதட்டைப் பிதுக்கியபடி, முகத்தை வலப்புறம் திருப்பி அமர்ந்தபடி ஆனந்தத் தாண்டவத்திற்குத் தாள லயம் கூட்டும் இதன் வயிற்றில் உரசும் அளவிற்குப் பெரியதாய் காட் டப்பட்டிருக்கும் ஆண் வடிவம் ஒன்று குடமுழா வாசிக்கிறது. இரண்டு கால்களையும் மறித்துப்போட்டு, கால்களுக்கு இடையில் முழவைப் பிடித்தபடி வலக்கையால் இயக்கியும், இடக்கையால் இறைவனின் ஆடலைப் போற்றியும் இசையெழுப்பி மகிழும் இந்த வடிவத்தின் வடிப்புக் கூர்மை சொல்லுந்தரமன்று. இதன் வலக்காலுக்குக் கீழே இடப்புறம் சாய்ந்து அமர்ந்த நிலையில் குள்ளச் சிறு பூதமொன்று குழல் வாசிக்கிறது. இரு கைகளாலும் குழலைப் பற்றியபடி, தடித்த முப்புரி நூலும், புடைத்த விழிகளும், நெறித்த புருவங்களுமாய் மிக லயித்து இக்கணம் இசையெழுப்பும் நயத்தை இரசித்து ஆடுகிறார் காளிதேவி. ஆம்! இக் குழல் கணத்தின் தலைக்கு மேலே அம்மையின் ஆடல்தான். இடப் பாதத்தைப் பார்சுவத்திலும், வலப் பாதத்தை அக்ரதலசஞ்சாரத்திலும் (அமைத்து முன்னிரு கைகளைக் காக்கும் குறிப்பிலும், அர்த்தரேசிதத்திலும் காட்டிப், பின் கைகளில் தலை யோடும், முத்தலை ஈட்டியும் தாங்கித், தலையோட்டு முப்புரி நூலுடன், அழகிய கச்சு அளவான மார்பகங்களின் அசைவால் இலே சாய் நெகிழ, இறைவனுடன் போட்டி போட்டுக்கொண்டு, ஆடற் கலையின் அனைத்துப் பரிமாணங்களையும் அளவிட்டுக் காட்டிட முய லும் அம்மையின் தோற்றப் பொலிவுக்கு இணையே இல்லை. இவரின் இடப்புறத்தே,சிவபெருமானின் ஊன்றிய வலக் காலருகே,இரு கைகளி லும் பிடித்த சங்கை, வாயில் வைத்து ஊதியவாறு குள்ளச் சிறு பூத மொன்று குதூகலித்து மகிழ்கிறது.

இறைவனின் இடப்புறம் இரண்டு வடிவங்கள். கீழே உள்ள வடிவம் காரைக்கால் அம்மையார். வலக்கையைத் தலைக்கு மேல் உயர்த்திப் போற்றும் மெய்ப்பாட்டில் காட்டி, இடக்கையை வலத் தொடையருகே வியப்பு முத்திரையில் தாழ்த்தி, சுடர் முடியும், பனை யோலைக் குண்டலமும் புடைத்த விழிகளும், திரங்கித் தாழ்ந்த வற்றிய மார்பகங்களுமாய்க் காட்சியளிக்கும் அம்மையின் உடலில் எலும்புகளை யும், நரம்புகளையும் தவிர வேறில்லை. மெலிந்து நலிந்த தசைநார் கள் உடல் முழுவதும் காட்டப்பட்டுள்ளபோதும், கால்களில் அவை மிகத் தெளிவாகச் செதுக்கப்பட்டுள்ளன. பெரிய நாசியும், மூப்படைந்த பேய் முகமுமாய்க் கால்களை மடித்து முழங்கால்கள் தரையில் பட அமர்ந் துள்ள கோலம், 'அப்பா, உன் திருவடிக் கீழிருந்து எந்நாளும் உன் ஆடல் பார்க்கும் பெரும்பேறே வேண்டுவது' என்ற அவரின் ஏக்கம் நிறைந்த வேண்டுகோளை நிறைவேற்றி வைத்தது போல் உள்ளது.

இவருக்கு மேலே மூன்று கால்களும் மூன்று கைகளுமாய்ப் பிருங்கி முனிவர். எலும்பும் நரம்புமாய் இருக்கும் இவரும் ஆடுகிறார். விரிசடையுடன் உள்ள தலை இடப்புறம் திரும்பிக் கீழே உள்ள காரைக் கால் அம்மையைப் பார்க்கும் பாவனையில் இலேசாய்க் குனிந்துள்ளது. முன் கைகள் காக்கும் குறிப்பிலும் வேழ முத்திரையிலும் உள்ளன. இடப் பின்கை அர்த்தரேசிதத்தில் உள்ளது. வலப்புறத்தில் பின்கை அமைப்பே இல்லை. வல, இடப் பாதங்களைப் பார்சுவமாய்த் தரை யில் ஊன்றியிருக்கும் இவ்வடிவத்தின் இடைக்கால், அதாவது மூன்றா வது கால் உயர்த்திய நிலையில் வலப்புறமாய் வீசப்பட்டுள்ளது. ஆட வல்லானைப் போல ஆனந்தத் தாண்டவம் காட்டும் பிருங்கி முனிவரின் வரலாறு அதிசயமானது. இறைவனை மட்டுமே வழிபட்டு சக்தியை நீக்கிய காரணத்தால், அம்பிகையின் சினத்துக்கு ஆளாகித் தசைகளை யும், இரத்தத்தையும் இழந்து நடக்கவியலாது தத்தளித்தபோது இறை வனால் ஒரு கோலும், கூடுதலாய் ஒரு காலும் தரப்பெற்றவர்.[4] இந்த முக்கால் முனிவர் இரு கையினர்தான் என்றாலும் இங்கே அவர் கொண்ட கோலும் கையாகக் காட்டப்பட்டுள்ளது.

ஆனந்தத் தாண்டவச் சிற்பத்தின் இருபுறமும் சுவரில் பிற்காலத் தில் இணைக்கப் பெற்ற அப்பர், சம்பந்தர் திருவடிவங்கள் காட்சியளிக் கின்றன. கோவண ஆடையும் குடுமித் தலையுமாய்க் காட்சியளிக்கும் இவ்வடிவங்களுள் சம்பந்தரின் கையில் தாளம். அப்பரின் கையில் உழவாரப்படை.

உள் மண்டபத்தின் வடபுறத்தே தேவகோட்டத்தில் கொற்றவை யும், சுவரில் பிச்சைத் தேவரும், முருகனும் இடம் பெற்றுள்ளனர். கொற்றவை சோழர் காலச் சிற்பம். கருவறையின் தென்புறத் தேவ

கோட்டத்தில் ஆலமர் கடவுள். அவருக்கு வலப்புறம் கோயிலார் வசிஷ்டர் என்றழைக்கும் அகத்தியர். இடப்புறம் பிள்ளையார். கரண்ட மகுடத்துடன் காட்சியளிக்கும் பிள்ளையாருக்கு வலக்கொம்பில்லை. இடக்கொம்பு உடைந்துள்ளது. இவரின் தலைக்குமேல் குடையும், பக்கங்களில் கவரிகளும் காட்டப்பட்டுள்ளன. அகத்தியர் வசிஷ்டரென்ற பெயருடன் சந்தனக் காப்பெல்லாம் பெற்ற மகிழ்ச்சி முறுவலோடு இங்கு வீற்றிருக்கிறார். செம்பியன்மாதேவி காலத்துப் புறச்சுவர் சிற்பப் பட்டியலில் புதிதாய் இடம் பெற்ற அகத்தியர், அம்மை கட்டிய பல கோயில்களில் இடம் பெற்றுள்ளார். அங்கெல்லாம் கிடைக்காத அமோக மரியாதைகள், பெயர் மாற்றம் பெற்றுவிட்ட காரணத்தால் கருந்திட்டைக்குடியில் கிடைக்கும் அதிசயம் கண்டு அவரே முறுவலித்தபடி மகிழ்வமர்வில், அக்கமாலையும் குண்டிகையும் கைகளில் ஏந்தித் தாமரைத் தளத்தில் அமர்ந்திருக்கிறார். பிள்ளையாரின் பழமையைத் தென் திசைக் கடவுள் சிற்பத்தில் பார்க்க முடியவில்லை. வீர அமர்வில் மலைமீது அமர்ந்துள்ள இவரது காலின் கீழுள்ள வடிவமே இச்சிற்பம் பிற்காலத்தது என்பதைத் தெளிவாய்ச் சுட்டுகிறது.

கருவறையின் மேற்குக் கோட்டத்தில் லிங்கோத்பவர். கோட்டத்திற்குள்ளேயே நான்முகனும் திருமாலும் காட்டப்பட்டுள்ளனர். லிங்கோத்பவரின் வலப்புறம் கங்காளரும், இடப்புறத்தே அம்மையப்பரும் உள்ளனர். இங்குள்ள அம்மையப்பர் சற்று அதிசயமானவர். பிற கோயில்களில் எல்லாம் சிவபெருமான் தம் இடப் பாகத்தையே தேவிக்குத் தந்திருக்கும்போது இக்கோயிலில் வலப்பாகத்தைத் தந்திருப்பது தனிச்சிறப்புதானே.[5] பொதுவாக இடப்பாகத்தையே அம்மைக்கு வழங்கும் நெறியிலிருந்து மாறுபட்டு வலப்புகுதியைத் தந்திருக்கும் சிற்பியின் நோக்கம் ஆய்வுக்குரிய ஒன்றாகும்.

பின் கைகளில் பாம்பும், உடுக்கையும் கொண்டு, வல முன்கையை இடுப்பருகே வைத்தபடி, இடக்கையில் பிணமேந்திய கங்காளத்துடன் காட்சியளிக்கும் கங்காள தேவரின் சடாமகுடத்தில் வழக்கமான தலையணிகள் சிறப்புக் குன்றாமல் சேர்க்கப்பட்டுள்ளன. கங்காளத் தண்டில் செருகப்பட்டிருக்கும் வடிவம் நின்ற நிலையில் இரண்டு கைகளையும் அடிவயிற்றருகே கோத்தபடி உயிர்ப்பிழந்துள்ளது.

கருவறையின் வடபுறக் கோட்டத்தில் நான்முகன். அவருக்கு வலப்புறம் வீணாதரர். இடப்புறம் கங்காதரர். கங்காதரர் தம் இடக் கைகள் இரண்டாலும் உமையைத் தழுவியபடி கங்கையின் இறக்கத்திற்குக் காரணம் கூறுவதுபோல் பார்க்கிறார். வல முன்கை கங்கையைச் சடையின் புரிகளில் ஏற்கிறது. கங்காதரரின் வலப்புறம் பகீரதனின்

தவக்கோலம். உயர்த்தி மடித்த இடக்காலின் பாதம் வலத்தொடையின் மேற்பட இரு கைகளையும் தலைக்கு மேல் தூக்கியபடி கடுந்தவம் செய்யும் பகீரதனைக் கங்காதரர் சிற்பத்திலேயே இணைந்த நிலையில் பார்ப்பது மிகவும் அருமையாகும்.

கருவறையும் உள்மண்டபமும் கூடும் இடத்தில் அமைந்துள்ள சிறிய தொரு இடைநாழிகையின் புறச்சுவரில் தென்புறம் பிச்சைத்தேவரும், வடபுறம் காலாரிமூர்த்தியும் இடம் பெற்றுள்ளனர். இந்தப் பிச்சைத் தேவர் சோழர் கலைத்திறனுக்கோர் சான்றாய் மிளிர்பவர். இவரது வலக்கை மானுக்குப் புல் தரப் பின் கைகளில் கவரியும், உடுக்கையும். இட முன்கையில் தலையோடு. எழும்பிக் குதித்துப் புல்லைப் பெறும் மான் உடல் நிறையப் புள்ளிகளும், அழகிய இரு கொம்புகளும் பெற்று உயிர்ப்புடன் காணப்படுகிறது. இடுப்பாடை அரையாடையாய் அமைய அதன்மேல் பாம்பொன்று இடுப்புப் பட்டை போல் சுற்றியுள் ளது. படமெடுத்த நிலையில் அதன் தலைப்பகுதி பக்கத்தில் நிற்கும் முனி பத்தினியை நோக்கித் திரும்பியுள்ளது.

பிச்சைத் தேவருக்கு இடப்புறம் கீழே இரு செவிகளிலும் பனையோ லைக் குண்டலங்கள் குலுங்கப் பூதகணமொன்று தலையில் பெரிய பாத்திரமொன்றைச் சுமந்தபடி, கழுத்தில் கண்டிகையும், இடுப்பில் அழகாய் மடித்துக்கட்டிய அரையாடையுமாய் நிற்கிறது. அதன் வயிற் றில் புலிமுகம் காட்டப்பட்டுள்ளது. பூதத்தின் இடப்புறம் முனிபத்தினி யொருவர். அடுக்களையிலிருந்து அப்படியே வந்துவிட்டதால் கையில் கரண்டி. பிச்சைத் தேவரின் அழகில் மயங்கியதால் உடலில் ஏற்பட்ட உணர்வுகளின் ஊட்டம் இடையாடையை நெகிழ்விக்க, அதை இறங்க விடாமல் பிடித்தபடி இடக்கை. முகத்திலோ ஆசையின் தவிப்பு; நாணத்தின் தடுப்பு. இதற்கெல்லாம் காரணரான பிச்சைத் தேவ ரின் பார்வையோ இந்தப் பெண்ணை நோக்கியே அமைந்துள்ளது.

தென்புறத்தில் உள்மண்டபப் புறச்சுவர் தூணொன்றில் சிவ லிங்கத்தை ஒருவர் வழிபடுவதுபோல் சிற்றுருவச் சிற்பமொன்று காணப் படுகிறது. நல்ல வேளையாக இதிலுள்ள ஆண் வடிவத்தை இதுவரை யாரும் எந்த அரசராகவும் அடையாளம் கண்டு முடிசூட்டி முதல் மரியாதை செய்துவிடவில்லை. உருவத் திருமேனிகளை விருப்பத்திற் குரியவர்களாய் ஊகம் செய்துகொண்டு வரலாறாக்க முயற்சிக்கும் திருப்பணியிலிருந்து இந்தச் சிற்பம் தப்பியுள்ளது.

கருவறையின் மேல், கழுத்துப் பகுதியும், வேசர சிகரமும், உச்சிக் குடமும் அமைந்து இதை ஒருதள விமான அமைப்பாகக் காட்டு கின்றன. பெருநாசிகளில் கிழக்கில் முருகனும், தென்புறம் ஆலமர் அண்ணலும், வடக்கில் நான்முகனும், மேற்கில் விஷ்ணுவும் அமர்ந்

துள்ளனர். ஒவ்வொரு பெருநாசியையும் அடுத்துத் திசைக்காவலர்கள் இருவர் காட்டப்பட்டுள்ளனர். உள் மண்டபக் கூரைமுகப்பின் தென் புறம் உடன் கூட்டத் தெய்வங்களுடன் ஊர்த்வ தாண்டவர் ஆடல் நிகழ்த்துகிறார். விஷ்ணு மத்தளம் முழக்க, முருகன் குழலிசைக்க, கலைமகள் வீணைவாசிக்க, நந்தி தொழுதிருக்க, வியாக்கிரபாகர், பிருங்கி, பதஞ்சலி முனிவர்கள் உடனிருக்கக் காளியும் சிவனும் ஆடற் போட்டியில் திளைத்துள்ளனர். வடபுற முகப்பில் மணவழகர், தழுவக் குழைந்தவர், யானையை அழித்தவர், ஒரே திருவடியர் எனப் பலத் திருமேனிகள்.

இக்கோயிலின் பல பகுதிகளில் இருந்து மைய அரசின் கல்வெட்டுத் துறை பத்துக் கல்வெட்டுகளைப் படியெடுத்துப் பதிப்பித்துள்ளது.[6] மூன்று கல்வெட்டுகளை இக்கோயில் பற்றிய தம் கட்டுரையில் திரு. ஜே. எம். சோமசுந்தரம் அவர்கள் பதிப்பித்துள்ளார்.[7] இக்கோயிலில் கள ஆய்வு மேற்கொண்ட டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற் றாய்வு மையம் ஏழு புதிய கல்வெட்டுகளைக் கண்டறிந்து படியெடுத் துள்ளது.[8] இவற்றுள் மூன்று கல்வெட்டுகள் மிக முக்கியமானவை. இம் மூன்றனுள் ஒன்று இக்கோயிலின் வரலாற்றையே நிர்ணயிக்கவல்லது.

இக்கல்வெட்டுகள் கரந்தைப் பகுதியைக் கருந்திட்டைக்குடி என்றும் கருவிட்டக்குடி என்றும் அழைக்கின்றன. அப்பரது அடை வுத் திருத்தாண்டகம் கருந்திட்டைக்குடியை வைப்புத் தலங்களுள் ஒன்றாய்க் குறிக்கிறது.[9] இங்குக் கிடைத்திருக்கும் கல்வெட்டுகளுள் காலத்தால் பழமையானது பரகேசரிவர்மனின் மூன்றாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டாகும். இதை இரண்டாம் ஆட்சியாண்டாகக் கல்வெட்டுத் தொகுதி தவறாகக் குறித்துள்ளது.[10]

மைய அரசின் கல்வெட்டுத் துறையினர் இக்கோயில் சார்ந்த மூன்று கல்வெட்டுகளைப் பாதியளவிலேயே படியெடுத்துப் பதிப்பித் துள்ளனர்.[11] அவற்றின் தொடர்ச்சி அருகிலேயே இருந்தும் தெரிந்தோ தெரியாமலோ படியெடுக்காமல் விட்டதுடன், இக்கல்வெட்டுகளுள் ஒன்று அரைகுறையாக இருப்பதாகவும், மற்றொன்று சிதைந்துள்ள தாகவும் அறிக்கையில் எழுதியிருக்கின்றனர்.[12]

கரந்தைக் கோயிலில் இருந்து கிடைத்திருக்கும் இருபது கல் வெட்டுகளும் பல அரிய செய்திகளை நம்முடன் பகிர்ந்து கொள்கின்றன. அரசியல், கோயிலாட்சி, சமுதாயம் போன்ற பல்வேறு துறைகள் சார்ந்த வரலாற்றுத் தகவல்களை இக்கல்வெட்டுகள் வழங்கியுள்ளன.

### அரசியல்

பரகேசரிவர்மனின் கல்வெட்டுகளில் கரந்தை, தஞ்சாவூர்க் கூற்றத் துத் தஞ்சாவூர் புறம்படி கருந்திட்டைக்குடி என்று குறிக்கப்படுகிறது.[13]

முதலாம் இராசராசனின் பதினேழாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு இப் பகுதியை நித்த விநோத வளநாட்டுத் தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூர் புறம்படி வடவாற்றின் வடகரை கருந்திட்டைக்குடி என்று அழைக் கிறது.[14] இரண்டாம் இராசாதிராசனின் ஏழாம் ஆட்சியாண்டுக் கல் வெட்டில் பாண்டிகுலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூர் கருந்திட்டைக்குடியான சுங்கந்தவிர்ந்த சோழநல்லூர் என்று கரந்தை சுட்டப்படுகிறது.[15] சுங்கம் தவிர்ந்த சோழன் என்பது முதலாம் குலோத்துங்கனின் பெருமைக்குரிய சிறப்புப் பெயர்களுள் ஒன்றாகும். கரந்தை இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் இச் சிறப்புப் பெயரால் அறியப்பட்டதென்பது புதிய செய்தியாகும்.

இக்கல்வெட்டுகளின் வாயிலாக நித்த விநோத வளநாட்டு ஆவூர்க் கூற்றத்துப் பிரமதேயமான பெராலத்தூரில் ஒரு சபை இருந்ததென்ப தும்,[16] அதே வளநாட்டைச் சேர்ந்த நல்லூர் நாட்டுப் பிரமதேயமான இராசகேசரி சதுர்வேதிமங்கலத்தில் ஒரு மகாசபை இருந்ததென்பதும் தெரிவருகின்றன.[17]

பல அரசு அலுவலர்கள் இக்கல்வெட்டுகளால் அறிமுகமா கின்றனர். முதலாம் இராசேந்திரன் காலத்தில் கருந்திட்டைக்குடி ஊரவையின் நடுவராக இருந்தவர் நானூற்றுவன் ஸ்ரீ கிருஷ்ணன் கற்பகப் பிரியன்.[18] இவர் பெயர் இராசேந்திரனின் மற்றொரு கல் வெட்டிலும் கிடைக்கிறது.[19] முதலாம் இராசராசனின் பதினேழாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, இராசகேசரி சதுர்வேதிமங்கலத்து நடுவர்களாய்த் திருவேங்கடவன் ஆயர் கொழுந்து, வேங்கடவன் அரங்கன், வில்லில் கிடந்தானான மங்கலாச்சன், அரங்கம் பூதியான மங்கலோத்தமன், அரங்கம் உலகனான சாதுப்பிரியன் என்னும் ஐவரைப் பட்டியலிடுகிறது. இதே கல்வெட்டு முதலாம் இராசராஜனின் தமக்கையார் ஆழ்வார் பராந்தகன் குந்தவையாரின் அதிகாரிகளையும், கணக்கர் மற்றும், கரணத்தார்களையும் அடையாளம் காட்டுகிறது. சிறு பேறுடையான் தென்னவன் எரியூர் நாட்டு வேளான், நாகமங்கிழான் அங்காடி சூற்றியன் ஆகிய இருவரும் அதிகாரிகளா கவும், பூவனூர் உடையான் வரகுணன் என்பார் கணக்கராகவும், மருதங்குடையான் மாயிலட்டி ஆச்சன் என்பார் கரணத்தாராகவும் காட்டப்பட்டுள்ளனர்.[20]

முதலாம் இராசராசனின் இருபத்திநான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு இராசராசதேவரின் சிறுதனத்து சிங்களாந்தகத் தெரிஞ்ச குதிரைச் சேவகர், இளைய படை இருமுடி சோழவீரர் போன்ற வீரர் குழுக்களைத் தெரியப்படுத்துகிறது.[21] இம்மன்னனின் பதினேழாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு மன்னரின் ஆணையொன்றை வெளிக்

கொணர்கிறது. பிராமண ஊர்களில் பிராமணர்க்குக் கீழ்ப்பட்ட சாதிகளைச் சேர்ந்தவர்களின் காணிகளில், பணிசெய் மக்கள் பணிசெய்யும் காணிகள் தவிர, பணிசெய்யாமல் நின்றார் காணிகளை விற்றுவிடலாமென்று மன்னர் உத்தரவிடுகிறார். அதன்படி அரசு அதிகாரி வானவன் மூவேந்த வேளார் என்பார், உடையார் இராசராச தேவரின் பணிமகனான சாத்தம்பியாரிடம், அடைவு குத்துவித்து வரிசை விட்டபடி காணிகளை விற்றுக் காசு தண்டுமாறு கூறி ஏவ, சாத்தம்பியார், இ ராசகேசரி சதுர்வேதி மங்கலத்து மகாசபையாரிடம் வந்து செய்தி சொல்லிக் காசு தண்ட, மகாசபை நிலமொன்றை விற்றுக் காசு பெற்றது. இந்த நில விலை ஆவணத்தில் வைகானசர்கள் காசியபன் ஸ்ரீ வாசுதேவன் ஆராஅமுதன், கௌதமன் கோவிந்தன் சிங்கப்பிரான் ஆகியோரும், வேட்கோவர்கள் புறம்பியன் எச்சில் மண்டையான், பொய்யிலி தேவன், நக்கன் முத்தரையன் ஆகியோரும் கையெழுத்திட்டுள்ளனர். இவர்கள் இம்மகாசபையின் உறுப்பினர்களாகலாம் இந்த நிலத்தை வாங்கத் தரப்பட்ட காசு ஈழக்காசென்றும், வாசி படாமை செல்லும் காசென்றும் கல்வெட்டால் குறிப்பிடப்படுகிறது.[22]

## சமுதாயம்

வெள்ளனூர், பெராலத்தூர், ஆவூர், தஞ்சாவூர், பூவானூர் பழம் பட்டினம் போன்ற ஊர்ப் பெயர்களும், எரியூர் நாடு, பட்டினநாடு, நல்லூர் நாடு போன்ற நாடுகளின் பெயர்களும், செம்பொற் கோட்டம், தஞ்சாவூர்க் கூற்றம், ஆவூர்க் கூற்றம் போன்ற கூற்றங்களின் பெயர்களும் கரந்தைக் கல்வெட்டுகளிலிருந்து கிடைக்கின்றன. இராசகேசரி சதுர்வேதி மங்கலம் என்ற பெயரில் நான்மறையாளர் வாழ்ந்த பகுதியொன்று இருந்தது. இதுவும் பெராலத்தூரும் பிரமதேயங்களாக விளங்கின.

மக்களின் பெயர்கள் மிக நீண்ட பெயர்களாகவும், பெரும்பாலும் வடமொழிப் பெயர்களாகவும் வழங்கின. சாத்தன், அருமொழி போன்று ஒன்றிரண்டு தமிழ்ப் பெயர்களே காணக் கிடைக்கின்றன. ஒவ்வொரு ஊரிலும் ஊரவை இருந்தது. சில இடங்களில் மகாசபைகள் இருந்தன. நிலங்கள் பெயரிடப்பட்டிருந்தன. விற்பனைக்கு வந்த நிலமொன்றின் பெயர் முள்ளங்கால்.[23] இந்நிலங்களுக்கு நீர்ப்பாய்ச்ச நீர்க்கால்கள் இருந்தன. ராஜகேசரி வாய்க்கால், நரதொங்கவதி என்பன கல்வெட்டுகளால் சுட்டப்படும் நீர்வழிகளாகும்.[24]

புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட இரண்டாம் இராசாதிராசனின் கல்வெட்டு தஞ்சாவூர் நகரத்தார் ஆணை மேற்கொண்ட தகவலைத் தருகிறது. ஐம்பது கோயிற் காணியுடைய குடிமக்களான நகரத்தார் அனைவரும் கூடி தங்களுக்குள் கலந்து பேசி, இசைவு கண்டு மேற்

கொண்ட திருஆணையை உலகுடை முக்கோக்கிழான் ஆணை என்று கல்வெட்டு குறிக்கிறது. இவர்களின் காணியான கருந்திட்டைக்குடியில் தலை நிலம், கடை நிலம் முதலியவற்றை ஒக்கக் கூறிட்டுக் கரையெடுத்தபடி அநுபவிக்க உறுதி மேற்கொண்டு, அது கதிரும் நிலவும் உள்ளவரை செல்லக் கடவதாக என்று கல்லிலும் வெட்டி வரலாறாக்கியுள்ளார்கள்.[25]

கோயிற் செய்திகள்

கருவிட்டகுடி மகாதேவர், கருந்திட்டைக்குடி மகாதேவர் என்று காலத்தால் முற்பட்ட கல்வெட்டுகளில் அழைக்கப்படும் இத் திருக்கோயில் இறைவன் மிக மிகப் பிற்பட்ட காலத்தில் வசிஷ்டேசுவர சுவாமி என்றும், கருணாசாமியென்றும் பெயர் மாற்றம் பெற்றிருக்கிறார்.

ஸ்ரீ கோயிலுடையார்கள், தேவகன்மிகள், ஸ்ரீ கார்யம் செய்வார் ஆகியோரின் கட்டுப்பாட்டில் கோயிலாட்சி இருந்தது. இக்கோயிலுக்கு பலர் பலவிதமான கொடைகளைத் தந்திருக்கிறார்கள். அவர்களுள் முதலாம் இராசராசனின் அன்புத் தமக்கையாரான ஆழ்வார் பராந்தகன் குந்தவையார குறிப்பிடத்தக்கவர். இக்கோயில் இறைவனுக்கு நந்தா விளக்கொன்று எரிப்பதற்காக நிலம் வாங்கிக் கொடையாய் அளித்த இவ்வம்மை, வரலாற்றில் பெருமைக்குரிய இடத்தைப் பெற்ற பெருந்தேவியாவார். இவரது கொடையைக் குறிக்கும் கல்வெட்டு, கருந்திட்டைக்குடி, தஞ்சாவூருக்குப் புறம்படியாக வடவாற்றின் வடகரையில் இருந்ததென்று மிகத் தெளிவான புவியியல் வரைபடத்தைத் தருகிறது.[26]

பரகேசரிவர்மனின் பத்தாம் ஆட்சியாண்டில் மதுராந்தகன் கண்டராதித்தன் என்பவர் இக்கோயிலில் நந்தா விளக்கொன்று எரிப்பதற்காக மன்றாடி அமான் குறும்பன் என்பாரிடம் 96 ஆடுகளை ஒப்புவித்தார். மன்றாடியும் ராசகேசரி என்னும் அளவையால் நாள்தோறும் உழக்கு நெய் அட்டுவதாக உறுதி கூறியிருந்தார். அவர் தம் வாக்கைக் காப்பாற்றா நிலையில் அமான் கருவூரான் என்பார் குறும்பனிடமிருந்து நாற்பத்தெட்டு ஆடுகளை வாங்கிக்கொண்டு தாம் உழக்கு நெய் தந்து, விளக்கெரிக்கும் அறப்பணி தொடர உதவியதை அறியும்போது தவறும், அதை நேர்செய்த விதமும் தெரியவருகின்றன.[27]

முதலாம் இராசராசனின் படைக் குழுக்களைச் சேர்ந்த குதிரைச் சேவகர் அரங்கன் காரியான விச்சாதிர முத்தரையரும், இளைய படை வீரரான காரி குளிர்வாகையும் இராசராசன் காண வில்வித்தை காட்டியபோது காரி குளிர்வாகை காயமுற்று மரணமடைந்தார். இதையொட்டி அவர் நினைவாக அவர் உறவினரான காரி நக்கத்தின் மகன் கண்டன் காரியும், காரி கொற்றத்தின் மகள் கண்டன் பொற்காரியும், இவர் கொழுந்தன் குட்டிப் பொன்னாடையும், கருந்திட்டைக்கோயிலில் நந்தா விளக்கொன்று எரியுமாறு கொடையளித்தனர்.[28]

வாயிற்காப்போர் சிற்பங்கள் இரண்டைச் செய்வித்து இக்கோயி லில் எழுந்தருளுவித்தவராகச் செம்பொற் கோட்டத்துப் பட்டின நாட் டுப் பழம் பட்டினத்து வெள்ளாட்டி அருணிலி மலைப்பிராட்டி என்ப வரைக் கோப்பரகேசரிவர்மனின் பத்தாம் ஆண்டுக் கல்வெட்டு அறிமுகப் படுத்துகிறது[29]. முதலாம் இராசேந்திரனின் ஐந்தாம் ஆட்சியாண்டில் இக்கோயில் இறைவர்க்குப் பொன்னாலான பட்டமொன்று இராசேந் திர சோழன் பட்டம் என்ற பெயரில் செய்தளிக்கப் பெற்றது. இதைத் தங்கக் கிரீடம் என்று திரு. ஜே. எம். சோமசுந்தரம் தவறாகக் குறித் துள்ளார்.[30] இதன் நிறை குடிஞைக் கல்லால் இருபதே அரைக்கால் கழஞ்சுகளாகும். இதே கல்வெட்டு இக்கோயில் இறைவர்க்குப் பொன்னாலான பூக்களும், கண்மணிகளும், நெருஞ்சிப் பூக்களும் பிடிலிகை வாரியால் கூடின பொன்னும் தரப்பட்டிருந்த செய்தியையும் எடுத்துரைக்கிறது.[31]

முதலாம் இராசேந்திரனின் ஆட்சியாண்டு தெரியாத கல்வெட்டு பாலாசிரியன் பரமேசுவரன் ஸ்ரீராகவன் என்பவர் 128 குழி நிலத்தை இக்கோயிலுக்கு இருபது காசுகளுக்கு விற்ற தகவலைச் சொல்கிறது. முள்ளங்கால் என்ற பெயர் கொண்ட இந்நிலத்தின் அளவைச் சொல் லும்போது கல்வெட்டு, பொத்தகப்படி 128 குழி என்று பேசுவது அக் காலத்தில் நில அளவைப் பதிவேடுகள் இருந்த உண்மையை உணர்த்து கின்றது.[32] இந்நிலத்தை 75 காசு பெற்றுக்கொண்டு பெராலத்தூர் சபை இறையிலியாக்கித் தந்ததை முதலாம் இராசேந்திரனின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு தெரிவிக்கிறது.[33]

புதிதாகப் படியெடுக்கப்பட்ட பரகேசரிவர்மனின் பதினொன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு இம் மன்னனுக்குக் காலத்தால் முற்பட்ட இராசகேசரிவர்மனின் பதினேழாம் ஆட்சியாண்டில் தரப்பட்ட கொடை யொன்றையும், அது முறையாக நிர்வகிக்கப்படாமையின் நிகழ்ந்த விசாரணையையும் தெளிவுபடச் சொல்கிறது. சிவிகையார் சேரியில் இருக்கும் பெண்டாட்டி பொய்யிலி என்பார் தம் மகன் அரையன் வீர சோழனின் நினைவாகக் கோயிலில் நந்தா விளக்கொன்று எரிக்க ஏற் பாடு செய்திருந்தார். இதில் பாதி விளக்கிற்கு நெய் அட்ட வெள்ளூ ரன் சிவனிடம் காசு தந்திருந்தார். இவ்வறத்தை இத்தளி திருக்கோயி லுடையவர்களான நந்தி வேம்பனும், நந்தி அய்யாறனும், ஊர் கிழான் சத்தியும், பகை மதன சத்ருகாவனும் ஒப்புக்கொண்டிருந்தனர். இதற் காக நாற்பது ஆடுகள் தரப்பட்டிருந்தன. இவ்வறம் என்ன காரணத்தி னாலோ பரகேசரிவர்மனின் பதினொன்றாம் ஆட்சியாண்டு வரை நடக்காமல் தடைப்பட்டிருந்தது. இதைக் கண்டு மனம் பொறாத கோயில் ஸ்ரீ கார்யமான மிலட்டூர் உடையான் மனு நல் மார்த்தாண்ட மூவேந்த வேளான் இது குறித்து விசாரணை நடத்தித் தவறு செய்தவர்

களைத் தண்டம் செலுத்த வைத்து விளக்கறத்தை நிறைவேற்ற முயற்சி எடுத்துள்ளார். இக்கல்வெட்டு ஆலமர் அண்ணலின் கீழுள்ள ஜகதிப் படையில் வெட்டப்பட்டுள்ளது.[34] இப்பகுதி அடைபட்டிருப்பதாலும், கீழிறங்கிப் படிக்கும் வசதிகள் இல்லாமையாலும் இவ்வரிய கல்வெட்டின் முழுச்செய்திகளையும் அறியக்கூடவில்லை.

இக்கோயிலைச் சேர்ந்த கோயிலுடையார்களுள் கவுசியன் கணபதி சூற்றியனும், பக்குடி சுதந்தியும், தஞ்சாவூர் வீரசோழர் பெருந்தெருவில் உள்ள திருதான சோமபிரான் கோயிற் காணியுடைய ஆத்திரையன் ஸ்ரீதரன் தாழியான பிரம்ம ஈசுவரமுடையானுக்கு கோயில் சிவாச்சார்ய உரிமைகளை விற்றுக் கொடுத்ததாகப் பரகேசரியின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு எடுத்துரைக்கிறது. இப்படி இவர்கள் விற்றுக் கொடுத்த சிவாச்சார்ய உரிமைகள், கருந்திட்டைக்குடி கோயிலில் நாள் திங்கள் முப்பது வட்டத்து இருபதும், இவ்வூர்ப் பிடாரி கோயிலில் நாள் இருபதும், நந்தி மாகாளி கோயிலில் நாள் இருபதும் ஆகும்.[35]

புதிதாகப் படியெடுக்கப்பட்ட பரகேசரிவர்மனின் பதினான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, மிக முக்கியமான வரலாற்றுச் செய்தியொன்றைத் தருகிறது. இதன்படி கருந்திட்டைக்குடி கோயில் முதலாம் பராந்தகனின் காலத்திலேயே புகழுடன் விளங்கிய செய்தி நமக்குக் கிடைக்கிறது. பூமப்பையார் மகளார் சிலவயார் என்பவர் இக்கோயிலில் இருந்த உமா பட்டாரகியார்க்கு மதிரை கொண்ட கோப்பரகேசரியின் முப்பத்தெட்டாம் ஆட்சியாண்டின் போது ஆலூர்க் கூற்றத்து மணலொக்கூர் ஊராரிடமிருந்து நிலமொன்று வாங்கி இறையிலியாகத் தந்தார். இது தொடர்பான ஓலை கல்வெட்டாகாமல் ஓலையாகவே இருந்தது. இவ்வோலையைத் திருநறையூர்நாட்டு குறுக்கையுடையான் தன்னிடமிருப்பதாகச் சிறு வேலூருடையானுக்குக் காட்ட, அவனும் இத்தளி தேவகன்மிகளும், கரணத்தானும், கற்றளிப்பிச்சனும், ஸ்ரீ கார்யம் செய்யும் மனுகுல மார்த்தாண்ட மூவேந்த வேளானும் இவ்வோலைப்படி திருக்கற்றளியில் கல்மேல் வெட்டுக என்று ஆணையிட இச்செய்தி கல்வெட்டானது. இந்த ஓலைப்படி இந்நிலத்தை இறையிலியாய்க் காத்துக் கோயிலுக்கு உரியன செய்வோமென்று பழையாறு கிழான் அப்பன் வேம்பனும், மண்டை தாழியும், மாடன் கலி விசையனும், அணிகால நக்கனும் கல்வெட்டினர்.[36]

திருச்சுற்றில் முருகன் திருமுன்னிலுள்ள பிற்காலக் கல்வெட்டுகள் சிலவற்றால் இத்திருமுன் மண்டபம் கி. பி. 1845இல் ஐப்பசி மாதத்தில் சுப்ரமணியன் மகன் சொக்கலிங்கம் என்பவரால் எடுக்கப்பெற்று குடமுழுக்கு நிகழ்த்தப் பெற்றதென்பதும்,[37] இங்கு 1788 தை மாதத்தில்

சஷ்டி உபயத்தைத் தொடங்கியவர் மண்டபத்தைக் கட்டிய ஆறுமுக வாத்தியார் என்பதும்,[38] 1957இல் இங்குத் தண்டபாணிக்கு செப்புத் திருமேனி எடுத்து, அதற்குத் திருமுன்னும் கட்டித் தென்புறம் அலங் கார மண்டபம், சஷ்டி வழிபாடு மற்றும் சுவாமி கைங்கர்யப் பொருள் களுக்கான மண்டப அறை முதலியவற்றை இரந்து கிடைத்த பொருள் கொண்டு கட்டியவர் சீட்டுத் தண்டலர் குப்புசாமி என்பதும் தெரியவரு கின்றன.[39]

மற்றொரு கல்வெட்டு 1878இல் தண்டபாணிக் கடவுளுக்கு ஆறுமுக வாத்தியார் பாதவடி உபயத்தில் குடமுழுக்கு நடைபெற்றதாகவும், மண்டபப் பிள்ளையார், வீரபாகு தேவர், வெள்ளிக் கருணைக் கொத்து, வேல், விளக்கு, திருவாசி, அலங்கார ஆசனம், படிக்கதவுகள் முதலியன ஏற்பாடு செய்யப்பட்டதாதவும் கூறுகிறது. இக்கல்வெட்டை சபாபதி யின் வேண்டுகோளையேற்றுத் திருச்சிற்றம்பலம் என்பார் எழுதியுள் ளார்.[40]

அப்பரின் காலத்திலிருந்து வரலாற்றைத் தொடங்கிப் பராந்தகன் காலத்துக் கொடைகளைப் பெற்று செம்பியன்மாதேவியால் திருப்பணி செய்யப்பட்டுப் பிற்காலத் திருப்பணிகளையும் கண்டு வளர்ந்த கருந் திட்டைக்குடி மகாதேவர் திருக்கோயில் அண்மையில் கண்ட திருமுழுக் கின் மகிழ்வில் நலமோடு திகழ்வது நெஞ்சை நிறைக்கிறது.

## அடிக்குறிப்புகள்

1. இக்கல்வெட்டு டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையத்தால் கண்டறியப்பட்டுப் படியெடுக்கப்பட்டதாகும். இராச மாணிக்கனார் வரலாற்றாய்வு மைய அறிக்கை (இ. வ.மை.அ.), புதிய கல்வெட்டு (பு. க.) எண். 1, 1991.
2. இ. வ. மை. அ., பு. க. எண். 2, 1991.
3. மேற்படி, பு. க. எண் 3, 1991.
4. ஆ. சிங்காரவேலனார், அபிதான சிந்தாமணி, ஏசியன் எடுகேசனல் சர்வீசஸ், புது தில்லி, 1982, பக். 1145.
5. இது போன்ற அம்மையப்பர் வடிவங்கள் திருவையாறு அய்யா றப்பர் கோயில், திருமழபாடி வைத்தியநாதசுவாமி கோயில், திருவேதிகுடி சிவன் கோயில் ஆகியவற்றில் காணப்படுகின்றன.
6. S.I.I. V, 1405-1414.
7. ஜே. எம். சோமசுந்தரம், இராசராசேச்சுரமும், பிற சோழர் கோயில்களும், தஞ்சாவூர் அரண்மனை தேவஸ்தான வெளியீடு, 1958, பக். 89-90.

8. இ. வ. மை. அ., பு. க. 1-7, 1991.
9. ஆறாம் திருமுறை, தருமையாதீன வெளியீடு, 1963, பக். 519.
10. S.I.I. V, 1412.
11. S.I.I. V, 1405, 1407, 1412.
12. மேற்படி, பக். 506, 510.
13. மேற்படி, 1405.
14. மேற்படி, 1409.
15. இ.வ.மை.அ., பு. க. 4.
16. மேற்படி, 1407.
17. S.I.I. V, 1409.
18. மேற்படி, 1408.
19. மேற்படி, 1407.
20. மேற்படி, 1409.
21. மேற்படி, 1411.
22. மேற்படி, 1409.
23. மேற்படி, 1408.
24. மேற்படி, 1409.
25. இ.வ.மை.அ., பு.க. 4, [1991.
26. S.I.I. V, 1409.
27. மேற்படி, 1405. இக்கல்வெட்டின் தொடக்கப் பகுதியே கல்வெட்டுத் தொகுதியில் காணப்படுகிறது. கல்வெட்டு முழுமையடையவில்லை என்று கல்வெட்டுத் தொகுதி கூறுகிறது. ஆனால் இக்கல்வெட்டின் எஞ்சிய பகுதி தென்சுவரின் கீழ்ப் பகுதியிலேயே உள்ளது. வரலாற்றாய்வு மையம் இப்பகுதியைப் படியெடுத்துள்ளது.
28. S.I.I. V, 1411.
29. மேற்படி, 1414.
30. ஜே. எம். சோமசுந்தரம், இராசராசேச்சுரமும் பிற சோழர் கோயில்களும், பக் 89.
31. S.I.I. V, 1413.
32. மேற்படி, 1408.
33. மேற்படி, 1407.
34. இ.வ.மை.அ., பு.க. 5, 1991.
35. S.I.I. V, 1412.
36. இ.வ.மை.அ., பு.க. 6, 1991.
37. ஜே. எம். சோமசுந்தரம், இராசராசேச்சுரமும் பிற சோழர் கோயில்களும், பக். 89-90.
38. மேற்படி, பக். 90.
39. மேற்படி, பக். 90.
40. இ.வ.மை.அ., பு.க. 7, 1991.

---

## 32. பெருமைச் சுவடுகள்

### ஆராய்ச்சிப் பேரறிஞர் தி. வை. சதாசிவப் பண்டாரத்தார்

அ. ம. சத்தியமூர்த்தி

ஆராய்ச்சி உலகின் வித்தாக விளங்கியவர் என்று அறிஞருலகில் பலராலும் பாராட்டப் பெறும் பெருமைக்குரியவர் அறிஞர் தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் ஆவார். அவர் பல்கலைக் கழகப் பட்டம் பெறாமல் பள்ளிப் படிப்பின் மூலம் பல்கலைக் கழகத்தாரே வியக்கும் வகையிலும், தமது ஆய்வைப் பற்றிப் பிறர் ஆய்வு செய்யும் வகையிலும் ஆராய்ச்சித் துறையில் தமக்கென ஒரு முத்திரையைப் பொறித்து உயர்ந்தவர்,

**வாழ்க்கை**

பிற்காலச் சோழர் வரலாற்றில் திருப்பு மையத்தை ஏற்படுத்தியது தஞ்சாவூர் மாவட்டம் கும்பகோணம் வட்டத்திலுள்ள திருப்புறம்பயம் என்னும் ஊரில் நடந்த போர் ஆகும். அவ்வூரில் 15 8—1892 அன்று திருமதி. மீனாட்சி அம்மையாருக்கும் திரு. வைத்திலிங்க பண்டாரத்தாருக்கும் ஒரே மகனாராகப் பிறந்தவர் தி. வை. சதாசிவப் பண்டாரத்தார்.

தமது சொந்த ஊரில் பள்ளிப் படிப்பைத் தொடங்கிய பண்டாரத்தார், பின்னர்ப் புளியஞ்சேரி உயர்தரத் தொடக்கப் பள்ளியிலும், அதனைத் தொடர்ந்து நான்காம் படிவம் முதல் குடந்தை நகர உயர் நிலைப் பள்ளியிலும் படித்து 1910-இல் பள்ளிப் படிப்பை முடித்தார். பள்ளிப் படிப்பு முடிந்ததும் தமிழ் இலக்கிய, இலக்கண நூல்களை இவர் பயின்றிருக்கிறர்.

அதனையடுத்து 1914-இல் திருத்துறைப்பூண்டிக்கு அண்மையி லுள்ள குறுக்கை என்னும் ஊரைச் சேர்ந்த திரு ஆத்மலிங்கராயரது ஒரே மகளாரான தையல்முத்து அம்மையாரை மணம் புரிந்து கொண்டார்.

இந்த நேரத்தில்தான் செந்தமிழ் என்னும் மாத இதழில் பண்டாரத் தாரது எழுத்துப் பணியும் தொடங்குகிறது. தமது திருமணத்திற்குப் பின்னர்ப் பாபநாசம் தாலுக்கா அலுவலகத்தில் ஒன்றரை ஆண்டுக் காலம் எழுத்தர் பணியை இவர் மேற்கொண்டிருந்தார். அதனைத் தொடர்ந்து குடந்தை நகர உயர்நிலைப் பள்ளியில் ஒரு மாத காலம் தலைமைத் தமிழாசிரியராக இவர் பணி புரிந்துள்ளார்.

இதனையடுத்து 1917-இல் இருந்து 1942-வரையிலான இருபத் தைந்து ஆண்டுக் காலம் குடந்தையிலுள்ள வாணாதுறை உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றியுள்ளார்,

1921-இல் பண்டாரத்தார் மனைவியார் காலமானார். பின்னர் 1922-இல் சீகாழி வட்டம் எலத்தூரில் வாழ்ந்த சதாசிவ குருக்கள் என்பவரின் இரண்டாம் புதல்வியாராகிய சின்னம்மாள் என்பவரை மணம் செய்து கொண்டார்.

பள்ளிப் பணியினையடுத்து 1942-இல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராகச் சேர்ந்த பண்டாரத்தார் தமது அறுபதாம் வயது நிறைவுற்ற 1953-வரை தொடர்ந்து அப்பல்கலைக் கழகத்தில் தான் பணியாற்றி ஓய்வு பெற்றார்.

பண்டாரத்தாரது ஆய்வுத் திறமையைக் கண்டு அதனைப் பயன் படுத்திக்கொள்ள எண்ணிய அண்ணாமலைப் பல்கலைக்கழகம் அவரை 1955-இல் மீண்டும் பணியில் அமர்த்தியது. அதனைத் தொடர்ந்து தமது இறுதிக்காலம் வரை அப்பல்கலைக் கழகத்தில் பணியாற்றிய இவர், 68-ஆம் வயதில், 2 -1 1960 அன்று அண்ணாமலை நகரி லுள்ள தமது இல்லத்தில் இயற்கையெய்தினார்.

பண்டாரத்தார் சிவபக்தி உடையவர். இவர் 1928-முதல் தாம் இறக்கும் வரை தமது பிறந்த ஊரிலுள்ள கோயிலில் சைவசமய குரவர் நால்வர்க்கும் ஆண்டு தோறும் குருபூசை செய்து வந்துள்ளார். அது தொடர்ந்து நடக்கவும் இவர் ஏற்பாடுகள் செய்துள்ளதாகத் தெரிகிறது.

அண்ணாமலைப் பல்கலைக் கழக வரலாற்றுத் துறையில் இணைப் பேராசிரியராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்ற பேராசிரியர் ச. திருஞான சம்பந்தன் என்பவர் பண்டாரத்தாரின் ஒரே புதல்வர் ஆவார்.

அண்ணாமலைப் பல்கலைக்கழக வரலாற்றுத் துறையில் விரிவுரை யாளராயிருந்த திரு. எஸ். கே.கோவிந்தசாமி, கல்வெட்டு ஆராய்ச்சி யாளர் திரு. தி. நா. சுப்பிரமணியம், கரந்தைக் கல்லூரியில் பணியாற்றிய கல்வெட்டு ஆராய்ச்சியாளர் திரு. கோவிந்தராசன் முதலானோர் பண்டாரத்தாரின் மாணாக்கர்களாவர். இவரது மகனார் திரு. ச. திருஞானசம்பந்தனும் இவரிடம் கல்வெட்டு ஆராய்ச்சியில் பயிற்சி பெற்றிருக்கிறார்.

### தமிழ்ப்பணி

பள்ளிப் படிப்பின் போதே பண்டாரத்தார் தமிழ் இலக்கண இலக்கி யங்களை நன்கு பயின்றார். திருமணத்திற்குப் பின்னர் தொடக்கக் காலத்தில் இவர் செந்தமிழில் எழுதிய கட்டுரைகளைக் கண்டு, தமிழ்ப் புலவர்களிலும் ஒருவர் வரலாற்றுப் புலவராகி ஆராய்ச்சி மைல் கற்கள் நாட்டப் போகிறாரே என்று அதிசயமும் ஆனந்தமும் ஒருங்கே அடைந் திருக்கிறார் தமிழறிஞரான பி. ஸ்ரீ. அதற்கேற்ப பண்டாரத்தாரின் ஆய்வுகள் ஆழமுடையனவாக இருந்தன.

தமிழறிஞரான ந. மு. வேங்கடசாமி நாட்டாரின் பரிந்துரையின் பேரில் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் மூன்றாம் ஆண்டு விழாவில் திரு. எல். டி. சாமிக்கண்ணுப் பிள்ளையின் தலைமையில் 'கல்லாடமும் அதன் காலமும்' என்னும் தலைப்பில் இவர் நிகழ்த்திய உரையானது இவருக்குப் பேரும் புகழும் ஈட்டித் தந்தது. விழாவில் கலந்துகொண்ட திரு. பா. வே. மாணிக்க நாயக்கர், திரு. கி. வி. கனகசபைப் பிள்ளை, முதலானோரால் இவர் வெகுவாகப் பாராட்டப் பெற்றார். இவர், கவிதை புனையும் ஆற்றலும் பெற்றிருந்தார்.

பண்டாரத்தாரின் ஆய்வுகளுக்கு அவரது ஆசிரியரான பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் தூண்டுகோலாக இருந்திருக்கிறார். வகுப்புகளில் கல்வெட்டுகள் பற்றி அவர் கூறிய செய்திகளே அத்துறையில் இவரைச் சிந்திக்கத் தூண்டின, அதன் விளைவாகத் திருப்புறம்பயக் கோயில் கல்வெட்டுகளை இவர் ஆராயத் தொடங்கினார். பின்னர்க் குடந்தையில் பணியாற்றிய போது அவ்வூரிலும், அதனைச் சுற்றியுள்ள ஊர்களிலும் உள்ள கோயில்களில் காணப்படும் கல்வெட்டுகளையெல்லாம் இவர் ஆய்வு செய்தார். குடந்தை அரசினர் கல்லூரி நூலகத்திலிருந்த நூல்களெல்லாம் இவரது கல்வெட்டாய்விற்குப் பெரிதும் உதவியிருக்கின்றன.

தமிழ் இலக்கிய இலக்கணப் பயிற்சியின்றிக் கல்வெட்டுகளை ஆராய இயலாது என்பதனை நன்கு உணர்ந்தவர் பண்டாரத்தார். அவரது இலக்கிய, இலக்கணப் பயிற்சியானது அவர் செய்த கல்வெட்டாராய்ச்சிக்கு முழுமையாகப் பயன்பட்டது.

தத்தம் கல்வெட்டு ஆய்வுகளைப் பற்றிப் பண்டாரத்தார், தஞ்சை எல். உலகநாதப் பிள்ளை, திருவாரூர் இலக்கண விளக்கப் பரம்பரை சோமசுந்தர தேசிகர் ஆகியோர் அவ்வப்போது ஒன்றுகூடி விவாதித்து முடிவுகளை மேற்கொண்டமையும் உண்டு.

பண்டாரத்தார் தாம் ஆய்ந்து கண்டவற்றை விரைந்து வெளியிடமாட்டார். அவர் தமது முடிவினைப் பல்வேறு சான்றுகளின் மூலம் உறுதிப்படுத்திய பிறகே வெளியிட்டார்.

சான்றாக குலோத்துங்கனைச் சைவம் சார்ந்தவன் எனப் பலரும் கருதிக் கொண்டிருந்த காலத்தில் பல்வேறு கல்வெட்டுச் சான்றுகளின் மூலம் அவனைச் சமயப்பொறை உடையவனாகக் காட்டி நிறுவியவர் பண்டாரத்தார்.

நாகப்பட்டினத்திற்கு அண்மையிலுள்ள செம்பியன் மாதேவி என்ற ஊரிலுள்ள சிவாலயத்தின் வரலாற்றைக் கல்வெட்டுகளின் துணை கொண்டு 'செம்பியன்மாதேவி சிவாலய வரலாறு' (1959) என்னும் நூலாகப் பண்டாரத்தார் எழுதினார்.

தமிழில் முறையாக எழுதப்பட்ட வரலாற்று நூல்கள் குறைவு. இருந்த ஒரு சிலவும் ஆங்கிலத்திலேயே காணப்பட்டன. அக்குறையினை நீக்கும் முயற்சியினை மேற்கொண்டார் பண்டாரத்தார். அதன் விளைவாகக் காவிரிப்பூம்பட்டினம் (1959); கருணாகரத் தொண்டைமான் (1923), முதற் குலோத்துங்க சோழன் (1930), பாண்டியர் வரலாறு (1940), பிற்காலச் சோழர் வரலாறு (மூன்று பாகம்) முதலான வரலாற்று நூல்களை அவர் எழுதினார். இவற்றுள் கருணாகரத் தொண்டைமான், முதற் குலோத்துங்க சோழன், பாண்டியர் வரலாறு ஆகிய மூன்று நூல்களும் இவர் குடந்தையில் பணியாற்றியபோது எழுதியவையாகும்.

தமிழ் இலக்கிய வரலாற்றுத் துறையிலும் தனி முத்திரையினைப் பதித்தவர் பண்டாரத்தார். தமிழக வரலாற்றில் இருண்ட காலமாகக் கருதப்பட்டது களப்பிரர் காலமாகும். களப்பிரர் காலத் தமிழகம் பற்றி அறிவதற்குத் தமிழில் போதிய சான்றுகள் இல்லை. அக்காலத்திற்குரிய இலக்கிய வரலாற்றைப் பல்வேறு அக, புறச்சான்றுகளைக் கொண்டு முறையாக எழுதிய பெருமைக்குரியவர் பண்டாரத்தார்.

அதனைப் போன்றே 13, 14, 15-ஆம் நூற்றாண்டுகளுக்குரிய தமிழ் இலக்கிய வரலாற்றையும் தனி ஒரு நூலாக அவர் எழுதினார். அவரெழுதிய தொல்காப்பியப் பாயிரவுரை என்னும் நூலும் இவண் கருதத் தக்கதாகும்.

பண்டாரத்தார் தமிழ் வளர்ச்சிக் கழகம் வெளியிட்ட கலைக்களஞ்சியத்தின் பதிப்பாசிரியர் குழுவில் ஓர் உறுப்பினராக இருந்து பணியாற்றியுள்ளார்.

பண்டாரத்தாரது ஆய்வுத் திறமையைக் கண்ட மதுரைத் திருவள்ளுவர் கழகம் 29—3—1956-இல் அவருக்கு 'ஆராய்ச்சிப் பேரறிஞர்' என்ற பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தது.

பண்டாரத்தார் தாம் வளர்ந்ததோடு நின்றுவிடாமல் பிற ஆராய்ச்சியாளர்களையும் வளர்க்கும் இனிய பண்பாளராகவும் இருந்திருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

முடிவுரை

பண்டாரத்தார் இறந்தபோது டாக்டர் மா. இராசமாணிக்கனார், 'கல்வெட்டு ஆராய்ச்சி அதன் முதல்வரை இழந்துவிட்டது. ஆராய்ச்சி அறிஞர் தங்கள் அண்ணாவை இழந்துவிட்டனர். தமிழ் ஆராய்ச்சி என்னும் தாய் தன் செல்வ மகனை இழந்துவிட்டாள். உலகம், எதைக் கேட்டாலும் சொல்ல வல்ல பேரறிஞரை இழந்துவிட்டது' எனக் குறிப்பிட்டதை நினைவு கூர்ந்து இக்கட்டுரையை நிறைவுசெய்வது சாலப் பொருந்தும்.

## 33. மதிப்புரை

**இரணியூர்க் கோயில்** ஆசிரியர்–மா. சந்திரமூர்த்தி, எம்.ஏ., வெளியீடு : மணிவாசகர் நூலகம், 55, இலிங்கிச்செட்டித் தெரு, சென்னை 600 001. பக்கங்கள் 14 + 234 ; விலை ரூபாய் 25–00.

மக்கள் தொகையில் சிறிய சமூகமாக இருப்பினும், ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் ஒருசேர வாழ்ந்து, திரைகடல் ஓடித் திரவியம் குவித்து, அன்ன சத்திரங்கள் அமைத்தும், ஆலயப் பணிகளுக்கு அள்ளிக் கொடுத்தும், கல்விப் பணிகட்குக் கணக்கில்லாச் செல்வத்தை வழங்கியும் வாழ்வாங்கு வாழும் சமூகம் நகரத்தார் சமூகமாகும்.

தங்கள் வீடுகளையே கலைகளின் இருப்பிடமாக அமைத்த நகரத்தார் தமிழகமெங்கும் ஆலயங்களில் அரிய திருப்பணிகள் பல செய்துள்ளனர். செட்டிநாட்டுப் பகுதியில் நகரத்தார் குலமரபுக் கோயிலாக 9 திருக்கோயில்கள் உள்ளன. அவை இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன்கோயில், பிள்ளையார்பட்டி, இரணிக்கோயில், நேமம், இலுப்பைக்குடி, சூரக்குடி, வேலங்குடி என்பனவாகும்.

இவற்றுள் பிள்ளையார்பட்டியும், இரணியூரும் பிற்காலத்து ஏற்பட்ட பிரிவுகள். அப்பிரிவுகள் இரண்டும் 18ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டன. கி. பி. 1775ஆம் ஆண்டு எழுதப்பெற்ற ஒரு செப்பேடு 'ஏழு நகரம்' என்று குறிக்கிறது. அதற்கும் முன்பு 'ஐந்து நகரம்' மட்டும் இருந்துள்ளதாக 1326இல் எழுதப்பெற்ற பிரான்மலைச் செப்பேடு கூறுகிறது.

இந்த ஒன்பது கோயில்களை மையமாக வைத்தே நகரத்தார் குலமரபு பிரிக்கப்படுகிறது. கோயிலே அவர்களுக்குக் கோத்திரமாக விளங்குகிறது. அவற்றுள் இரணியூர் சிவபுரந்தேவி உடனமர் ஆட்கொண்டநாதர் கோயில் குடமுழுக்கு விழா 5.7.1990 அன்று நடைபெற்றது. அதனையொட்டி அக்கோயிலின் விரிவான வரலாற்று நூலை திரு மா. சந்திரமூர்த்தி அவர்கள் எழுதியுள்ளார்கள். நகரத்தார்க்குரிய ஒன்பது திருக்கோயில்களின் வரலாற்றை எழுதும் முயற்சியில் ஈடுபட்ட அவர்கள் ஏற்கெனவே இலுப்பைக்குடி, மாத்தூர்க் கோயில்களின் வரலாற்றை எழுதி முடித்துள்ளார்கள். அவ்வரிசையில் இந்நூல் மூன்றாவது நூலாகும்.

ஏற்கெனவே 9 கோயில்கள் பற்றி முனைவர் தமிழண்ணல் கட்டுரை எழுதியுள்ளார்கள். பிள்ளையார்பட்டிக் கோயில் பற்றி அமரர் சா. கணேசன் ஒரு சிறு நூல் எழுதியுள்ளார்கள் (1955). ஆனால் கலை ஆர்வலர், ஆய்வாளர் சந்திரமூர்த்தி அவர்கள் இரணியூர்க் கோயில் அமைப்பு முழுவதையும் படிப்போர் கண்முன்னே நிறுத்தும் வகையில் கோயிலை அளவீடு செய்து இந்நூலை விளக்க நூலாக எழுதியுள்ளார்.

திருக்கோயில் அமைப்பு, சிற்பங்கள், செப்புத் திருமேனிகள், ஓவியம், மரச்சிற்பம், அணிகலன், பரிகலங்கள், விளக்குகள், விழாக்கள் ஆகியவைகளைத் துல்லியமாகக் கணக்கிட்டு மிகமிக விரிவான முறையில் அவைகளைப் பற்றிக் கூறுகிறார் ஆசிரியர்.

ஆங்காங்கே இங்குள்ள தனித்தன்மைகளைச் சுட்டிக்காட்டிப் பிற ஆலயங்களின் சிற்பங்களோடு அமைந்துள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் கூறும் ஆசிரியர் 'நகரத்தார் கலை' என்னும் தனிக் கலைமரபு விளங்குகிறது என்பதை வலியுறுத்தும் வண்ணம் பல இடங்களில் அத் தொடரைப் பயன்படுத்துகிறார்.

ஆலய வரைபடமும், முப்பது பக்க ஒளிப்படங்களும் நூலுக்கு அணி சேர்க்கின்றன. துர்வாசரின் அரிய சிற்பம், ஆறு கைகளுடன் பைரவர் செப்புப் படிமம், மாறுபட்ட மகிடாசுரமர்த்தனி போன்றவை பல இரணியூர்க் கோயிலில் தனித்தன்மையுடன் விளங்குவதை ஆசிரியர் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

மனைவி இல்லாதோர், மனைவிக்காகப் பாவை விளக்கு அளிப்பதும், இறந்த பெண்களின் நினைவாகப் பாவை விளக்கு அளிப்பதும், சடங்குகள் செய்வதுமான செட்டிநாட்டு வழக்கம் அரிய செய்தியாகும். நூலைப் படித்தவுடன் ஆசிரியருடன் நாமே கோயிலினுட் சென்று ஒவ்வொரு திருமேனியையும் நேரில் கண்டு களித்த உணர்ச்சி தோன்றுகிறது. அவைகளை வடித்த சிற்பிகளின் கைவண்ணத்தைப் பல இடங்களில் ஆசிரியர் மனமாரப் பாராட்டி மகிழுகிறார். ஆசிரியரோடு சேர்ந்து நமக்கும் பாராட்டத் தோன்றுகிறது.

ஒரு கோயிலைப் பற்றி இவ்வளவு விரிவாகவும், நுட்பமாகவும், முழுமையாகவும் இதுவரை நூல் ஒன்றும் வெளிவரவில்லை. இருப்பினும் ஒவ்வொரு திருமேனியைப் பற்றியும் அதன் நிறை, அமைப்பு வருணனை, உறுப்புக்கள், ஆடை, அணிகலன், அளவு ஆகியன பற்றிய புள்ளி விவரங்களைப் படிக்கும்போது கணக்குப் புத்தகத்தைப் படிப்பது போன்ற உணர்ச்சி வாசகர்களுக்கு ஏற்படுகிறது. பல சிற்பங்களுக்குக் கற்கள் எங்கெங்கிருந்து வந்தன, சிற்பத்தை வடித்த சிற்பி யார் என்ற விவரங்கள்கூடத் தரப்பட்டுள்ளன.

இரு செப்பேட்டுப் பாடங்களைத் தந்த ஆசிரியர் மைய அரசின் தொல்லியல் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப் பிரிவினர் 10 கல்வெட்டுகளைப் படி எடுத்துள்ளனர் என்று கூறுகிறார். ஆனால் 1926 ஆம் ஆண்டு படி எடுத்த அதன் மூலபாடத்தைத் தந்திருந்தால் சிறப்பாக இருந்திருக்கும். அது ஒரு குறையே. அஸ்தரதேவர்–அஸ்திர தேவர்; விநாயகர்–வினாயகர்; அணிஒட்டிக்கால்–அணியொட்டிக்கால்-அணிவொட்டிக்கால் என ஒருமைப்பாடு இல்லாமல் பல சொற்கள் கையாளப்பட்டுள்ளன. இதில் சற்றுக் கவனம் செலுத்தியிருக்கலாம்.

**17.** வெ. வேதாசலம்: **20-12-1950.** திரு. வெள்ளைச்சாமி, திருமதி. வேலம்மாள் மகனார். காப்பாட்சியர், மன்னர் திருமலை அரண்மனை, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, மதுரை. இல்லம்: 8, ஆயிரவல்லி நாடார் தெரு, அருப்புக்கோட்டை, காமராசர் மாவட்டம். வெளியீடுகள்: திருவெள்ளறை, பாண்டிய நாட்டில் வாணாதிராயர்கள், இயக்கி வழிபாடு, திருமலை மன்னன் கையேடு முதலிய நூல்கள், ஐம்பதுக்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகள். ஆர்வம்: தமிழகக் கல்வெட்டுகள், பாண்டிய நாட்டு வரலாறு, பண்டைய நீர்ப்பாசனம், பண்டைய நாட்டுப் பிரிவுகள்.

**18.** ந. சண்முகசுந்தரம்: **17-3-1941.** திரு. பா. நடராசன், திருமதி. ந. ஞானாம்பாள் மகனார். முதுகலை, எம் ஃபில்., பி டி., ஆங்கில விரிவுரையாளர் (தேர்வுநிலை), பெரியார் ஈ.வே.ரா. கல்லூரி, திருச்சி 620 023. இல்லம்: 722, நடராசன் தெரு, கருணாநிதி நகர், திருச்சி 620 021. ஆர்வம்: சமுதாயப்பணி, விளையாட்டுத்துறை, திறமையாளர்களை ஊக்குவித்தல்.

**19.** க. ப. அறவாணன்: **9-8.1941.** தமிழில் முதுகலை, முனைவர். பிரெஞ்சு, பேச்சுத்தமிழ், மொழியியல், மானுடவியல், கல்வெட்டியல் பெருஞ்சான்றிதழ்கள். தமிழியல் துறைத் தலைவர், புதுவைப் பல்கலைக் கழகம், ஆர். வேங்கடராமன் நகர், புதுச்சேரி 605 104. வெளியீடுகள்: திறனாய்வு, படைப்பு, மொழியியல்-இலக்கணம், வரலாறு, கல்வி, சமூகவியல்-மானுடவியல், பயணம், மொழி பெயர்ப்பு போன்ற பல தலைப்புகளின் கீழ் ஏறத்தாழ 35 நூல்கள். பரிசுகள்: தமிழர்தம் மறுபக்கம், தமிழர்தம் தாயகம், சைனரின் தமிழிலக்கண நன்கொடை ஆகிய நூல்களுக்குத் தமிழக அரசின் முதற்பரிசு, சர். ஆர்.கே.சண்முகனார் தமிழ் ஆய்வுப் பரிசு, இராணி சேது பார்வதிபாய் வரலாற்றாய்வுப் பரிசு எனப் பல பரிசுகள். உறுப்பினர்: தமிழ்ப் பல்கலைக் கழகப் பேரவை உறுப்பினர், முதுகலைப் பாடத்திட்டக் குழு உறுப்பினர்: பாரதியார் பல்கலைக் கழகம், பாரதிதாசன் பல்கலைக் கழகம், சென்னைப் பல்கலைக் கழகம், அழகப்பா பல்கலைக் கழகம், இலக்கியத்துறைப் பாடத்திட்டக்குழு உறுப்பினர்—தமிழ்ப் பல்கலைக் கழகம், வேறு துறை உறுப்பினர் - தமிழ்ப் பல்கலைக் கழகம், இந்திய மொழிகள் நிறுவனம், இலக்கியம், நாடகம், நாட்டுப்புறவியல். ஆர்வமுள்ள துறைகள்: இலக்கியம், மாந்தவியல், சமூகவியல், மொழியியல், வரலாறு மற்றும் நூல் பதிப்புத்துறை.

**20.** ஞா. விக்டர் இராசமாணிக்கம்: **5-4-1943.** திரு. ச. ஞானமாணிக்கம், திருமதி. சி. சின்னம்மாள் மகனார். முதுகலை நிலவியல்,

மராட்டிய மாநில மைய கடற்கரையின் கனிமங்களைத் தோண்டி எடுத்தல் குறித்த ஆய்வில் முனைவர் பட்டம்; சட்டக்கல்விமாணவர், பேராசிரியர்,தலைவர், தொழில் மற்றும் நில அறிவியல் துறை, அறிவியல் புலத் தலைவர், ஆட்சிக்குழு உறுப்பினர், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005. இல்லம்: நடுப்பட்டி, புதுப்பட்டி கிராமம், உசிலம் பட்டி வட்டம், மதுரை மாவட்டம்.

கண்டுபிடிப்புகள்:

1. முதன் முதலாக நமது நாட்டில் ஆழ்கடல் கனிம ஆய்வில் பட்டம் பெற்றுக் கடல் கனிமங்களைத் தோண்டி எடுப்பதற்கான கள ஆய்வை நவீன சாதனங்களைப் பயன்படுத்தி நிறைவேற்றியது.

2. ஆழ்கடலில் காணப்படும் மாங்கனீசு கனிம முடிச்சுகளை நமது நாட்டிற்குக் கொண்டு வந்ததோடன்றி மைய மாக்கடல் பகுதியிலிருந்து வெளிக் கொணர்வதற்கான முதல் அறிவியல் கப்பல் கள ஆய்வின்தலைவராகத் தொடர்ந்து 4முறை இருந்து நமதுநாட்டின் ஆழ்கடல் ஆய்வுத் திறமையை நிலை நாட்டியது.

3. கட்சு கடலிலுள்ள தர்சக் யலைக் குன்றைக் கண்டுபிடித்தது.

சிறப்புகள்: 87 ஆண்டுகளாக நிலவியல் துறையில் தமிழகம் பெற முடியாதிருந்த இளம் விஞ்ஞானி பட்டத்தைப் பெற்றது. செருமானிய அரசால் தேர்ந்தெடுக்கப்பட்டு இரண்டு ஆண்டுகள் கடல் கனிமங்களை கண்டுபிடிக்கும் ஆய்வு முறைகளில் பயிற்சி. ஆக்கன் தொழில் நுட்பப் பல்கலையில் வருகைப் பேராசிரியர்; மைய அறிவியல் மற்றும் தொழில் நுட்பப் பல்கலையில் வருகை இணை ஆய்வர். பன்னிரண்டிற்கும் மேற் பட்ட அறிவியல் கழகங்களின் செயற்குழு உறுப்பினர். வெளியீடுகள்: இரண்டு நூல்கள், 75 ஆய்வுக் கட்டுரைகள்.

21. ம. சா. அறிவுடைநம்பி: 6–3-1954. திரு. ச.சாம்பசிவன், திருமதி. சா. மனோன்மணி மகனார். இளம் அறிவியல் (கணிதம்), முதுகலை (தமிழ்), முனைவர். சிவஞானபாடியம், புத்திய உளவியலும் இலக்கியமும், மராத்தி, ஆவணப் பாதுகாப்பு ஆகியவற்றில் சான்றிதழ்கள். தஞ்சை மராட்டிய மன்னர் வளர்த்த நுண்கலைகள் தலைப்பில் முது முனைவர் ஆய்வேடு. விரிவுரையாளர், அரிய கையெழுத்துச் சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 613 005. மூன்று நூல்கள், ஐம்பது கட்டுரைகள். ஆர்வமுள்ள துறைகள்: சைவ சமயம், இலக்கியம், நுண்கலைகள், சுவடிப்பதிவு-பதிப்பு.

22. து. கங்காதரன்: 5-2-1951. திரு. துரைசாமி, திருமதி. மங்களம் மகனார் . இளங்கலை வரலாறு - தங்கப்பதக்க விருது, முது

கலை வரலாறு, எம்.ஃபில் ஆய்வு-சூரியனார் கோயில். விரிவுரையாளர், பழனியாண்டவர் கலைக் கல்லூரி, பழனி. இல்லம்: 12A/4 இந்திரா நகர், பழனி 624 601. ஆர்வம்: கோயிற்கலை ஆய்வு.

**23.** சு. நரேந்திரன்: 7-11-42. திரு. பழ. சுந்தரேசன், திருமதி. பத்மாசினி மகனார். எம்.பி.பி.எஸ் , எம். எஸ்., முனைவர் ஆய்வர். இரைப்பை, குடல் நோய் உதவி அறுவை மருத்துவர், தஞ்சை மருத்துவக் கல்லூரி மருத்துவ மனை, தஞ்சாவூர். இல்லம்: 623, கீழவீதி, தஞ்சாவூர் 613 001. வெளியீடுகள்: பொது அறுவை மருத்துவம் (தமிழக அரசின் முதற் பரிசு பெற்ற நூல்), மார்பக நோய்கள், உங்களுக்குத் தலைவலியா போன்ற ஆறு மருத்துவ நூல்கள், நூற்றுக்கும் மேற்பட்ட மருத்துவக் கட்டுரைகள் - தினமணி, தினகரன் தாமரை, நல்வழி, அறிக அறிவியல், விஞ்ஞானச் சுடர், கலைக் கதிர் போன்ற இதழ்களில். ஆறாண்டுகளாகத் திங்கள் தோறும் தஞ்சை மக்களுக்காகத் தமிழில் மருத்துவச் சொற்பொழிவு. ஆர்வம்: அறிவியல் தமிழ் பரப்பல், தமிழில் மருத்துவ நூல்கள்.

**24.** ந. அமர்ஜோதி: (ஜெ. என். அமர்ஜோதி) 12-1-1937. திரு. ஜெ. நடேசபிள்ளை, திருமதி. கமலம் மகனார். முதுநிலை மருத்துவ உயிர்வேதியியல். கல்லூரி ஆசிரியர், வேதியியல் துறை, அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி, முசிறி. இல்லம்: 2F, வைசியாள் தெரு, குளித்தலை. கண்டுபிடிப்பு: குளித்தலையில் நவகண்டச் சிற்பங்கள், நீலமேகப் பெருமாள் கோயில் கல்வெட்டுகள். ஆர்வம்: கோயிற்கலைகள், வரலாறு, வேதியியல், இலக்கியம்.

---

## குளக்காவல்

சோழர் காலக் கல்வெட்டுகளும், சோழர்க்குப் பிற்பட்ட கல்வெட்டுகளும் ஏரி வாரியம், ஆற்று வாரியம் போன்ற நீர்க்காவல் அமைப்புகளை வெளிப்படுத்தியுள்ளன. தலைவாய்ச் சான்றோரை அல்லூர் கல்வெட்டுகள் காட்டுகின்றன. கரைகளை வலிமைப்படுத்திய நிகழ்ச்சிகளும், கரைகள் காக்கப்பட்ட செய்திகளும் கல்வெட்டுகளில் உள்ளன. இந்த நீர்க்காவல் சங்கப் பழமையது என்பதை அகப்பாடலால் அறிய முடிந்தது.

குறிஞ்சி நிலத் தலைவி, தன்னைக் காவல் காக்கும் தாய் முற்றிலுமாய்த் தூங்குவதில்லை என்பதைத் தோழியிடம் சொல்வாளாய்த் தலைவனுக்குத் தெரியப்படுத்துகிறாள். தாயின் உறங்கா நோன்புக்கு உவமை காட்டுமிடத்தேதான் சங்க காலத்துக் குளக்காவலைத் தலைவி கோடிட்டுக் காட்டுகிறாள்.

''எறிதிரைத் திவலை தூஉஞ் சிறுகோட்டுப்
பெருங்குளக் காவலன் போல
அருங்கடி அன்னையும் துயில்மறந் தனளே'' (அகம். 252)

சிறிய கரையினையுடைய பெரிய குளத்தைக் காவல் செய்வானைப் போல, தாய் தூக்கத்தை மறந்தவள் ஆனாள்.

— வே. கல்பகம், இரா. கலைக்கோவன்.

## 35. அய்யம் தவிர்க

ஆவணம் முதல் இதழில் வெளியாகியுள்ள அபினிமங்கலம் கல்வெட்டு, கலிங்குக் கல்வெட்டு, திருவாசி கல்வெட்டுகள் குறித்து இராமநாதபுரத்தைச் சேர்ந்த நூலாசிரியர் முனைவர் எஸ்.எம். கமால் எழுப்பியுள்ள அய்யங்களுக்கு டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மைய கல்வெட்டாய்வர் செல்வி மு. நளினி விடையளித்துள்ளார்.

1. அபினிமங்கலம் கல்வெட்டு

அ. இக்கல்வெட்டின் 11ஆம் வரியில் 'கிரி தநஷ்குடி னத்திரியனவர்க' என்று வருகிறது. எங்கள் பகுதியில் 'கிரி தநஷ்குடி னத்திரியன்' என்ற பெயர் இருந்ததாகச் செய்தி இல்லை. ஒரு வேளை சிரீதரன் குடி அத்திரியர்' என்பது போல இருக்கலாம் என்பது என் ஊகம்.

* கல்வெட்டுப் பாடத்தில் 'கிரி தநஷ்குடி னத்திரியன்' என்றுதான் உள்ளது.

ஆ. வரி 18-19இல் 'நிஷ்சேபூ சலதருபாஷாண ஆஷ்செண ஆகாமி' என்றுள்ளது. நிஷ்சேபூ என்பது நிஷ்சேப என்றிருந்தால் உரியபொருள் தரும்.

* உண்மைதான். ஆனால் கல்வெட்டில் சேபூ என்றுதான் உள்ளது. 'சேப' என்று எடுத்துக் கொள்ளலாம்.

இ. வரி 54-55இல் 'பர்வதவநத்தினி அம்பாலை மேத' என்றுள்ளது. 'பர்வதவநத்தினி அம்பாள் ஸமேத'என்றதொடராக இருக்கவேண்டும்.

* 'அம்பாள் ஸமேத' என்றுதான் கல்வெட்டில் உள்ளது. இதழில் அச்சுப்பிழை நேர்ந்துள்ளது.

2. கலிங்குக் கல்வெட்டு

ஈ வரிகள் 3, 4, 5 ஆகியவை பிழையாகத் தோன்றுகின்றன. அச்சுப் பிழையா அல்லது கல்வெட்டின் தொடரே அப்படித்தானா?

* கல்வெட்டின் தொடர்களே அப்படித்தான் உள்ளன.

3. திருவாசிக் கல்வெட்டு

உ. இப்பகுதியின் இரண்டாம் கல்வெட்டின் தொடக்கத்தைக் கொண்டு விக்கிரம பாண்டியனா அல்லது பராக்கிரம பாண்டியனா என்ற அய்யம் எழுப்பப்பட்டுள்ளது. திருச்சிப் பகுதியில் மாலிக்காபூரின் படை யெடுப்பு

கி.பி. 1311லும், இரண்டாவது படையெடுப்பை நிகழ்த்திய குஸரா கானின் நிகழ்ச்சி கி.பி.1318 லும், மதுரை சுல்தானது கொப்பம் போர் கி.பி. 1342லும் நிகழ்ந்துள்ளன. கல்வெட்டில் குறிப்பிட்ட வரி. 2, 'தெங்கு துலுக்கன் வெட்டியது', இந்த மூன்று நிகழ்ச்சிகளில் ஒன்றின் பொழுது நிகழ்ந்திருக்க வேண்டும். கல்வெட்டு வரி 1 இல் உள்ள வாசகப்படி, இது பாண்டிய மன்னனது ஆட்சியாண்டு ஐந்து அல்லது அதற்கு முந்தைய ஆண்டு.

ஆனால் மதுரைத் தல வரலாறு, மற்றும் வரலாற்று நூல்களின்படி பாண்டிய சோழ மண்டலம் கி.பி. 1311 முதல் கி.பி. 1378 வரை துலுக் காணியமாக இருந்து வந்துள்ளது. மாறவர்மன் விக்கிரம பாண்டியன் ஆட்சியில் திருவாசி நிகழ்ச்சி நிகழ்ந்திருக்குமானால் அப்பொழுது கி.பி.1288 ஆதல் வேண்டும். அப்பொழுது வடக்கு இருந்து வந்த இசுலாமியரது அழிவுத் தாக்குதல் நடைபெறவில்லை. இதனை பராக் கிரம பாண்டியனது ஆட்சியாகக் கொண்டால், திருபுவனச் சக்கரவர்த்தி மாறவர்மன் குலசேகரன் காலம் கி பி. 1273 ஆதல் வேண்டும். கல் வெட்டு சுட்டும் நிகழ்ச்சிக்கு அப்பொழுது வரலாற்றில் ஆதாரம் இல்லையே. இதற்குரிய விளக்கம் கிடைக்குமானால் பயனுள்ளதாக இருக்கும்.

* திரு. என். சேதுராமன் தம்முடைய பாண்டியர் வரலாற்றில் கி.பி. 1319 இல் தமிழகத்தின் மீது படையெடுத்த குஸ்ருகானை சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் தோற்கடித்து விரட்டியதாக எழுதியுள்ளார் (பக். 169). இதைக் கொண்டு பார்க்கும்போது இக் கல்வெட்டிற்குரிய மன்னனை முதலாம் சடையவர்மன் பராக்கிரம பாண் டியனாகக் (கி.பி. 1315-1334) கொள்ளலாமெனத் தோன்றுகிறது.

## 36. அன்புள்ள உங்களுக்கு . . .

ஆவணம் முதல் இதழ் கிடைக்கப் பெற்றேன். பாதுகாத்து வைப்ப தற்குரிய அரிய கலைக் களஞ்சியம். புதிய கல்வெட்டுகள் பகுதி மிகுந்த பயனுடையது. இக்கல்வெட்டுகள் இருக்குமிடங்களைத் தெளிவாகக் கொடுத்துள்ளீர்கள். இது கள ஆய்வுகளுக்கு உதவும். ஒரு வேண்டு கோள். ஒன்றிரண்டு கல்வெட்டுகளையாவது, அவை எப்படி எழுதப் பட்டுள்ளனவோ அப்படியே அதே எழுத்தமைதியில், ஒளிப்படமெடுத்து பதிப்பித்தால் எழுத்துக்களின் வளர்ச்சி நிலைகளை அறியப் பேருதவி யாக இருக்கும்.

ஜெ. என். அமர்ஜோதி,
வேதியியல்துறை,
அறிஞர் அண்ணா அரசினர் கலைக் கல்லூரி, முசிறி.

ஆவணத்தால் நல்ல பல நன்மைகள் விளையும். அதில் அமைப்புகள் சில புத்தம் புதியன. செய்திகள் பூத்து மின்னுகின்றன. என் பாராட்டு. ஆவணம் வேர்ச் சொல்லும் பொருண்மையும், சொல்லாட்சியும் விளக்கற்குரியன. காந்தள் நல்லாய்வு. எந்த நிகழ்ச்சியையும் அகமாகவோ புறமாகவோ இருக்குமாறு விளக்கலாம். இருவகை பகுப்புகளே கொள்க.

வி. ப. கா. சுந்தரம்,
தமிழிசைக் கலைக்களஞ்சியத் தொகுப்பாளர்,
பாரதிதாசன் பல்கலைக் கழகம், திருச்சி 620 024.

ஆவணம் இதழ் சிறப்பான தகவல்களுடன் மிளிர்கிறது. திரு. சுப்பராயலு வழங்கியுள்ள தொகுப்புரை பக்கமும் ஆய்வாளர்களுக்குப் பயன்படும். அங்கும் இங்கும் பகுதி முதலில் தகவலாகவும், பின் வரும் இதழ்களில் கருத்தரங்கக் குறிப்புகளாகவும் வருமாறு செய்தால் வரலாற்றாய்வின் வளர்நிலைகளை அறிந்து கொள்ள உதவும்.கே.ஆர்.எஸ் மற்றும் தி.நா.சு. பற்றிய பக்கங்கள் பயனுடைத்து. போற்றுவோர் போற்றி வளர்வதே ஆய்வும் தொடர்ப்பணியும். கட்டுரையாளர்களைப் பற்றிய தகவல் தந்திருக்கலாம். தமிழகக் கல்லூரிகள், பல்கலைக் கழகங்களில் உள்ள வரலாற்றுப் பாடத்திட்டங்கள் அறிவியல் நோக்கில் அமையுமாறு மறு கட்டமைப்பு செய்வதின் தேவையை வலியுறுத்திக் கட்டுரைகள் வெளியிடலாம்.

முனைவர் இரா. பாலச்சந்திரன்
(கவிஞர் பாலா)
ஆங்கிலத்துறை, அரசர் கல்லூரி,
புதுக்கோட்டை.

ஆவணம் முதல்இதழை வரலாற்றுத்துறை நூலகத்தில் பார்த்தேன். தமிழக வரலாற்று ஆராய்ச்சியாளர்கட்குப் பெரிதும் பயன்படும் வகையில் ஆவணம் இதழ் அமைந்துள்ளது அறிந்து மிக்க மகிழ்ச்சி. முதல் இதழே மிகச் சிறப்பாக இருக்கிறது.

முனைவர் ந. அழகப்பன்
வரலாற்றுத்துறை,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர் - 608 002.

ஆவணத்தின் அமைப்பும் அடக்கமும் மன நிறைவு தருவதாக உள்ளன. புதிதாகப் படியெடுத்து ஆவணத்தில் வெளியிடும் கல்வெட்டுகள் மற்றும் செப்பேடுகளுக்குத் தொடர் எண்ணும், ஆண்டும் குறித்து வெளியிட்டால் பயனுள்ளதாக இருக்கும். பெருமைச் சுவடுகள், அய்யம் தவிர்க, யாவரும் கேளிர், அங்கும் இங்கும் பகுதிகள் கருத்து மிக்க பய

னுள்ள தலைப்புகள். ஆவணத்தின் தொடக்கம் நன்றாக அமைந்துள்ளது. இதழ் தோறும் இனிமை சேர்த்து வளர அகங்கனிந்த வாழ்த்துக்கள்.

முனைவர் எஸ். கமால்
செயலாளர்,
பாண்டித்துரைத் தேவர் தமிழ்ச்சங்கம்,
21, ஈசா பள்ளிவாசல் தெரு,
இராமநாதபுரம்-623 501.

ஆவணம் இதழ் பார்த்தேன். மிகத் தேவையான துறைகளின் சார்பில் மிகச் சரியான வேளையில் இந்த ஆய்விதழை வெளிக் கொணர்ந்திருப்பது பாராட்டற்குரியது. பெருமைச் சுவடுகள் நடந்த பாதைகளை நினைக்கவும், அய்யம் தவிர்க நடக்க வேண்டிய பாதைகளைச் சீர் செய்யவும் உதவும். கட்டுரைகளைக் கூட்டலாம்.

மா. ரா. அரசு
தமிழ்த்துறை,
கந்தசாமி கல்லூரி, அண்ணா நகர்,
சென்னை-600 040.

---

## 37. அங்கும் இங்கும்

இப்பகுதியில் தமிழ்நாடு, இந்தியா மற்றும் வெளிநாடுகளில் நடைபெறவுள்ள கோயிற்கலை, கல்வெட்டியல், தொல்லியல், வரலாறு தொடர்பான கருத்தரங்குகள், மாநாடுகள், பணிப்பட்டறைகள், ஆய்வரங்குகள் பற்றிய செய்திகளை ஆவணம் தொடர்ந்து வெளியிடவுள்ளது. நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்யும் அறிஞர்கள் அருள்கூர்ந்து ஆவணத்துடன் தொடர்பு கொள்க. தேசிய அல்லது பன்னாட்டுக் கருத்தரங்குகள் பற்றிய தகவல்களைப் பெறுவோர், அன்பு கூர்ந்து ஆவணத்திற்கு அவற்றைத் தெரிவித்தருள்க.

1. பேரா. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் நூற்றாண்டுக் கருத்தரங்கம், சென்னை, ஆகஸ்டு 1992.
2. இந்தியக் கல்வெட்டியல் கழகத்தின் மாநாடு, பாரதிதாசன் பல்கலைக் கழகம், திருச்சி, பிப்ருவரி 1993. தொடர்பு முகவரி: முனைவர் ந. இராசேந்திரன், எதிர்காலவியல்துறை, பாரதிதாசன் பல்கலைக் கழகம், திருச்சி-620 024.
3. கோயிற்கலைக் கருத்தரங்கம், டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சி, அக்டோபர் 1992. தொடர்பு முகவரி: மு. நளினி, கல்வெட்டாய்வாளர், டாக்டர். மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், 48, புத்தூர் நெடுஞ்சாலை, திருச்சி-620 017.

---

## 38. கட்டுரையாளர்கள்

1. அர. அகிலா

2. அ. அருணா
முனைவர் ஆய்வர்கள்
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்,
48, புத்தூர் நெடுஞ்சாலை, திருச்சி 620 017.

3. ம. சா. அறிவுடைநம்பி
விரிவுரையாளர், அரிய கையெழுத்துச் சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் 613 005.

4. சு. இராசகோபால்
மெய்யப்பா இல்லம்
3/295, சித்தி விநாயகர் கோயில் தெரு,
தாசில்தார் நகர், மதுரை 625 020.

5. சு. இராசவேலு
முதுநிலை கல்வெட்டு உதவியாளர்
இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின்
கல்வெட்டுப் பிரிவு சென்னை கிளை (தெற்கு வட்டம்)
செயிண்ட் ஜார்ஜ் கோட்டை, சென்னை 600 009.

6. செ. இராசு
இணைப் பேராசிரியர், கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் 613 005.

7. எஸ். இராமச்சந்திரன்
காப்பாட்சியர் மராட்டியர் அரண்மனை அகழ்வைப்பகம்
தொல்பொருள் ஆய்வுத்துறை, தஞ்சாவூர் 613 009.

8. ஸ்தபதி வே. இராமன்
தொல்பொருள் ஆய்வுத்துறை
14D, ஹனீபா குடியிருப்பு, திருச்சி 620 020.

9. அர. இராசேந்திர தேவன்
26, பாய்க்காரத்தெரு,
உறையூர், திருச்சி 620 003.

10. கரு. இராசேந்திரன்
ஆசிரியர், மேலப் பனையூர் அஞ்சல்,
புதுக்கோட்டை 622 420.

11. சி. இலட்சுமணன்
தொழில் நுட்ப உதவியாளர், அரிய கையெழுத்துச் சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் 613 005.

12. இரா. ப. கருணானந்தம்
காப்பாட்சியர், அகழ்வைப்பகம்
17, சத்தியமூர்த்தி சாலை, ராம்நகர்,
கோயம்புத்தூர் 641 009.

13. வே. கல்பகம்
முனைவர் ஆய்வர்

14. இரா. கலைக்கோவன்
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்
48, புத்தூர் நெடுஞ்சாலை, திருச்சி 620 017.

15. பருகூர் அ. கிருட்டிணன்
விரிவுரையாளர், கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் 613 005

16. ச. கிருஷ்ணமூர்த்தி
தொல்பொருள் அலுவலர், தொல்பொருள் ஆய்வுத்துறை
176, ஓ. எஸ். தீன் பில்டிங்,
மேல ரத வீதி, சிதம்பரம் 608 001.

17. தே. கோபாலன்
தொல்பொருள் அலுவலர், தொல்பொருள் ஆய்வுத்துறை
11, செந்தில் நகர், பாளையங்கோட்டை 627 002.
நெல்லை கட்டபொம்மன் மாவட்டம்.

18. மு. ம. கோபாலன்
பட்டயக் கல்வி மாணவர்
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்
48, புத்தூர் நெடுஞ்சாலை, திருச்சி 620 017.

19. கொடுமுடி ச. சண்முகன்
செயற் பொறியாளர்
ஏரி நவீனக் கோட்டம், பொதுப் பணித்துறை
இராசாசி சாலை, திண்டிவனம் 604 001.

20. அ. ம. சத்தியமூர்த்தி
தமிழ் முதுநிலை விரிவுரையாளர்
மன்னர் சரபோசி அரசு கல்லூரி,
தஞ்சாவூர் 613 005.

21. சொ. சாந்தலிங்கம்
தொல்பொருள் அலுவலர், தொல்பொருள் ஆய்வுத்துறை
திருமலை நாயக்கர் அரண்மனை, மதுரை 625 001.

22. சுந்தரேசன்
நிர்வாக அதிகாரி, நீலிவனநாதசுவாமி திருக்கோயில்
திருப்பைஞ்ஞீலி, திருச்சி மாவட்டம்.

23. பா. சுப்ரமணியன்
தலைவர், அரிய கையெழுத்துச் சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் 613 005.

24. சு. சுவாமிநாதன்,
முதுநிலை கல்வெட்டு உதவியாளர்
கல்வெட்டுத்துறை இயக்குநர் அலுவலகம்
பழைய பல்கலைக் கழகக் கட்டடம்,
மைசூர் 570 005.

25. இல தியாகராசன்
வரலாற்றுத்துறை, அரசு கலைக் கல்லூரி
அரியலூர், திருச்சி மாவட்டம்.

26. மு. நளினி
கல்வெட்டாய்வாளர்
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்
48, புத்தூர் நெடுஞ்சாலை, திருச்சி 620 017.

27. ஆ. பொன்மணி
சங்கிலிக் கோனார் சந்து,
ஆண்டார் தெரு, திருச்சி 620 002.

28. செ. போசு
கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை
திருமலை நாயக்கர் அரண்மனை, மதுரை 625 001.

29. மங்கை ராகவன்
1, பி.எம்.எஸ்.பில்டிங்,
கே.கே. ரோடு, விழுப்புரம் 605 002.

30. ச. முத்துக்குமரன்
துணை வேந்தர், பாரதிதாசன் பல்கலைக் கழகம்
பல்கலைப் பேரூர், திருச்சி 620 024.

31. இரா. லலிதாம்பாள்
பட்டயக்கல்வி மாணவர்
டாக்டர். மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்
48, புத்தூர் நெடுஞ்சாலை, திருச்சி 620 017.

32. மு. வீராசாமி
கண் மருத்துவ உதவியாளர், ஆரம்ப சுகாதார நிலையம்
புதூர் உத்தமனூர் 621 712, திருச்சி மாவட்டம்.

33. வெ. வேதாசலம்
காப்பாட்சியர், தொல்பொருள் ஆய்வுத்துறை,
திருமலை நாயக்கர் அரண்மனை, மதுரை 625 001.

34. கி. ஸ்ரீதரன்
பதிவு அலுவலர், தொல்பொருள் ஆய்வுத்துறை
14D, ஹனீபா குடியிருப்பு, திருச்சி 620 020.

35. பா. ஜெயக்குமார்
முதுநிலை ஆய்வாளர், கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் 613 005.

